முதல் பதிப்பு, அக்டோபர் மீ 1942

இப்புத்தகத்தை
ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகள்
ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்
பாதகமலங்களில் பக்தி ஶ்ரத்தா விநய புரஸ்கிருதமாய் ஸமர்ப்பிக்கிறேன்.

தே. பா.

PRINTED AT THE LIBERTY PRESS, G.T., MADRAS.



ஸ்ரீ ஜகத்குரு காஞ்சீ காமகோடி பீடாதிபதிகள்
ஸ்ரீ சந்த்ர சேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்

॥ श्रीः ॥

॥ श्रीचन्द्रमौळीश्वर ॥

मुद्रा

स्वस्तिश्रीमदखिलभूमण्डलालंकारत्रयस्त्रिंशत्कोटिदेवतासेवित - श्रीकामाक्षी-देवीसनाथ - श्रीमदेकाम्रनाथ - श्रीमहादेवीसनाथ - श्रीहस्तिगिरिनाथ - साक्षात्कार-परमाधिष्ठानसत्यव्रतनामांकित - काञ्चीदिव्यक्षेत्रे शारदामठसुस्थितानाम्, अतुलित-सुधारसमाधुर्यकमलासनकामिनीधम्मिल्लसम्फुल्लमल्लिकामालिकानिष्यन्दमकरन्दझरी - सौवस्तिकवाङ्निगुम्भविजृंभणानन्दतुन्दिलितमनीषिमण्डलानाम्, अनवरताद्वैतविद्या-विनोदरसिकानाम्, निरन्तरालंकृतीकृतशान्तिदान्तिभूम्नाम्, सकलभुवनचक्रप्रतिष्ठापक-श्रीचक्रप्रतिष्ठा - विख्यातयशोऽलंकृतानाम्, निखिलपाषण्डषण्डकण्टकोद्घाटनेन विशदीकृतवेदवेदान्तमार्गषण्मतप्रतिष्ठापकाचार्याणाम्, श्रीमत्परमहंसपरिव्राजकाचार्य-वर्य - श्रीजगद्गुरु - श्रीमच्छंकरभगवत्पादाचार्याणाम्, अधिष्ठाने सिंहासनाभिषिक्त-श्रीमन्महादेवेन्द्रसरस्वतीसंयमीन्द्राणाम्, अन्तेवासिवर्य-श्रीमच्चन्द्रशेखरेन्द्रसरस्वती-श्रीपादैः अस्मदत्यन्तप्रियशिष्य-श्रीमध्यार्जुन (तिरुविडैमरुदूर्)-क्षेत्राभिजनवाजपेयि-वंशोत्पन्न - बालसुब्रह्मण्यार्य - पेरुङ्गुळं - ग्रामाभिजन - यज्ञनारायणशर्मणोः सर्वाभीष्ट-सिद्ध्यै क्रियते नारायणस्मृतिः ॥

भगवतः श्रीविष्णोर्दिव्यसहस्रनामस्तोत्रमहिमा श्रीमदाचार्यभगवत्पाद-भाष्यार्थानुचिन्तनेन विशदीभवति । भगवन्महिमज्ञानेन स्तोत्रपारायणे श्रद्धया प्रवृत्तिर्भवेत् । स्तुतिकीर्तनेन 'लोकाध्यक्षं स्तुवन्नित्यं सर्वदुःखातिगो भवेत्' इति

वचनात् सर्वदुःखविनाशनम्, 'धर्मार्थी प्राप्नुयाद्धर्मम्', 'वेदान्तगो ब्राह्मणः स्यात्' इत्यादिवचनैः पुमर्थसिद्धिः इत्याद्यनन्तफलप्राप्तिश्चेति निर्विशङ्कोऽयं सिद्धान्तः। 'एष मे सर्वधर्माणां धर्माधिकतमो मतः' इत्यनेनास्य इतरधर्मापेक्षया उत्कृष्टत्वं निगद्यते। तथा च श्रीमदाचार्यभाष्ये 'अस्य स्तुतिलक्षणस्यार्चनस्य आधिक्ये किं कारणम्? उच्यते। हिंसादिपुरुषान्तर-द्रव्यान्तर-देश-कालादिनियमानपेक्षत्वं आधिक्ये कारणम्' इति। अनेन ऋत्विगादिजनहविर्द्रव्यादिसम्पादन - विध्युक्तदेश-कालप्राप्त्यादिखेदापादक - यागादीतरसर्वधर्मापेक्षयात्यन्तं सौलभ्यमत्र दृश्यत इत्यस्याधिक्यं निर्णीतं भवति। सर्वैरप्यास्तिकैर्यद्ययं धर्मोऽनुष्ठीयते उक्तफलानां सिद्धिः सम्पद्यते। जनानामेतदनुष्ठानप्रवर्तनाय श्रीमदाचार्यभाष्यार्थज्ञानोत्पादनं परमोपायः। अक्लेशेन तादृशज्ञानसंपादनाय देशभाषामयभाष्यार्थरचनं प्रकाशनं च अवश्यकर्तव्ये भवतः। इत्यनेनाशयेन दीनलोकसेवैकलोलुपाभ्यां युवाभ्यां श्रीमदाचार्यभगवत्पादीय-विष्णुसहस्रनामभाष्यस्य विरचितो द्राविडभाषामयोऽनुवादोऽस्मत्साक्षात्कृतो न चिरात् प्रकाश्येतेति विज्ञाय सुतरां सन्तुष्यामः। एवं केवललोकक्षेमार्थ एव प्रवृत्तौ युवां युष्मत्प्रवृत्तिफलायितपूर्वोक्तधर्मानुष्ठानतत्परास्सज्जनाश्च श्रीचन्द्रमौळीश्वरपरिपूर्णकृपापात्रीभूताः प्राप्नुवन्तु निखिलं श्रेय इत्याशास्महे॥

मकाम् नत्तम्।<br>
श्रीशा० शके १८६४<br>
चित्रभानु सं० श्रावण शु ४

नारायणस्मृतिः॥

ஸ்ரீ : ||

|| ஸ்ரீ சந்த்ரமௌளீஸ்வர ||

முத்ரை

ஸ்வஸ்தி ஸ்ரீ அகில பூமண்டலங்களுக்கும் அலங்காரமாய், முப்பத்து முக்கோடி தேவதைகளாலும் ஸேவிக்கப் பெற்று, ஸ்ரீ காமாக்ஷீ தேவியோடு கூடிய ஸ்ரீமத் ஏகாம்ர நாதருடையவும் ஸ்ரீமஹாதேவியோடு கூடிய ஸ்ரீஹஸ்திகிரி நாதருடையவும் ஸான்னித்யத்தோடு கூடிய க்ஷேத்ரமான ஸத்யவ்ரதம் என்று பெயர் கொண்ட காஞ்சீ திவ்ய க்ஷேத்ரத்திலே சாரதா மடத்தில் வீற்றிருப்பவர்களாகவும், ஒப்புமையில்லாத அமிர்தரஸ மாதுர்யத்தை யுடையதாய் கமலாஸனருடைய தேவியின் திருமுடியிலே அலர்ந்த மல்லிகை மாலையினின்று பெருகும் மகரந்த அருவியோடு கூடின சொல்மாலைகளாலே விளங்குகின்ற ஆனந்தத்தால் நிறைந்த புத்திமான்களால் சூழப்பெற்றவர்களாகவும், அனவரதம் அத்வைத வித்யையிலேயே பொழுது போக்கி இன்புறுவோர்களாகவும், இடைவிடாது அலங்கரித்துக்கொண்டிருக்கும் சமதமங்களால் பெரியோர்களாய் விளங்குவோர்களாகவும், எல்லா புவன சக்ரங்களுக்கும் ப்ரதிஷ்டையளிப்பதான ஸ்ரீ சக்ர ப்ரதிஷ்டாபனத்தால் ப்ரஸித்தமான புகழால் அலங்கரிக்கப் பெற்றவர்களாகவும், பாஷண்ட ஸமூஹங்களாகிய ஸகல கண்டகங்களையும் எடுத்தெறிவதாலே செம்மையாக்கப்பட்டவையான வேத வேதாந்த மார்க்கங்களாகிய ஷண்மதங்களையும் ப்ரதிஷ்டித்த ஆசார்யர்களாகவும் விளங்கும் ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்யர்களான ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீமத் ஶங்கர பகவத்பதாசார்யர்களின் அதிஷ்டானத்திலே ஸிம்ஹாஸனத்தில் அபிஷிக்தர்களான ஸ்ரீமத் மஹாதேவேந்த்ர ஸரஸ்வதீ ஸம்ய

மீந்த்ரர்களுடைய அந்தேவாஸிவர்யர்களான ஸ்ரீமத் சந்த்ர சேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ பாதர்களால்,

எங்களுக்கு அத்யந்த ப்ரியசிஷ்யர்களான ஸ்ரீமத்யார்ஜுன க்ஷேத்ரத்து (திருவிடைமருதூர்) அபிஜனரான வாஜபேயி வம்சத்திற் பிறந்த பாலஸுப்ரஹ்மண்ய அய்யர், பெருங்குளம் கிராமத்து அபிஜனரான யஜ்ஞநாராயண ஶர்மா இவ்விருவர் களுக்கும் ஸர்வ அபீஷ்டங்களும் ஸித்திப்பதற்காக நாராயண ஸ்மரணம் செய்யப்படுகின்றது.

ஸ்ரீ விஷ்ணு பகவானைப் பற்றிய திவ்ய ஸஹஸ்ர நாம ஸ்தோத்ரத்தின் மஹிமையானது ஸ்ரீமத் ஆசார்யர்களான பகவத் பாதர்கள் அருளிய பாஷ்யத்தின் பொருளைத் தொடர்ந்து சிந்திப்பதாலே நன்கு விளங்குகின்றது. பகவானுடைய மஹிமையை அறிந்து கொள்வதாலே, ஸ்தோத்ரத்தைப் பாரா யணஞ் செய்வதிலே சிரத்தையோடு ப்ரவ்ருத்தி செய்யப்படு கின்றது. ஸ்தோத்ரத்தைப் படனஞ் செய்வதால், "லோகாத் யக்ஷம் ஸ்துவன் நித்யம் ஸர்வது:காதிகோ பவேத்" என்னும் வாக்கியப்படி, ஸர்வ துக்க விநாசமும், "தர்மார்(த்)தீ ப்ராப்னு யாத் தர்மம்", "வேதாந்தகோ ப்ராஹ்மண: ஸ்யாத்" என்பவை முதலான வாக்கியங்களின்படி, புருஷார்த்த ஸித்தி முதலிய எல்லையற்ற பலன்களைப் பெறுவதும் கைகூடுவன என்னும் இந்த ஸித்தாந்தம் ஸந்தேஹத்திற்கு இடமின்றி அமைந்தது. "ஏஷ மே ஸர்வதர்மாணும் தர்மோ'திகதமோ மத:" என்னும் இந்த வாக்கியத்தின்படி, வேறு தர்மங்களோடு ஒப்பிடும்போது, இதன் சிறப்பு நன்கு விளங்குகின்றது; அவ்வாறே, "ஸ்தோத்ர ரூபமான இந்த பூஜா விதியின் சிறப்பிற்குக் காரணம் என்ன என்றால், (இங்கு) சொல்லப்படும்: ஹிம்ஸை செய்தல் முதலிய வைகளும், வேறு மனிதர், வேறு பொருள், இடம் காலம் முதலி யவற்றைப் பற்றிய நியமங்களும் இதற்குத்தேவையில்லை என்பது சிறப்பிற்குக் காரணம்" என்று ஸ்ரீமத் ஆசார்யர்கள் பாஷ்யத்தில்

அருளிய வாக்கியப்படி, 'ருத்விக் முதலிய ஜனங்கள், ஹவிஸுக்குரிய பொருள் முதலியவற்றைச் சேகரித்தல், விதிகளிலே கூறப்பட்ட இடத்தையும் காலத்தையும் அடைதல் முதலிய ஆவசியகங்களால் துன்பங்களை விளைவிக்கின்றவையான யாகம் முதலிய ஏனைய தர்மங்களைக் காட்டிலும் மிகவும் ஸுலபமாக அனுஷ்டிக்கக் கூடிய தன்மை இதிலே காணப்படுகின்றது' என்பதால் இதன் சிறப்பு நிர்ணயிக்கப் பெற்றது. "எல்லா ஆஸ்திகர்களாலும் இந்த தர்மமானது அனுஷ்டிக்கப் பெற்றால், அவர்கள் (முன்னே) சொல்லப் பெற்ற பலன்களைப் பெறுதல் கூடும். அதை அனுஷ்டிப்பதிலே ஜனங்கள் ப்ரவ்ருத்தி செய்வதற்கு ஸ்ரீமத் ஆசார்யர்கள் அருளிய பாஷ்யத்தின் பொருளை அறிந்து கொள்வதே மிகச் சிறந்த உபாயமாகும். சிரமமின்றி அத்தகைய ஞானத்தைப் பெறுவதற்கு தேச பாஷையிலே பாஷ்யத்தின் பொருளை அமைத்து வெளியிடுதல் அவசியம் செய்யவேண்டிய கார்யம்" என்ற இந்த எண்ணத்தை மனதிற் கொண்டு தீனஜனங்களுக்குத் தொண்டு புரிவதிலேயே ஆவலுடையவர்களான உங்கள் இருவராலும், ஸ்ரீமத் ஆசார்யர்களான பகவத் பாதர்கள் அருளிய விஷ்ணு ஸஹஸ்ர நாம பாஷ்யத்தைத் தமிழ்மொழியிலே அமைக்கப்பெற்றதும் எங்களால் பார்வையிடப் பெற்றதுமான அனுவாதம் அதிசீக்கிரத்திலே வெளி வருகின்றது என்று அறிந்து மிகவும் ஸந்தோஷப்படுகின்றோம். இவ்வாறு கேவலம் லோக க்ஷேமத்தின் பொருட்டு ப்ரவ்ருத்தி செய்யும் நீங்கள் இருவரும், உங்கள் ப்ரவ்ருத்தியின் பயனாக மேற்கூறிய தர்மத்தை அனுஷ்டிப்பதிலே முழுமனதுடையவர்களான ஸஜ்ஜனங்களும் ஸ்ரீ சந்த்ர மௌலீஸ்வரருடைய பரிபூர்ண க்ருபைக்குப் பாத்திரர்களாகி ஸகல ஶ்ரேயஸ்களையும் பெறுவீர்களாக என்று ஆசீர்வதிக்கின்றோம்.

மகாம் நத்தம். ஸ்ரீ ஶா. ஶகம். 1864
சித்ரபானு ஸம். ஶ்ராவண ஶுத்த சதுர்த்தி } நாராயண ஸ்ம்ருதி :||



सच्चिदानन्दरूपाय कृष्णायाक्लिष्टकारिणे ।
नमो वेदान्तवेद्याय गुरवे बुद्धिसाक्षिणे ॥

# FOREWORD

BY

*Sri Mahamahopadhyaya Vidyavacaspati*
*Darsanakalanidhi Kulapati*

PROFESSOR S. KUPPUSWAMI SASTRI, M.A., I.E.S., (*Retired*).

ओं नमो भगवते वासुदेवाय ॥

शृण्वन् सुभद्राणि रथाङ्गपाणेर्जन्मानि कर्माणि च यानि लोके ।
गीतानि नामानि तदर्थकानि गायन्विलज्जो विचरेदसङ्गः ॥

श्रीभागवते, ११ स्क. २ अ. ३९ श्लो.

भक्तिः परेशानुभवो विरक्तिरन्यत्र चैष त्रिक एककालः ।
प्रपद्यमानस्य यथाश्नतः स्युस्तुष्टिः पुष्टिः क्षुदपायोऽनुघासम् ॥

श्रीभागवते ११ स्क. २ अ. ४२ श्लो.

इत्यच्युताङ्घ्रिं भजतोऽनुवृत्त्या भक्तिर्विरक्तिर्भगवत्प्रबोधः ।
भवन्ति वै भागवतस्य राजंस्ततः परां शान्तिमुपैति साक्षात् ॥

श्रीभागवते, ११ स्क. २ अ. ४३ श्लो.

श्रीविष्णुसहस्रनामस्तोत्रम्! After all, a mere string of one thousand names! By reciting them, can any intelligent person gain any immediate advantage, any advantage which can be definitely ascertained and maintained to be the effect of such recitation? Thus a rationalistic mind would be disposed to interrogate, when it is invited to apply itself to the perusal of this publication. Even to such sceptical interrogations of

a rationalist, a suitable answer is furnished in the second and third of the three verses quoted above from the second chapter of the eleventh *skandha* of *Sri Bhagavata.* These verses record, for the benefit of mankind, the value of the devotional discipline which a devout worshipper goes through in the course of a worshipful repetition and recitation of the same name and different names of the Supreme Lord. The devotional discipline resulting from नामकीर्तन consists in the simultaneous effectuation of three precious results *viz., blissful love towards the Supreme Lord, realization of His nature and detachment from all other things.* It is a matter of common experience that every morsel of food, when eating, produces three results simultaneously—a pleasant sensation, nutrition, and appeasement of hunger; a similar process is experienced by a *bhakta*, when the Lord's name is repeated. It is the firm conviction of *Sri Sankarabhagavatpada* and his followers that this devotional discipline is of very high value in reaching the final goal of advaitic thought—the realization of *Brahman* as the only reality and of the identity of *Jiva* and *Brahman.* It is, again, this conviction that prompted *Sri Bhagavatpada* to write a *bhasya* on the *Visnu-sahasranama. Sri Sankara's Sahasranama-bhasya* is the earliest systematic exposition of *Visnu-sahasranama*; and no intelligent reader is likely to miss in this *bhasya* the synthesis and universality characteristic of *Sri Sankara's* conception of the advaitic scheme of thought and life.

When studying the *Visnu sahasranama*, with *Sri Sankara's bhasya*, it would be useful to remember that Indian culture believes, as averred by *Sri Sankara* and other Acaryas, that all the significative units of a language denote ultimately the Supreme Lord. The mystic etymology—false as it may be from the standpoint of modern linguistics—which connects the word *namah* with the effacement of *ahamkara*, as indicated by the negative particle *na* and the pronominal root *ma*, is significant and helpful in appreciating the value of the devotional discipline for which the *Visnu-sahasranama* and other *sahasranamas* are intended. If all the accomplished acts and established facts in the world represent,

as a distinguished modernist observes, many a disguised imperative, it would not be far-fetched to suggest that, from the standpoint of Indian culture, names like विश्व in the *Visnu-sahasranama* are expected, as *Sri Sankara* hints, to be understood to imply imperatives of the type of " सर्वं खल्विदं ब्रह्म तज्जलानिति शान्त उपासीत " to the worshipper and that these names may be viewed also as intended to serve as so many reminders to the Supreme Lord of His divine pledge in the *Gita* :—

" अनन्याश्चिन्तयन्तो मां ये जनाः पर्युपासते ।
तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ॥"

A poetic mind often revels in its own beautiful workings through the help of association. An eminent poet comes to have a special partiality for the *cataka* bird; for it reminds him of clouds, which, in their turn, remind him of the *Supreme Brahman*, called *Krsna*. Ponder upon this verse here :

"सन्त्येवास्मिन् जगति बहवः पक्षिणो रम्यरूपा-
स्तेषां मध्ये मम तु महती वासना चातकेषु ।
यैरध्यक्षैरथ निजसखं नीरदं स्मारयद्भिः
स्मृत्यारूढं भवति किमपि ब्रह्म कृष्णाभिधानम् ॥"

*Pandita Jagannatha.*

Many scholars know well that *Sri Sankara* is the greatest poet of the *Supreme Brahman*—निर्गुणब्रह्म महाकवि : and the best illustration of this observation can be easily found in the superb prose-poetry of *Sri Sankara's Brahma-sutra-bhasya.* Often, we find *Sri Sankara* climbing down from the highest metaphysical peak of *Nirguna Brahman*, to enjoy the delight of playing the role of a great *Bhakta*, through his poetic out-pourings of devotion; and in this mood, *Sri Sankara* might well be imagined to have written his *Bhasya* on the *Visnu-sahasranama.* Wherever he does so, he may be imagined to have been prompted by the same spirit which influenced the Supreme Lord to incarnate Himself in human form as *Sri Rama* or *Sri Krsna*—the same desire,

perhaps, to perfect the wholeness of His Being and establish His title to the rank of *Purusottama*.

Considerations like these would be helpful in a due appreciation of *Visnu-sahasranama* and *Sri Sankara's bhasya* thereon. In the whole range of Sahasranama literature in Sanskrit, the *Visnu-sahasranama*, with *Sri Sankara's bhasya*, may be said rightly to occupy the highest rank for its universal religious appeal both to scholars and laymen, to the classes and the masses, in India. Sri V. Narayanan, M.A., M.L., should be congratulated on his having been able to produce, for the first time, a complete, readable and lucid rendering in Tamil of *Sri Sankara's bhasya* on the *Visnu-sahasranama*. How well this talented translator has accomplished his work can be easily seen by a reference to certain typical parts of the rendering, as, for instance, that contained in pages 21 to 31 in the publication now placed before the Tamil world by Sri D. Balasubrahmanya Ayyar of Messrs. B. G. Paul and Company, Madras. It is difficult to apportion duly the credit for bringing out this good publication between the talented translator and the enterprising and pious publisher. All that may be said here is that they richly deserve the gratitude and commendation of the Tamil world, the former for his meritorious performance as translator and the latter as publisher of good and handy editions of works of everlasting devotional appeal—like the *Muka-pancasati* brought out, last year, and the *Visnusahasranama-bhasya*, this year. These publications have deservedly secured the blessings of the living representative of *Sri Sankara*—His Holiness Sri Sankaracarya of the *Kamakoti-pitha*.

Ganapati Agraharam
*Via* Ayyampet, S.I.Ry.,
Tanjore District,
4—10—'42.

S. KUPPUSWAMI SASTRI.

हरिः ओं ॥

श्रीगुरुभ्यो नमः ॥

नारायणं पद्मभुवं वसिष्ठं शक्तिं च तत्पुत्रपराशरं च ।
व्यासं शुकं गौडपदं महान्तं गोविन्दयोगीन्द्रमथास्य शिष्यम् ॥
श्रीशङ्कराचार्यमथास्य पद्मपादं च हस्तामलकं च शिष्यम् ।
तं त्रोटकं वार्तिककारमन्यानस्मद्गुरून्सन्ततमानतोऽस्मि ॥

ஸ்ரீமந் நாராயணரையும் பிரஹ்மாவையும் வஸிஷ்டரையும் ஶக்தி யென்பவரையும் அவருடைய புத்திரரான பராஶரரையும் வ்யாஸரையும் ஶுகரையும் கௌடபாதர் என்னும் மஹானையும் கோவிந்த யோகீந்த்ரரையும் அவருக்கு ஸிஷ்யராகிய ஸ்ரீ ஶங்கரா சார்யரையும், பிறகு, அவருடைய ஸிஷ்யராகிய பத்மபாதர், ஹஸ்தாமலகர், த்ரோடகர், வார்த்திகம் இயற்றிய ஸுரேஶ்வரர் ஆகியவர்களையும் நம்முடைய குரு மூர்த்திகளாக விளங்கும் ஏனையோர்களையும் எப்பொழுதும் வணங்கிய வண்ணமா யிருக்கிறேன்.

श्रुतिस्मृतिपुराणानामालयं करुणालयम् ।
नमामि भगवत्पादशङ्करं लोकशङ्करम् ॥

ஶ்ருதி, ஸ்ம்ருதி, புராணம் இவற்றிற்கு உறைவிடமாகவும் கருணையங்கடலாகவும் உலகங்களுக்கு நன்மையே செய்யும் ஶங்கர பகவத்பாதர்களை வணங்குகிறேன்.

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் மஹாபாரதத்தில் ஆநுஶாஸனிக பர்வத்தில் உள்ளது; ஸ்ரீபீஷ்மர் யுதிஷ்டிரருக்கு உபதேசித்தது; 142 சுலோகங்களைக் கொண்டது; தொடக்கத் தில் 13 சுலோகங்கள் முன்னுரையாக அமைந்தன; இறுதியில்

22 சுலோகங்கள் பல சுருதியாக உள்ளன ; 107 சுலோகங்களிலே பகவானுடைய ஆயிரம் பெயர்களும் சொல்லப்படுகின்றன. இந்த 142 சுலோகங்களுக்கும் ஸ்ரீ ஶங்கர பகவத்பாதர்கள் பாஷ்யம் செய்திருக்கிறார்கள். பாஷ்யத்தின் முன்னுரையிலே, அத்வைத உண்மைகளை, ஶ்ருதி ஸ்ம்ருதி புராண வசனங்களைக் கொண்டே நன்றாக விளக்கியுள்ளார்கள். பெயர்களுக்கு உரை வகுக்கும்போதும், ஶ்ருதி ஸ்ம்ருதி புராணங்களையும் வியாகரண நியாய சாஸ்திரங்களையுங் கொண்டே பொருள் கூறுகிறார்கள். ஸ்ரீ ஆசார்யர்கள் அனுக்ரஹித்த பாஷ்யம் அத்வைத உண்மைகளை மனதிலே நன்கு பதியச் செய்வதாயும், ஸகுணப் பிரும்மோபாஸனைக்குரிய பக்தியைப் பெருக்குவதாயும் அமைந்து விளங்குகின்றது.

மஹாபாரதம் முழுவதற்கும் வியாக்கியானஞ் செய்த ஸ்ரீ நீலகண்டர், ஶங்கர பகவத் பாதர்களையும் ஸ்ரீதரர் முதலிய ஸத்குரு மூர்த்திகளையும் வணங்கி, ஸ்ரீ கீதைக்கு ஸம்ப்ரதாயத்தை அனுஸரித்து வியாக்கியானஞ் செய்திருக்கிறார்கள். அவர்களே ஸ்ரீபகவத் பாதர்களுடைய ஸ்தோத்ர பாஷ்யத்தைப் பார்த்து, பிரத்யேகமாக ஓர் உரை எழுதாமல், பின் வருமாறு கூறியுள்ளார்கள் :

**विश्वं विष्णुरित्यतःप्राक्तनोऽयं ग्रन्थः स्पष्टार्थः । नामपदानामवयवार्थस्तु श्रीशङ्कराचार्यभगवत्पादीयभाष्यादेवावगन्तव्यः ॥**

'விஶ்வம் விஷ்ணு:' என்பதற்கு முன்புள்ளதான பகுதி, தெளிவான பொருளையுடையது. பெயர்களாக வரும் பதங்களைப் பிரித்து அறிதற்குரிய அர்த்தங்களை ஸ்ரீ ஶங்கராசார்ய பகவத் பாதர்கள் அருளிய பாஷ்யத்தினின்றுமே அறிந்து கொள்ள வேண்டும்.

நூலோ, மானிடராகப் பிறந்தவர்கள் அனைவரும் சிரத்தையோடு வாசித்தும் கேட்டும் சகல நன்மைகளையும் பெறுவதற்

தென்றே, ஸ்ரீ பிஷ்மாசார்யர்களின் வாக்காக, ஸாக்ஷாத் ஸ்ரீ நாராயணரான கிருஷ்ண த்வைபாயனர் என்னும் வ்யாஸ பகவானால் அருளப்பெற்றது. அதற்குரிய பாஷ்யமோ, ஶ்ருதி ஸ்ம்ருதி புராண ந்யாய வசனங்களை ஆதாரமாகக் கொண்டு அனைவருக்கும் பரம சுகத்தை யளிப்பதாக அமைந்துள்ளது. வடமொழியிலுள்ள இத்தகைய நூலையும் உரையையும் எல்லோரும் அனுபவித்துப் பயன்பெறுமாறு, பாஷ்யத்தில் உள்ளதை உள்ளவாறு மொழி பெயர்க்கவேண்டுமென்று நண்பர் சிலர் அபிப்பிராயங்கொண்டார்கள். இந்த அபிப்பிராயத்தை தற்பொழுது காமகோடி பீடத்தை அலங்கரிக்கும் ஸ்ரீமத் பரம ஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்யர்களான ஸ்ரீ ஶங்கராசார்ய ஸ்வாமிகள் ஆதரித்து, என்னால் மொழி பெயர்க்கப்பெற்ற பாகங்களை வாசிக்கக் கேட்டருளியும் பல திருத்தங்களைச் செய்வித்தும் கருணை கூர்ந்து ஸ்ரீமுகத்தைத் தந்தருளியும் அனுக்ரஹித்தார்கள். பிறப்பால் மட்டுமே அத்வைத மதத்தைச் சார்ந்தவனாய் இதுவரை அத்வைத நூல்களிலே ஒரு சிறிதும் பயிற்சிபெற முயலாத நான் இந்த வேலையை ஏற்றுக்கொண்டது, ஸ்ரீ ஶங்கர பகவத் பாதர்கள் திருவாய் மலர்ந்தருளிய மொழி களிலே நானும் பிரவேசித்து, ஸ்ரீ பரமாசார்யர்களின் கருணை கடாக்ஷத்திற்குப் பாத்திரனாக வேண்டும் என்ற பேராவலால் மட்டுமே.

ஸ்ரீ பரமாசார்யர்களின் ஞானப் பிரபாவங்களை என்னால் அறிந்துகொள்ள இயலாதாயினும், ஸகுணப் பிரும்மத்தின் அனந்த கல்யாண குணங்களிலும், பகவானுடைய அவதார லீலை களிலும் ஸ்ரீ பரமாசார்யர்களுக்கு இருந்த ஈடுபாட்டின் மிகுதி யானது, அவர்களுடைய திரு வாக்குகளின் மூலமாய் வெளி யாகி கேட்போர் மனதைப் பரம்பரனோடு பிணைக்குந் தன்மை யுடையதாய் இருப்பதால், இதனை விளக்குவதிலே சிரமமிராது என்று தைர்யங் கொண்டு இவ்வேலையை மேற்கொண்டேன்.

இந்த ஸ்தோத்திர பாஷ்யத்தால் விளங்குவது என்ன? எந்தப் பிரதேசத்திலே, ஜனங்கள் பகவானை அலக்ஷ்ய புத்தியோடு நிந்திக்கிறார்களோ அங்கிருந்து விலகவேண்டும். ஹரியினிடத்தும் குருவினிடத்தும் அத்யந்த பக்தி வேண்டும். சிரத்தையும் பக்தியுமின்றி நாம ஸங்கீர்த்தனஞ் செய்தாலும் பாபங்கள் அனைத்தும் நசித்துப் போம் என்றால், சிரத்தையோடு ஸஹஸ்ர நாமங்களையும் உச்சரிப்பதின் பயனைப் பற்றி அதிகம் கூறவேண்டியதில்லை. இவ்வாறு ஸ்ரீ பரமாசார்யர்கள் அருளிய உபதேச மொழிகளை யாராலும் மறக்க இயலாது.

பகவத குணங்களிலே மூழ்கித் திளைத்தும், அவதாரங்களை ஸாக்ஷாத்கரித்து மனமுருகியும், ஸ்ரீ பரமாசார்யர்கள் பெற்ற ஆனந்தானுபவமானது பாஷ்யத்திலே பெருக்கெடுத்தோடுகின்றது. உதாரணமாக, 'ஸ்வாஸ்ய:' என்பதின் உரையிலே 'தாமரை மலரின் அகவாயிலுள்ள இதழைப் போல் செவ்வி மாறாத பேரழகு வாய்ந்த திருமுக மண்டலத்தையுடைய பெருமான்' என்றும், 'புஷ்கராக்ஷ:' என்பதற்கு 'நினைப்பவரின் இருதயத் தாமரையிலே தன்னுருக் கொண்டு விளங்குகிறான்' என்றும், 'பத்மநாப:' என்னுமிடத்து, 'இருதயத் தாமரையின் இடையிலே விளங்குகிறான்' என்றும், 'ப்ரஸன்னாத்மா' என்பதற்கு 'பரம காருணிகன்' என்றும், 'வ்ருஷப:' என்பதற்கு, 'பக்தர்களுக்கு வேண்டுவனவற்றை மழைபோலப் பொழிந்துதவுகிறான்' என்றும் விளக்குகிறார்கள். எவனைத் தரிசிப்பதானது நன்மை பயப்பதாய், மோக்ஷத்தை விரும்புவோர்க்கு மோக்ஷத்தையும் போகத்தை விரும்புவோர்க்கு போகங்களையும் உதவி, எல்லா ஐயப்பாடுகளையும் நீக்குவதற்குக் காரணமாகி, பாபிகளையும் தூயோராகச் செய்து, இருதயச் சிக்கல்களைப் பிரித்து, இருவினைப் பயனை நசிப்பித்து, அவித்தையை போக்குமோ அவனே சுபேக்ஷணன் என்கிறார்கள்.

பகவானுக்கு விருப்பு வெறுப்புகள் இல்லை யென்றாலும், தேவர்களைப் பகைப்பவர்கள் பகவானுடைய பகைவர்கள் ஆதலால், அவர்களைச் செயித்து 'ஶத்ருஜித்' என்ற பெயர் பெற்றான் என்றும், தருமத்தைக் காப்பதற்காகவே அசுர வீரர்களை அழித்து 'வீரஹா' என்ற பெயர் பூண்டான் என்றும், துர்மார்க்கங்களிலே பழகுவோர்களை அச்சுறுத்தியும் பக்தர்களுக்கு உண்டாகும் பயங்களைப் போக்கியும் 'பயக்ருத்' என்ற பெயரையும், வர்ணாசிரம வொழுக்கத்தைக் கைக்கொண்டவர்களுடைய பயத்தை யொழித்து 'பயநாஶந:' என்ற பெயரையும் பெற்றான் என்றும் அறுதியிடுகிறார்கள். ஜகத்தை ரக்ஷிப்பதற்கே பகவான் நான்கு தோள்களோடு 'ஸுபுஜ' னாக விளங்குகிறான் என்றும், ஆயுதம் என்ற பெயரைப் பெறாதவையாய் கையிலே உள்ளவையான நகங்களையும் ஆயுதமாகப் பிரயோகிக்கும் பெருமை வாய்ந்தவன் என்றும், பரீக்ஷித்தைப்போல இறந்துபட்டவர்களுக்கும் உயிரளிப்பவன் (ப்ராணத:) என்றும், அபகாரங்களையே செய்த சிசுபாலன் முதலானோர்க்கும் மோக்ஷமளித்தவன் (ஸுப்ரஸாத:) என்றும், எவ்வளவு சிரமப்பட்டாலும் மோக்ஷத்தையே நாடும் பரமயோகிகளாலும் தங்கள் இருதயங்களிலே நிலை நிறுத்துவதற்கு அரியவனாய் (துர்தர:) இருப்பவனே அனிலனாய் பக்தர்களுக்கு எளியவன் ஆகிறான் என்றும், 'பச்சிலை, புஷ்பம் முதலியவற்றை ஒரு சிறிது ஸமர்ப்பிப்போர்க்கும் மோக்ஷானந்தத்தை அளிக்கிறான் (க்ருதஜ்ஞ:) என்றும் கூறி உலகோரைப் பக்திமார்க்கத்திலே செலுத்துகிறார்கள்.

பகவதவதாரங்களிலே, பரம புருஷனுடைய மனமும் வாக்கும் செயலும் திருமேனியுமே அழகு பெற்று விளங்குகின்றன (பேஶல:) என்றும், தன்னிச்சை கொண்டே உலகங்களுக்கு உதவுமாறு அநேக அவதாரங்களை மேற்கொண்டான் (அநேகமூர்த்தி:) என்றும், அப்படிப்பட்ட அவதாரங்களால் பூமியே அலங்கரிக்கப் பெற்றதாயிற்று (பூஷண:) என்றும் கூறி, மத்ஸ்

யாதி அவதாரங்களிலேயும் எல்லோரையும் பெரிதும் ஈடுபடுத்து கிறார்கள் (வ்ருஷாகபி:, மஹாஶ்ருங்க:, லோஹித:, அநிமிஷ:, ஶ்ருங்கீ, ஸிம்ஹ:, தரணீதர: முதலிய பெயர்களுக்குரிய உரைப் பகுதிகளைக் காண்க).

இத்தகைய பெரியோர்களுக்கு ஸ்ரீ ராமாவதாரத்திலேயுள்ள ஈடுபாடு சொல்லுந்தரமன்று. 'ரமணீயம் வபுர்வஹன் தாஶரதீ ராம:'' அழகிய திருமேனியால் தசரத புத்திரன் இராமன் என்ற பெயர் பெற்றான் என்றும், 'காடுசெல்' என்றபோதும் செவ்வி மாறாத திருமுக மண்டலத்தைக் கொண்ட ஸ்ரீ ராமபிரானே ஸுமுகன் என்றும், 'ஸமம் து:கம் ஸுகம் ச நௌ' என்று, குரங்கோடு ஒன்றாகக்கலந்துகொண்ட ஸௌஶீல்யத்தை நினைந்தே போலும் அந்த ரகுநாதனே குரங்குகளுக்கும் அரசன் (கபீந்த்ர:) என்றும், அரக்கனே யானாலும் 'ஸக்ருதேவ ப்ரபன்னாய தவாஸ்மீதி ச யாசதே, அபயம் ஸர்வதா தஸ்மை ததாம்யேதத் வ்ரதம் மம', "ஒருமுறை என்னிடம் வந்து 'உன்னுடையவன்' என்று வேண்டிக்கொண்டால், அவனுக்கு எல்லாப் பிரகாரத்தாலும் அபயமளிக்கிறேன்; இது என் விரதம்" என்று சொன்னதை நினைந்து, 'ஏதத் வ்ரதம் மம' என்றவனுடைய விரதமே நல்ல விரதம் என்றும், அவனே பூமிக்கு நாதன் (க்ஷிதீஶ:) என்றும், அவன் இலங்கைக்குச் செல்ல வழிகாண விரும்பி சமுத்திரத்தை நோக்கி பூமியிலே படுத்திருந்த அழகே அழகு (பூஶய:) என்றும், அவனே பொறுமையின் திருவுரு (க்ஷம:) என்றும், அவனே பொறுத்தாருள் சிறந்தவன் (க்ஷமிணாம் வர:) என்றும், அவனே வில்லாளி (தன்வீ; தனுர்தர:) என்றும், தனுர்வித்தையின் திருவுருவும் அவனே (தனுர்வேத:) என்றும், ஆஞ்ஜனேயர் முதலிய சூரர்களையுடைய அவனது சேனையே சூரசேனை (ஶூரஸேன:) என்றும் கூறுகிறார்கள்.

'பிக்ஷு' என்றதுமே, கீதாசார்யர்களின் நினைவு வந்துவிடுகிறது. 'ஸம்ஸாரமாகிய நோயினின்றும் விடுவிப்பதான சிறந்த

வித்தையை ஸ்ரீ கீதையிலே உபதேசித்தருளியே வைத்தியனானன்' என்கிறார்கள். 'ஸ்ரீவத்ஸவக்ஷா:' என்று தொடங்கி 16 பெயர்களுக்கும், 'விஶ்வமூர்(த்)தி:' என்று தொடங்கி 8 பெயர்களுக்கும், 'ப்ரியார்ஹ:' என்று தொடங்கி 4 பெயர்களுக்கும் தொடர்பாகக் கூறியுள்ள பாஷ்யப் பகுதிகள் வாசிப்போரை மெய் சிலிர்க்கச் செய்கின்றன.

இவ்வாறான உரையையும் நூலையும் வாசிப்பவர்கள் பகவானிடத்திலே பக்தி மிகுந்தவர்களாகி பகவானுடைய ஆக்ஞைகளான வர்ணாசிரம தர்மங்களின் வழியே முயன்று, தூயமனத்தவராகி, அத்வைதானுபவத்தால் ஞானத்தைப் பெற்று முக்தியினை பெறவேண்டும் என்பதுதான் ஸ்ரீ பீஷ்மாசார்யர்கள் தருமபுத்திரருக்கு உபதேசித்ததற்கும், அந்த உபதேசத்தை முற்றுமுணர்ந்த ஸ்ரீ வியாசபகவான் மகாபாரதத்திலே அமைத்ததற்கும், பரமாசார்யர்களான ஸ்ரீ பகவத்பாதர்கள் அதற்கு உரைகூறியதற்கும் கருத்தாகும்; அக்கருத்தின்படியே, 'ஜந்து' என்னும் பெயருக்கு மட்டுமே உரிமையுடையவர்களாயினும் அனைவரும் ஜன்ம ஸம்ஸாரபந்தத்தினின்றும் விடுதலை பெறுவார்களாக.

> "ஓதுவா ரோத்தெல்லாம் எவ்வுலகத் தெவ்வெவையும்
> சாதுவாய் நின்புகழின் தகையல்லால் பிறிதில்லை."

"सर्वे शब्दाः परस्मिन् पुंसि प्रवर्तन्ते" इति ।

எல்லாச் சொற்களுமே பரமபுருஷனிடத்திலேயே இயனுபனவாம். ஓம் தத் ஸத்.

வே. நாராயணன்.



# விஜ்ஞாபனம்

## ஸ்தோத்திர பாஷ்யங்களின் ஸாரம்

"சிறிதே முயற்சிசெய்து பெரிய பலனை அடையவேண்டும், அதற்கு உபாயம் என்ன? ஜன்ம ஸம்ஸாரங்களினின்று விடுதலை பெறுவது எப்படி?" என்று யுதிஷ்டிரர் கேட்கிறார்.

அதற்குப் பீஷ்மாசார்யர், "புருஷோத்தமருடைய குணங்களையும் லீலைகளையும் கூறும் ஆயிரம் பெயர்களால் அவரை ஸ்துதிப்பதே உபாயம்" என்று, அந்த ஆயிரம் பெயர்களையும் தொகுத்துக் கூறுகிறார்.

ஸ்துதியின் பெருமை பாஷ்யத் தொடக்கத்திலே நன்கு விளக்கப்பெற்றது. இதர தர்ம மார்க்கங்களால் பிறருக்குத் தீங்கு நேரிடலாம். இந்தக் கலிகாலத்திலே அந்த உபாயங்களை சரிவர அனுஷ்டிப்பது சிரம ஸாத்தியமாகையால், வாயாலே பகவன் நாமாவை உச்சரித்துக் கோரிய பலன்களைப் பெறலாம். இதற்கு யாதொரு நியமமும் வேண்டியதில்லை. ஸ்நானம் முதலிய கார்யங்களைச் செய்யும்போதும் ஸ்துதிக்கலாம். எவ்வளவு பாபஞ் செய்திருந்தாலும் ஒருக்ஷணம் பகவானை நினைத்தால் எவனும் நல்லவனாகிவிடுவான்; ஆகையால் எப்பொழுதும் பகவானை நினைத்த வண்ணமாக இருக்கவேண்டும். அப்படியிருந்தால், அவித்தை முற்றும் நசித்துப்போகும். சகல சந்தேகங்களும் அற்றுப்போய்விடும்; வாயாற்சொன்னாலே இவ்வாறு ஆகும் என்றால், ஞானத்தோடும் சிரத்தையோடும் ஸ்துதித்தால் ஆகும் நன்மையைப்பற்றிச் சொல்லவேண்டியதில்லை. பகவானை நினைப்பதே ஸர்வப் பிராயச்சித்தமும் ஆகும்; ஆகையால் ஒரு நாழிகைப் பொழுதுகூட பகவானை நினையாமல் வீணாக்கக்

கூடாது. அவனை இடைவிடாது நினைப்பவர்களுக்கு எல்லா மங்களமும் உண்டாகும்; யாதொரு அமங்களமும் நேராது.

பரம்பொருள் ஒன்றே உள்ளது (ஸத்); அது விகாரப் படாதது, அழிவில்லாதது. பலபடியாகத் தோற்றும் இப் பிரபஞ்சம் எல்லாம் பரம்பொருளே; பலபடியாகத் தோற்று வது உபாதியால்; உண்மையில் இருப்பது ஸத், சித், ஆனந்தம் ஆகிய ஒன்றே. தேவர்களும் அவனே, உயிர்களும் அவனே, ஜடப்பொருளும் அவனே; அவனையன்றி ஒன்றும் இல்லை; ஆத லால் அவனே ஆத்மா, பரமாத்மா; ஆத்மா வேறு, பரமாத்மா வேறு என்று இல்லை. பலவாகத் தோற்றுவது பிரமை; அகங் கார மமகாரங்களினின்று எழுந்தது இந்த பேத நோக்கம். ஆகையால் அகங்கார மமகாரமின்றி எல்லாவற்றையும் ஒன்றாகக் காண்பதே பகவானை ஆராதிக்கும் முறை. இதற்கு அமைந்த ஸாதனம் பகவானுடைய ஆயிரம் பெயர்களையும் அவற்றின் பொருளையும் அறிந்து கொள்வதே. "இந்த ஸ்துதியும் அவனே, ஸ்துதிக்கப்பெறுவோனும் அவனே, ஸ்துதிப்பதாகிய செயலும் அவனே, ஸ்துதிப்பவர்களும் அவனே" என்ற ஞானத்தைப் பெற வேண்டும். ஸஹஸ்ர நாம ஜபத்தால் இந்த ஞானம் ஏற்படும். ஜப முதலிய கர்மாக்களால் அந்தக்கரண சுத்தி உண்டாகும்; அதனால் சுகத்தையும் ஞானத்தையும் பெற்று மோக்ஷத்தை யடையலாம். ஆத்மாவை, கண்ணாடியிலே போல, தெளிவாகக் காணலாம். ஞானத்தாலேதான் மோக்ஷம்; பிரும் மத்தை அறிந்தவனே பிரும்ம நிலைபெற்று பிரும்மமே யாகிறான்; வேறு வழியில்லை. அந்த ஞானத்தைப் பெறுவதற்கு ஸ்தோத் திரமே சிறந்த உபாயம்; வர்ணாசிரம ஆசாரங்களின்படி நடப்பவ னுக்கு ஸ்தோத்திரம் முதலிய தர்மங்களை அனுஷ்டிக்கும் உரிமை உண்டு. ஸ்தோத்திரஞ் செய்யும்போது, ஜகத்து முழுவதும் ஒரே ஆத்மப் பொருள் என்று தியானிக்கவேண்டும். இப்படித் தியானஞ் செய்வதால், பரஸ்பரம் விருப்பு வெறுப்புக் கொள்

வதற்குக் காரணம் இல்லை; பிறருக்குத் தீங்கு செய்வதற்கும் காரணம் இல்லை. சாந்த ஸாத்விக நிலை தானே வந்து விடும். இது பிரஹ்லாதர் அனுஷ்டித்துக் காட்டிய வழி. இதைக் கொண்டு எல்லோரும் எல்லாப் பேறுகளையும் பெற்று ஆத்ம ஞானத்தால் மோக்ஷமாகிய பேரின்பத்தையும் பெறுவார்களாக.

## குறிப்புரை

இந்தப் பதிப்பிலே கையாளப்பெற்ற முறைகளாவன:

(i) அர்த்தத்தை நன்றாக விளக்குவதற்காக சிற்சில இடங்களில் பாஷ்யத்தில் இல்லாத சொற்களை உபயோகித்த இடங்களில் அவை பகர வளைவுக்குள் கொடுக்கப்பெற்றன.

(ii) ஒரே பதத்தை இரண்டுவிதமாக மொழி பெயர்த்த இடங்களில், இரண்டில் ஒன்று நக வளைவுக்குள் கொடுக்கப் பட்டுள்ளது.

(iii) ஸ்தோத்திரத்திற்கு முன்பும் பின்பும் சம்பிரதாயமாக வழங்கும் சுலோகங்கள் முதலியவையும் அவற்றிற்கு அர்த்தமும் கொடுக்கப்பட்டுள்ளன. அநுபந்தங்களாக, நாமாவளியும் ஸ்தோத்திர மூலமும் சேர்க்கப்பட்டுள்ளன.

(iv) பாஷ்யத்திற்கு மட்டுமே தமிழுரை எழுதப்பட்டிருக்கிறது; மேற்கோள்களுக்கு உரை எழுதவில்லை.

## நன்றியுரை

முன்புள்ள பதிப்புகளில் (1) ஸ்ரீரங்கம் வாணி விலாஸ் ப்ரெஸ் வெளியிட்ட ஸ்ரீ சங்கராசார்ய கிரந்தாவளியிலுள்ள மூலமும் பாஷ்யமும்; (2) கோரக்பூர் கீதா ப்ரெஸ் ஹிந்தி அநுவாதத்தோடு வெளியிட்ட பதிப்பும்; (3) மதராஸ் அடையாறு தியஸாபிகல் பப்ளிஷிங் ஹௌஸ் பதிப்பித்த ஸ்ரீ. ஆர். அனந்த கிருஷ்ண சாஸ்திரிகளுடைய ஆங்கில அநுவாதமும்; (4) பாஷ்

யத்தில் தாத்பர்யத்தை சுருக்கமாகத் தமிழிலே சொல்வதான வித்யாவிநோத ஸ்ரீ கே. என். ராமஸ்வாமி சர்மாவின் பதிப்பும்; (5) அங்கங்கே ஸ்ரீ பகவத் பாத பாஷ்யக் கருத்துக்களைக் குறிப் பவையான ஸ்ரீ கிடாம்பி. ரங்காசார்யர், மஹா மஹோபாத்யாய ஸ்ரீ. ம. வீ. ராமானுஜாசார்யர் ஆகியவர்களின் பதிப்புகளும் இப்பதிப்பிற்கு உதவியாயின.

கணபதி அக்ரஹாரம் மஹாமஹோபாத்யாய, வித்யா வாசஸ்பதி, தர்சனகலாநிதி, குலபதி, ப்ரொபெஸர். ஸ்ரீமான் எஸ். குப்புஸ்வாமி சாஸ்திரி அவர்கள், எம். ஏ., ஐ. இ. எஸ். (ரிடயர்டு) சிறந்த முகவுரை அளித்ததற்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

மயிலாப்பூர் தர்ம ரக்ஷாமணி ஸ்ரீ கே. பாலஸுப்ரஹ்மண்ய அய்யரவர்கள் பி. ஏ., பி. எல்., ஸாஹித்ய வாங்முக பூஷணம் ஸ்ரீ ஸோமதேவ சர்மா அவர்கள், ஸ்ரீ ஏ. எஸ். நடராஜ அய்ய ரவர்கள் பி. ஏ., எம். எல். முதலிய நண்பர்கள் பலர் செய்த உத விக்கு எங்கள் நன்றி உரியதாகும்.

மதராஸ்,
7—10—1942.

தே. பா.
வே. நா.

# விஷய ஸூசிகை





ஸ்ரீ:

ஹரி: ஓம்.

ஸ்ரீ க்ருஷ்ணாய நம:

ஸ்ரீ க்ருஷ்ண த்வைபாயனாய நம:

ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள்

இயற்றிய பாஷ்யத்துடன் கூடிய

# ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்

**शुक्लाम्बरधरं विष्णुं शशिवर्णं चतुर्भुजम् ।**
**प्रसन्नवदनं ध्यायेत्सर्वविघ्नोपशान्तये ॥**

ஶுக்லாம்பரதரம் விஷ்ணும் ஶஶிவர்ணம் சதுர்புஜம்
ப்ரஸந்நவதனம் த்யாயேத் ஸர்வவிக்னோபஶாந்தயே.

வெள்ளை ஆடையுடுத்து, சந்திரன் போன்ற நிறமும் நான்கு தோள்களும் யானைமுகமும் உடையவரான சர்வ வியாபியான விநாயகக் கடவுளை, எல்லா இடையூறுகளும் அற்றுப் போவதற்காக, தியானிக்க வேண்டும்.

**व्यासं वसिष्ठनप्तारं शक्तेः पौत्रमकल्मषम् ।**
**पराशरात्मजं वन्दे शुकतातं तपोनिधिम् ॥**

வ்யாஸம் வஸிஷ்டநப்தாரம் ஶக்தே: பௌத்ரமகல்மஷம்
பராஶராத்மஜம் வந்தே ஶுகதாதம் தபோநிதிம்.

வசிஷ்டருடைய கொள்ளுப்பேரரும் சக்தி என்பவருடைய பேரரும் பராசருடைய புத்திரரும் சுகருடைய தகப்பனாரும் மாசற்றவருமாகிய வியாச முனிவரை வணங்குகிறேன்.

व्यासाय विष्णुरूपाय व्यासरूपाय विष्णवे ।
नमो वै ब्रह्मनिधये वासिष्ठाय नमो नमः ॥

வ்யாஸாய விஷ்ணுரூபாய வ்யாஸரூபாய விஷ்ணவே
நமோ வை ப்ரஹ்மநிதயே வாஸிஷ்டாய நமோ நம :.

*விஷ்ணு வடிவுள்ள வியாசராகவும் வியாசர் வடிவுள்ள விஷ்ணுவாகவும் (பேதமின்றி) விளங்குவோராய் ஞானத்தாலும் தவத்தாலும் நிறைந்த நிதியாகிய வியாசருக்கு நமஸ்காரம்; வசிஷ்ட வம்சத்தவருக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரம்.*

अविकाराय शुद्धाय नित्याय परमात्मने ।
सदैकरूपरूपाय विष्णवे सर्वजिष्णवे ॥

அவிகாராய ஶுத்தாய நித்யாய பரமாத்மனே
ஸதைகரூபரூபாய விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே.

*மாறுபாடு ஒன்றும் இல்லாதவராய், தூய்மை வாய்ந்தவராய், என்றும் உள்ளவராய், பரம ஆத்மாவாய், எப்பொழுதும் ஒரு நிலையான வடிவமுடையவராய் எல்லோரையும் வென்று வெற்றி பெற்றவராய் விளங்கும் விஷ்ணுவுக்கு [நமஸ்காரம்].*

यस्य स्मरणमात्रेण जन्मसंसारबन्धनात् ।
विमुच्यते नमस्तस्मै विष्णवे प्रभविष्णवे ॥
ओं नमो विष्णवे प्रभविष्णवे ॥

யஸ்ய ஸ்மரணமாத்ரேண ஜன்மஸம்ஸாரபந்தனாத்
விமுச்யதே நமஸ்தஸ்மை விஷ்ணவே ப்ரபவிஷ்ணவே.
ஓம் நமோ விஷ்ணவே ப்ரபவிஷ்ணவே.

*எவரை நினைத்தமாத்திரத்தில், 'பிறவி-ஸம்ஸார'க் கட்டினின்றும் விடுவிக்கப்படுகிறானோ, அந்த சர்வ வல்லமை*

பொருந்திய விஷ்ணுவுக்கு நமஸ்காரம்.

ஓம், சர்வ வல்லமை பொருந்திய விஷ்ணுவுக்கு நமஸ்காரம்.

[மேற்கண்ட ஐந்து சுலோகங்களும் 'விஷ்ணு ஸஹஸ்ர நாமம்' என்னும் நூலைத் தொடங்குமுன், வழக்கமாகச் சொல்லப்படுகின்றன.]

---

सच्चिदानन्दरूपाय कृष्णायाक्लिष्टकारिणे ।
नमो वेदान्तवेद्याय गुरवे बुद्धिसाक्षिणे ॥

ஸச்சிதானந்தரூபாய க்ருஷ்ணாயாக்லிஷ்டகாரிணே
நமோ வேதாந்தவேத்யாய குரவே புத்திஸாக்ஷிணே.

ஸச்சிதானந்த ஸ்வரூபனாய், காரியங்களை இனிது நிறைவேற்றுவோனாய், வேதோபநிடதங்களால் அறிவதற்கு உரியவனாய், புத்தி ஸாக்ஷியாய் குருவாயுள்ள கிருஷ்ண பரமாத்மாவுக்கு நமஸ்காரம் ['கிருஷ்ணன்' 57-வது நாமத்தின் உரையைக் காண்க; 'குரு' 209-வது நாமத்தின் உரையைக் காண்க.]

कृष्णद्वैपायनं व्यासं सर्वभूतहिते रतम् ।
वेदाब्जभास्करं वन्दे शमादिनिलयं मुनिम् ॥

க்ருஷ்ணத்வைபாயனம் வ்யாஸம் ஸர்வபூதஹிதே ரதம்
வேதாப்ஜபாஸ்கரம் வந்தே ஶமாதிநிலயம் முனிம்.

எல்லா உயிர்களின் நன்மையிலேயும் இன்புறுவோராய் வேதமாகிய தாமரைக்குச் சூரியனாய் சாந்தம் முதலிய குணங்களுக்கு இருப்பிடமாயுள்ள கிருஷ்ணத்துவைபாயனர் என்னும் வியாச முனிவரை வணங்குகிறேன்.

सहस्रमूर्तेः पुरुषोत्तमस्य सहस्रनेत्राननपादबाहोः ।
सहस्रनाम्नां स्तवनं प्रशस्तं निरुच्यते जन्मजरादिशान्त्यै ॥

ஸஹஸ்ரமூர்(த்)தே: புருஷோத்தமஸ்ய
ஸஹஸ்ரநேத்ராநநபாதபாஹோ:
ஸஹஸ்ரநாம்நும் ஸ்தவனம் ப்ரஶஸ்தம்
நிருச்யதே ஜன்மஜராதிஶாந்த்யை.

*ப்பு மூப்பு முதலியவை அடங்குவதற்காக, ஆயிரம் வடிவங்களையும் ஆயிரம் கண்கள் முகங்கள் பாதங்கள் தோள்கள் ஆகியவற்றையும் உடையவனான புருஷோத்தமனுடைய ஆயிரம் பெயர்களாலாகிய புகழ்பெற்ற ஸ்தோத்திரத்திற்கு, சொற்களைப் பிரித்துப் பொருள் கூறும் உரை இயற்றப்ப*

*[இம் மூன்று சுலோகங்களும் ஸ்ரீ பகவத்பாதர்கள் உரைத் தொடக்கத்திலே மங்களமாகக் கூறியன.]*

**श्रीवैशम्पायन उवाच—**

ஸ்ரீ வைஶம்பாயன உவாச *[ஸ்ரீ வைசம்பாயனர் சொன்னார்].—*

**श्रुत्वा धर्मानशेषेण पावनानि च सर्वशः।**
**युधिष्ठिरः शान्तनवं पुनरेवाभ्यभाषत ॥ १ ॥**

1. ஶ்ருத்வா தர்மானஶேஷேண பாவநானி ச ஸர்வஶ:
யுதிஷ்டிர: ஶாந்தனவம் புனரேவாப்யபாஷத.

*ஸ்ரீ வைசம்பாயனர் ஜனமேஜயனைப் பார்த்துச் சொன்னார்:*—**தர்மான்** *[யோக க்ஷேமங்களாகிய] சம்பத்துக்களையும் மோக்ஷத்தையும் பெறுவதற்குக்காரணங்களாய் விதிவிலக்குருபங்களாயுள்ள கட்டளைகளை;* **அஶேஷேண** *[ஒன்றையும் விடாமல்] முழுவதையும்;* **பாவநானி ச** *பாபங்களைத் தொலைப்பனவாகிய தருமரகசியங்களையும்;* **ஸர்வஶ:** *எல்லாப் பிரகாரங்களாலும்;* **ஶ்ருத்வா** *[கேட்டு];* **யுதிஷ்டிர:** *தருமபுத்திரர்;* **ஶாந்தனவம்** *சந்தனுவுக்கு மகனான பீஷ்மரை நோக்கி; எல்லாப் புருஷார்த்தங்*

களையும் பெறச்செய்வதாயும் இனிதாக அடையக்கூடியதாயும் முயற்சி சிறிதே வேண்டுவதாயும் பெரும் பேற்றைத் தருவதாயு முள்ள உபாயம் [இதுவரைச் செய்த உபதேசங்களில்] சொல்லப் படவில்லை என்று கருதி—புந: ஏவ மறுபடியுமே; அப்யபாஷத கேள்வி கேட்டார்.

**युधिष्ठिर उवाच—**

யுதிஷ்டிர உவாச [யுதிஷ்டிரர் சொன்னார்].—

**किमेकं दैवतं लोके किं वाप्येकं परायणम्।**
**स्तुवन्तः कं कमर्चन्तः प्राप्नुयुर्मानवाः शुभम्॥ २॥**

2. கிமேகம் தைவதம் லோகே கிம் வாப்யேகம் பராயணம்
ஸ்துவந்த: கம் கமர்(ச்)சந்த: ப்ராப்னுயுர் மானவா: ஶுபம்.

கிம் ஏகம் [எது ஒன்றே]; தைவதம் தெய்வம்—ஸ்வார் (த்) தே தத்திதப்ரத்யயவிதானாத் [தேவன் என்ற பொருளிலே 'தத்திதம்' என்னும் இலக்கண விதிப்படி 'தைவதம்' என்று வந்தது]—லோகே காண்பதற்குக் காரணமான எல்லா [வித்யா ஸ்தானத்திலும்] உக்தம் [சொல்லப்பட்டது]?—என்பது முதற்

[சாஸ்திரங்கள் பதினெட்டும் வித்யாஸ்தானம் என்னப்படுவன; அவை யாவன: நான்கு வேதங்கள், ஆறு வேதாங்கங்கள், மீமாம்சை நியாயம் புராணம் தரும சாஸ்திரம் என்னும் உபாங்கங்கள் நான்கு, ஆயுர்வேதம் அர்த்த சாஸ்திரம், காந்தர்வம், தனுர்வேதம். கடைசி நான்குமே 'லோகம்' என்னும் சிறப்புப் பெயர்க்குரியன; முதற் பதினான்கும் 'வேதம்' என்னப் படுவன; இங்கு எல்லாம் 'லோகம்' என்பதன் பொருள்].

கிம் வாப்யேகம் பராயணம்: அந்த வித்யாஸ்தானத்திலே [சொல்லப்பட்டதாய்]உள்ள தான ஒன்றேயாகிய பராயணம் எது? —பரம் [மேலான], அயனம் அடைவதற்குரிய இடம், பராயணம்; எதனுடைய ஆணையால் எல்லோரும் [தத்தம் காரியங்களில்] பிரவர்த்திக்கிறார்களோ, எதனைக் கண்டதும் இருதயச் சிக்கல்

பிரிந்து விடுகின்றதோ,—'பித்யதே ஹ்ருதயக்ரந்திஸ் சித்யந்தே ஸர்வஸம்ஸயா :, க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மின் த்ருஷ்டே பராவரே' என்பது சுருதி [முண்டகோப 2, 2, 8]—எதனை அறிந்த மாத்திரத்திலே ஆனந்தரூபமான மோக்ஷம் பெறப்படுகின்றதோ, எதனை அறிந்தவன் எப்பொருளினின்றுமே பயப்படமாட்டானோ, எதனுள் புகுவோனுக்கு மீண்டும் பிறப்பது என்பது இல்லையோ, எதனை அறிந்ததும் அதுவே ஆகின்றானோ,—'ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி' என்பது சுருதி [முண்டகோப. 3, 2, 9]—எதனைத் தவிர்த்து மானிடருக்கு வேறு கதியொன்றும் இல்லையோ,—"நான்ய : பந்தா : வித்யதே'யனாய" என்பது சுருதி [சுவேதா. உப. 3, 8]—அந்தப் பொருள் ஏகம் பராயணம் என்று சொல்லப்பட்டது. லோகே [வித்யாஸ்தானமெனப்படும் சாஸ்திரங்களிலே] அது எது [என்று சொல்லப்பட்டது]?—என்பது இரண்டாவது கேள்வி.

(i) கம் எந்த தேவனை, ஸ்துவந்த : குணங்களைச் சொல்லிப் புகழ்வோர்களாகிய; (ii) அல்லது, கம் எந்த தேவனை, அர்(ச்)சந்த : புறத்தே அல்லது மனத்தினுள்ளே வெகுவித பூஜைகளால் வழிபடுவோர்களாகிய ; மானவா : மனிதர்கள், ஶுபம் மங்களகரமான சுவர்க்கம், (அபவர்க்கம்) மோக்ஷம் முதலிய பயனை, ப்ராப்னுயு : பெறுவார்கள் ?—என்று இன்னும் இரண்டு கேள்விகள்.

को धर्मः सर्वधर्माणां भवतः परमो मतः ।
किं जपन्मुच्यते जन्तुर्जन्मसंसारबन्धनात् ॥ ३ ॥

3. கோ தர்ம : ஸர்வதர்மாணும் பவத : பரமோ மத :
கிம் ஜபன் முச்யதே ஜந்துர் ஜன்மஸம்ஸாரபந்தனுத்.

முற்கூறியவாறு கட்டளைகளின் ரூபங்கொண்ட கோ தர்ம : [எந்த தர்மமானது], ஸர்வதர்மாணும் எல்லாத் தருமங்களுக்குள்ளேயும், பவத : [தங்களால்], பரம : சிறந்த, தர்ம : [தருமம் என்று], மத : கருதப்பட்டது?—என்பது ஐந்தாவது கேள்வி.

[கிம்] எந்த மந்திரத்தை, ஜபன் உரக்கவோ மெல்லவோ மனதிற்குள்ளேயோ ஜபஞ் செய்து; ஜந்து:—பிறவியுள்ளது [புல் பூண்டு பிராணி முதலியவையெல்லாம் பிறவியுடையவை]—இந்த 'ஜந்து' என்னும் சொல்லால், பிறவியுடையவைகளுக்கு எல்லாம், அவ்வவற்றிற்குத் தக்கவாறு, ஜபம், பூஜை, ஸ்தோத்திரம் முதலியவற்றைச் செய்வதிலே (அதிகாரம்) உரிமை உண்டு என்பதைக் குறிப்பிடுகிறார். ஜன்மஸம்ஸாரபந்தனாத்: 'ஜன்ம' அஞ்ஞானத்தினின்றும் பெருகும் அவித்தியாகாரியங்கள் எல்லாவற்ம் உபலக்ஷணம்; 'ஸம்ஸாரம்'—அவித்தியை; 'ஜன்ம', 'ஸம்ஸாரம்' ஆகிய இரண்டாலும் கட்
முச்யதே விடுபட்டவனாகிறான்?—என்பது ஆறாவது கேள்வி. 'முச்யதே ஜன்மஸம்ஸாரபந்தனாத் என்னும் இது மற்றைப் பலன்களுக்கும் உபலக்ஷணமாகும். இதை [அதாவது, ஜன்ம ஸம்ஸாரக் கட்டினின்றும் விடுதலை பெறுவதை] எடுத்துக் கூறியது மோக்ஷத்தின் முக்கியத் தன்மையை விளக்குவதற்கேயாகும்.

[ஒன்றேயான தெய்வம் எது? எதுவே மேலான கதியாவது? எதனைத் துதிப்பது சுபத்தைத்தரும்? எதனை அர்ச்சிப்பது சுபத்தைத்தரும்? எது சிறந்த தருமமாவது? எதனை ஜபித்தால் மோக்ஷமுண்டு? என்று] ஆறு கேள்விகள் கேட்கப்பட்டன; அவற்றுள், கடைசியாகக் கேட்கப்பட்டதான மந்திர ஜபத்தைப் பற்றிய கேள்விக்கு இந்த சுலோகத்தில் விடை கூ

श्रीभीष्म उवाच—

ஸ்ரீ பீஷ்ம உவாச [ஸ்ரீ பீஷ்மர் சொன்னார்]—

जगत्प्रभुं देवदेवमनन्तं पुरुषोत्तमम् ।
स्तुवन्नामसहस्रेण पुरुषः सततोत्थितः ॥ ४ ॥

4. ஜகத்ப்ரபும் தேவதேவம் அனந்தம் புருஷோத்தமம்
ஸ்துவந் நாமஸஹஸ்ரேண புருஷ: ஸததோத்தித:.

பீஷ்ம: புறத்தேயும் உள்ளத்திலுமுள்ள எல்லாப் பகைவர்களுக்கும் பயத்தை யுண்டாக்குவோர், 'மோக்ஷ தர்மம்' முதலியவற்றை உபதேசித்தவர், எல்லாவற்றையும் அறிந்தவர்.

ஜகத்—ஸ்தாவரங்களையும் ஜங்கமங்களையுங் கொண்டது; அதற்கு ப்ரபு: உடையவனையும், தேவதேவம் பிரமன் முதலான தேவர்களுக்குத் தேவனையும், அனந்தம் இடம், காலம், பொருள் ஆகியவற்றிலே அளவுபடாதவனையும், புருஷோத்தமம் க்ஷரம் அக்ஷரம் என்னும் காரிய காரணப் பொருள் இரண்டையும் விட மிகச் சிறந்தவனையுமுள்ளவனை [புருஷோத்தமனை], நாமஸஹஸ்ரேண பெயர்கள் ஆயிரத்தால், ஸ்துவன் குணங்களைப் புகழ்ந்து கூறி, ஸததோத்தித: இடைவிடாது [எப்போதும்] முயன்று கொண்டிருக்கிற, புருஷ: பூர்ணன் என்பதால், அல்லது புரி சரீரத்தில் உறைவோன் என்பதால், [ஜீவன்] புருஷன் என்னப்படுபவன். [6-வது சுலோகத்திலுள்ளதான] ஸர்வது:காதிகோ பவேத் [எல்லாத் துன்பங்களையுங் கடந்தவனாகிறான்] என்பதை எங்கும் [இந்தச் சுலோகத்திலும் அடுத்த சுலோகத்திலும்] சேர்த்துக் கொள்ளவேண்டும்.

அடுத்த சுலோகத்தால் நான்காவது கேள்விக்கு விடை கூறப்படுகின்றது.

तमेव चार्चयन्नित्यं भक्त्या पुरुषमव्ययम् ।
ध्यायन्स्तुवन्नमस्यंश्च यजमानस्तमेव च ॥ ५ ॥

5. தமேவ சார்(ச்)சயன் நித்யம் பக்த்யா புருஷ மவ்யயம்
த்யாயன் ஸ்துவன் நமஸ்யம்ஶ்ச யஜமானஸ் தமேவ ச.

தம் ஏவ [அவனையே], ச அர்(ச்)சயன் புறத்தே பூசனை செய்து, நித்யம் எல்லாக் காலங்களிலும்;—பக்தி: வழிபடுதல் என்பது பொருள்—பக்த்யா வழிபடுதலால், புருஷம் அவ்யயம் அழிவும் மாறுபாடும் இல்லாதவனை, தம் ஏவ ச [அவனையே], த்யாயன் உள்ளத்திலே பூசனை செய்தும், ஸ்துவன் துதித்தும், மேற்கூறிய

வாருன பக்தியுடன் நமஸ்யன் ச நமஸ்காரஞ் செய்தும்—பூஜைக்கு அங்கமாவன ஸ்துதி நமஸ்காரம் என்னும் இவை யிரண்டும். யஜமான:—பூசிப்போனுகிப் பலனை அனுபவிப்போன் [எல்லாத் துன்பங்களையுங் கடந்தவனுகிருன்.]

அல்லது, 'அர்(ச்)சயன்' என்னும் இச்சொல்லால் [உள்ளப் பூசனை புறப்பூசனை என்னும்] இருவகைப்பட்ட பூசனையும் சொல்லப்பட்டது; த்யாயன் ஸ்துவன் நமஸ்யன் ச என்னும் இதனுல் மனம் வாக்கு மெய் ஆகியவற்ருல் செய்யப்படும் பூசனை சொல்லப்பட்டது.

அடுத்த மூன்று அடிகளால் மூன்ருவது கேள்விக்கு விடை கூறப்படுகின்றது.

**अनादिनिधनं विष्णुं सर्वलोकमहेश्वरम् ।**
**लोकाध्यक्षं स्तुवन्नित्यं सर्वदुःखातिगो भवेत् ॥ ६ ॥**

6. அனுதிநிதனம் விஷ்ணும் ஸர்வலோகமஹேஶ்வரம்
லோகாத்யக்ஷம் ஸ்துவன் நித்யம் ஸர்வது:காதிகோ பவேத்.

அனுதிநிதனம் ஆறுவகைப்பட்ட வேறுபாடுகள் இல்லாதவனுய், விஷ்ணும் வியாபித்திருப்பவனுய்; ஸர்வஸ்ய எல்லா;—நோக்கப்படுவது என்பதால், லோக: என்பது காணப்படும் பொருள்வகைகளின் தொகுதியாகும்; அதனை [எல்லாம்] நியமிக்கும் பிரமன் முதலானவர்களுக்கும் ஈசுவரன் என்பதால் ஸர்வலோகமஹேஶ்வர: என்னப்படுவோனை. 'லோகம்' என்னப்படும் த்ருஶ்ய வர்க்கத்தை [காணப்படும் பொருள் வகைகளின் தொகுதியை], இயற்கையில் அமைந்த அறிவால் நேரே காண்கிருன் என்பதால் லோகாத்யக்ஷ: என்னப்படுவோனை; நித்யம் இடைவிடாமல், ஸ்துவன் [துதித்து]—ஸர்வது:காதிகோ பவேத் என்பது [ஸ்துதி, அர்ச்சனை, ஜபம் என்னும்] மூன்றிற்கும் பொதுவான பலனைக் கூறும் வாக்கியம்.

**ஸர்வது:காதிக :** *ஆத்யாத்மிகம் முதலிய எல்லாவிதமான துன் பங்களையும் கடந்து செல்வோன், பவேத் ஆவான்.*

*மீண்டும் துதிப்பதற்குரிய அவனைப் பற்றியே விரித்துக் கூறுகிறார் :*

**ब्रह्मण्यं सर्वधर्मज्ञं लोकानां कीर्तिवर्धनम् ।**
**लोकनाथं महद्भूतं सर्वभूतभवोद्भवम् ॥ ७ ॥**

**7. ப்ரஹ்மண்யம் ஸர்வதர்மஜ்ஞம் லோகாநாம் கீர்த்திவர்த்தனம்**
**லோகநாதம் மஹத்பூதம் ஸர்வபூதபவோத்பவம்.**

**ப்ரஹ்மண்யம் :** *பிரும்மத்திற்கு, அதாவது, பிரமனுக்கு, பிராம்மணனுக்கு, தவத்திற்கு, வேதத்திற்கு ஹிதமாய் இருப் பவனை; எல்லாத் தருமங்களையும் உணர்ந்தவன் என்பதால்* **ஸர்வதர்மஜ்ஞ :** *என்னப்படுவோனை ;* **லோகாநாம்** *பிராணி களுடைய (உயிர்களின்);* **கீர்(த்)தய :** *புகழ்களை ;* **வர்(த்)தயதி** *தன்னுடைய சக்திகளை [அவற்றுள்] புகுத்தி [அப்புகழ்களை] விருத்தி செய்கிறவனை. லோகங்களால் ['லோகம்'—காணப்படும் பொருள்வகைகளின் தொகுதி] வேண்டப்படுவோன், லோகங் களினிடத்து கருணைகொள்வோன், லோகங்களுக்கு இன்பன், அல்லது, லோகங்களை ஆள்வோன் என்பதால்* **லோகநாத :** *என்னப்படுவோனை;* **மஹத்**—*பிரும்மத்தை—எல்லாப் பொருளுக் கும் மேலாகிச் சிறந்து விளங்குவதால்* **மஹத்** *என்னப்படு வோனை,* **பூதம்** *உண்மைப் பரம்பொருளை ;* **ஸர்வபூதபவோத்பவம்** *எல்லா உயிர்களுக்கும்* **பவ :** *ஸம்ஸாரமானது, எவன் பக்கலி னின்றும் எழுகின்றதோ [உண்டாகின்றதோ] அவனை.*

*ஐந்தாவது கேள்விக்கு விடை கூறுகிறார் :*

**एष मे सर्वधर्माणां धर्मोऽधिकतमो मतः ।**
**यद्भक्त्या पुण्डरीकाक्षं स्तवैरर्चेन्नरः सदा ॥ ८ ॥**

8. ஏஷ மே ஸர்வதர்மாணும் தர்மோ 'திகதமோ மத :
யத் பக்த்யா புண்டரீகாக்ஷம் ஸ்தவைரர்(ச்)சேந்நர : ஸதா.

ஸர்வேஷாம் [எல்லா], தர்மாணும்கட்டளை வடிவங்கொண்ட தருமங்களுக்கும், ஏஷ : [இப்பொழுது] சொல்லப்போகிற, தர்ம : [தருமம்], அதிகதம : மிகச் சிறந்தது என்று, மே என்ருல், மத : கருதப்பட்டது ; யத் [எது என்ருல்], பக்த்யா முழுக் கருத்தோடு, புண்டரீகாக்ஷம் உள்ளத் தாமரையிலே ஒளிரும் வாஸுதேவனை, ஸ்தவை : குணங்களைப் புகழ்வனவாகிய ஸ்துதிகளால், நர : மானுடனுகப் பிறந்தவன் ஸதா, [எப்பொழுதும்], அர்(ச்)சேத் வணக்கவொடுக்கமாகப் பூஜை செய்கிருன் என்னும் இதுவே ; 'ஏஷ : தர்ம :' [இப்பொழுது கூறப்பட்ட தருமம்] என்று சேர்த்துக்கொள்ள வேண்டும்.

ஸ்தோத்திர ரூபமான இந்தப் பூஜா விதியின் சிறப்பிற்குக் காரணம் என்ன என்ருல், [இங்கு] சொல்லப்படும் : இமிசை முதலியவைகளும், வேறு மனிதர், வேறு பொருள், இடம், காலம் முதலியவற்றைப்பற்றிய நியமங்களும் (கட்டுப்பாடுகளும்) இதற்குத் தேவையில்லை என்பது சிறப்பிற்குக் காரணம். 'த்யாயன் க்ருதே யஜன் யஞ்ஞைஸ் த்ரேதாயாம் த்வாபரே'ர்(ச்)சயன், யதாப்னோதி ததாப்னோதி கலௌ ஸங்கீர்த்ய கேசவம்' என்பது விஷ்ணு புராண வசனம் [6, 2, 17] ; 'ஜப்யேனைவ து ஸம்ஸித்யேத் ப்ராஹ்மணோ நாத்ர ஸம்சய :, குர்யாதன்யந்ந வா குர்யாத் மைத்ரோ ப்ராஹ்மண உச்யதே' என்பது மனு வசனம் [2, 87] ; 'ஜபஸ்து ஸர்வதர்மேப்ய : பரமோ தர்ம உச்யதே, அஹிம்ஸயா ச பூதானும் ஜபயஜ்ஞ : ப்ரவர்(த்)ததே' என்பது மஹா பாரதம். 'யஜ்ஞானும் ஜபயஜ்ஞோஸ்மி' என்பது பகவத் வசனம் [கீதை 10, 25]—இவற்றை யெல்லாம் மனத்திற் கொண்டு, 'ஏஷமே ஸர்வதர்மாணும் தர்மோ'திகதமோ மத :' என்று சொல்லப் பட்டது.

இரண்டாவது கேள்விக்கு விடை கூறுகிருர் :

**परमं यो महत्तेजः परमं यो महत्तपः ।**
**परमं यो महद्ब्रह्म परमं यः परायणम् ॥ ९ ॥**

9. பரமம் யோ மஹத்தேஜ : பரமம் யோ மஹத்தப :
பரமம் யோ மஹத்ப்ரஹ்ம பரமம் ய : பராயணம்.

பரமம் *சிறந்தது* ; மஹத் *பெரியது* ; தேஜ : *சைதன்னியம் என்னப்படுவது, எல்லாவற்றையும் விளக்குவது. 'யேன ஸூர்யஸ்தபதி தேஜஸேத்த :' [தைத். ப்ரா. 3, 12, 97], 'தம் தேவா ஜ்யோதிஷாம் ஜ்யோதி :' [ப்ருஹ. உப. 4, 4, 16], 'ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம்' [முண்டகோப. 2, 2, 10] என்பவை முதலியன சுருதி ; 'யதாதித்யகதம் தேஜ :' (கீதை 15, 12) என்பது முதலியவை ஸ்மிருதி.*

பரமம் [*மிகச் சிறந்த*] ; தப : i. '*தபதி' அதாவது, ஆக்ஞை செலுத்துகிறான் என்பதால்* தப : [*பணி கொள்வோன்*]. '*ய இமம் ச லோகம் பரம் ச லோகம் ஸர்வாணி ச பூதானி யோ'ந்தரோ யமயதி' [ப்ரஹ. உப. 3, 7, 1] என்று 'அந்தர்யாமி ப்ராஹ்மண'த்திலே, எல்லோரையும் நியமிக்கும் (பணி கொள்ளும்) தன்மை சொல்லப்படுகின்றது. 'பீஷாஸ்மாத் வாத : பவதே' [தைத். உப. 2, 8, 1] என்று தொடங்கும் சுருதி வாக்கியம் தைத்திரீயகத்தில் உள்ளது.* ii. *அல்லது, 'தபதி' அதாவது 'ஆள்வோன்' என்பதால்,* தப: [*ஈசுவரன், ஆண்டவன்*]; *அவனுடைய ஐசுவரியம் (ஆளுந்தன்மை) குன்றாதது, தடைபடாதது என்பதால், 'மஹத்தவம்' பெற்றது. 'ஏஷ ஸர்வேஶ்வர:' [மாண்டூக்யோப. 6] என்று தொடங்குவது சுருதி.* பரமம் *உண்மை முதலிய லக்ஷணங்களை யுடையதாய்ச் சிறந்த பிரும்மம்; [அது] பூஜிக்கத்தக்கது என்பதால்* மஹத்; பரமம் *மிகச் சிறந்தது, [ஏனென்றால்,] மீண்டும் திரும்புதல் என்னும் சந்தேகத்திற்கு இடங்கொடாதது* ; பராயணம் *உயர்ந்த கதி.*

'*பரம' என்ற சொல்லானது வரும் இடங்களில் எல்லாம் சிறவாத (கீழ்ப்பட்ட) தேஜஸ்களான சூரியன் முதலியவை*

[பொருளல்ல என்று] விலக்கப்பெறுகின்றன. எல்லா விடங்களி லும், 'யோ தேவ:' [எந்த தேவன்] என்னும் சொற்களுக்கு அடைமொழிகளாகக் கொள்ளவேண்டும்: "யோ தேவ: பரமம் தேஜ:, பரமம் தப:, பரமம் ப்ரஹ்ம, பரமம் பராயணம், ஸ ஏக: ஸர்வபூதானாம் பராயணம்". எந்த தெய்வம் மிகச் சிறந்த தேஜஸோ, மிகச் சிறந்த பிராணோ, எது பிரும்மம் என்னப் படுவதோ, எது சிறந்த கதியாகுமோ அந்த ஒன்றே பிராணி களுக்கு எல்லாம் சிறந்த கதியாவது என்பது வாக்கியப்பொருள்.

இனி முதற் கேள்விக்கு விடைகூறுகிறார்.

**पवित्राणां पवित्रं यो मङ्गलानां च मङ्गलम् ।**
**दैवतं देवतानां च भूतानां योऽव्ययः पिता ॥ १० ॥**

10. பவித்ராணாம் பவித்ரம் யோ மங்கலானாம் ச மங்கலம்
தைவதம் தேவதானாம் ச பூதானாம் யோ'வ்யய; பிதா.

**பவித்ராணாம் பவித்ரம்:** தூய (பரிசுத்தமான) தீர்த்தங்கள் முதலியவற்றைக் காட்டிலும் தூயது; பரம புருஷன், தன்னைத் தியானித்தும், கண்டும், கீர்த்தித்தும், துதித்தும், நன்கு பூசித்தும், நினைந்தும், வணங்கியும் வழிபடப்பெற்றவனாய் பாபங் களை யெல்லாம் வேரோடு நாசமுறச் செய்கிறானதலால் **பரமம் பவித்ரம்.**

அல்லது, ஸம்ஸாரமாகிய பந்தத்திற்குக் காரணமான புண்ணிய பாபங்கள் என்னும் கருமங்கள், அவற்றிற்குக் காரண மான அஞ்ஞானம் ஆகிய எல்லாவற்றையும் தன்னை (ஆத்மாவை)ப் பற்றியதான உண்மை யறிவினால் நாசஞ் செய்கிறான் என்பதால், **பவித்ராணாம் பவித்ரம்.**

'ரூபமாரோக்ய மர்(த்)தாம்ஶ்ச போகாம்ஶ்சைவாநுஷங்கிகாந் |
ததாதி த்யாயதோ நித்யமபவர்(க்)கப்ரதோ ஹரி : ||
சிந்த்யமான: ஸமஸ்தானாம் க்லேஶானாம் ஹாநிதோ ஹி ய: |
ஸமுத்ஸ்ருஜ்யாகிலம் சிந்த்யம் ஸோ'ச்யுத: கிம் ந சிந்த்யதே ||

த்யாயேந் நாராயணம் தேவம் ஸ்நாநாதிஷு ச கர்மஸு |
ப்ராயஶ்சித்தம் ஹி ஸர்வஸ்ய துஷ்க்ருதஸ்யேதி வை ஶ்ருதி: ||
(கருடபு. 1, 230., 28)

ஸம்ஸாரஸர்(ப்) பஸந்தஷ்ட நஷ்டசேஷ்டைகபேஷஜம் |
க்ருஷ்ணேதி வைஷ்ணவம் மந்த்ரம் ஶ்ருத்வா முக்தோ பவேந்நர: ||

அதிபாதக யுக்தோ'பி த்யாயந் நிமிஷமச்யுதம் |
பூயஸ் தபஸ்வீ பவதி பங்க்திபாவனபாவன: ||

ஆலோட்ய ஸர்வஶாஸ்த்ராணி விசார்ய ச புந: புந: |
இதமேகம் ஸுநிஷ்பன்னம் த்யேயோ நாராயண: ஸதா ||
(மஹாபா. அனு. 186, 11)

ஹரிரேக: ஸதா த்யேயோ பவத்பி: ஸத்த்வஸம்ஸ்திதை: |
ஓமித்யேவம் ஸதா விப்ரா: படத த்யாத கேஶவம் ||
(ஹரிவ. 3, 89, 9)

பித்யதே ஹ்ருதயக்ரந்திஶ் சித்யந்தே ஸர்வஸம்ஶயா: |
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே ||
(முண்டகோப. 2, 2, 8)

யந் நாமகீர்(த்)தனம் பக்த்யா விலாபனமனுத்தமம் |
மைத்ரேயாஶேஷபாபாநாம் தாதூநாமிவ பாவக: ||
(விஷ்ணுபு. 6, 8, 20)

அவஶேநாபி யந்நாம்நி கீர்(த்)திதே ஸர்வபாதகை: |
புமாந் விமுச்யதே ஸத்ய: ஸிம்ஹத்ரஸ்தைர் ம்ருகைரிவ ||
(விஷ்ணுபு. 6, 8, 19)

த்யாயந் க்ருதே யஜந் யஜ்ஞைஸ் த்ரேதாயாம் த்வாபரே'ர்(ச்)சயந் |
யதாப்நோதி ததாப்நோதி கலௌ ஸங்கீர்த்ய கேஶவம் ||
(விஷ்ணுபு. 6, 2, 17)

ஹரிர் ஹரதி பாபாநி துஷ்டசித்தை ரபி ஸ்ம்ருத: |
அநிச்சயாபி ஸம்ஸ்ப்ருஷ்டோ தஹத்யேவ ஹி பாவக: ||
(ப்ரு. நாரத. 1, 11. 100)

ஜ்ஞானதோ'ஜ்ஞானதோ வாபி வாஸுதேவஸ்ய கீர்(த்)தநாத் |
தத்ஸர்வம் விலயம் யாதி தோயஸ்தம் லவணம் யதா ||

யஸ்மிந் ந்யஸ்தமதிர் ந யாதி நரகம் ஸ்வர்(க்)கோ'பி யச்சிந்தனே
விக்னோ யத்ர நிவேஶிதாத்மமனஸோ ப்ராஹ்மோ'பி லோகோ'ல்பக: |

முக்திம் சேதஸி ய : ஸ்திதோ'மலதியாம் பும்ஸாம் ததாத்யவ்யய :
கிம் சித்ரம் யதகம் ப்ரயாதி விலயம் தத்ராச்யுதே கீர்(த்)திதே ॥
(விஷ்ணுபு. 6, 8, 57)

ஶமாயாலம் ஜலம் வஹ்நேஸ் தமஸோ பாஸ்கரோதய : |
ஶாந்தி: கலௌ ஹ்யகௌகஸ்ய நாமஸங்கீர்(த்)தனம் ஹரே : ||

ஹரேர் நாமைவ நாமைவ நாமைவ மம ஜீவனம் |
கலௌ நாஸ்த்யேவ நாஸ்த்யேவ நாஸ்த்யேவ கதிரன்யதா ॥

ஸ்துத்வா விஷ்ணும் வாஸுதேவம் விபாபோ ஜாயதே நர : |
விஷ்ணோ : ஸம்பூஜனந் நித்யம் ஸர்வபாபம் ப்ரணஶ்யதி ॥

ஸர்வதா ஸர்வகார்யேஷு நாஸ்தி தேஷாமமங்கலம் |
யேஷாம் ஹ்ருதிஸ்தோ பகவான் மங்கலாயதனம் ஹரி : ॥
(மஹாபா. சாந்தி 46, 113-4)

நித்யம் ஸஞ்சிந்தயேத் தேவம் யோகயுக்தோ ஜனார்(த்)தனம் |
ஸாஸ்ய மன்யே பரா ரக்ஷா கோ ஹினஸ்த்யச்யுதாஶ்ரயம் ||

கங்காஸ்நானஸஹஸ்ரேஷு புஷ்கரஸ்நானகோடிஷு |
யத் பாபம் விலயம் யாதி ஸ்ம்ருதே நஶ்யதி தத்தரௌ ॥
(கருடபு. 1, 228, 18)

முஹூர்(த்)தமபி யோ த்யாயேந் நாராயணமநாமயம் |
ஸோ'பி ஸித்திமவாப்நோதி கிம் புனஸ் தத்பராயண : ॥
(மஹாபா. அனு. 186, 13)

ப்ராயஶ்சித்தான்யஶேஷாணி தப: கர்மாத்மகானி வை |
யானி தேஷாமஶேஷாணாம் க்ருஷ்ணானுஸ்மரணம் பரம் ॥
(விஷ்ணுபு. 2, 6, 39)

கலிகல்மஷமத்யுக்ரம் நரகார்(த்)திப்ரதம் ந்ருணாம் |
ப்ரயாதி விலயம் ஸத்ய : ஸக்ருத் யத்ராநுஸம்ஸ்ம்ருதே ॥
(விஷ்ணுபு. 6, 8, 21)

ஸக்ருத்ஸ்ம்ருதோ'பி கோவிந்தோ ந்ருணாம் ஜன்மஶதை : க்ருதம் |
பாபராஶிம் தஹத்யாஶு தூலராஶிமிவாநல : ॥

யதாக்நிருத்ததஶிக: கக்ஷம் தஹதி ஸாநில : |
ததா சித்தஸ்திதோ விஷ்ணுர் யோகிநாம் ஸர்வகில்பிஷம் ॥
(விஷ்ணுபு. 6, 7, 74)

ஏகஸ்மிந்நப்யதிக்ராந்தே முஹூர்(த்)தே த்யானவர்ஜிதே |
தஸ்யுபிர் முஷிதேனேவ யுக்தமாக்ரந்திதும் ப்ருஶம் ॥

ரூபமாக இருப்பவன்); "யஜ்ஞோ வை விஷ்ணு:" (தைத். ஸம். 1, 7, 4) என்பது சுருதி யாதலால். (iii) வஷட்காரம் முதலிய மந்திரமாகிய எதனால் தேவர்கள் திருப்தி யடைகிறார்களோ, அது வஷட்கார: [அந்த மந்திரரூபமாக இருப்பவன்]; (iv) 'ப்ர ஜாபதிஸ்ச வஷட்காரஸ்ச' என்பது சுருதியாதலால், வஷட்கார: என்பது ஒரு தேவதை, [அந்த தேவதையாக இருப்பவன்]. "சதுர்பிஸ்ச சதுர்பிஸ்ச த்வாப்யாம் பஞ்சபிரேவ ச, ஹூயதே ச புநர் த்வாப்யாம் ஸ மே விஷ்ணு: ப்ரஸீதது" (விஷ் ணுஸ்.) என்பது முதலான ஸ்ம்ருதிகளாலும் (இப்பொருள் கிடைக்கிறது).

(4) பூதபவ்ய பவத் ப்ரபு: இறந்தகாலம் வருங்காலம் நிகழ் காலம் மூன்றையும் ஆள்வோன்; கால மாறுபாட்டுக்கு அடங் காததாய், உள்ளது என்னும் நிலைமை மட்டுமுள்ள ஆட்சி [ஐசுவர்யம்] இவனுக்கு இருப்பதால் பிரபுத்துவமுடையவன்.

(5) ரஜோ குணத்தை ஏற்று பிரமனாகிய ரூபங்கொண்டு உயிர்கள் முதலியவற்றை உண்டாக்குகிறான் என்பதால் பூதக்ருத்; (ii) தமோ குணத்தை மேற்கொண்டு ருத்திரனாய் உயிர்களை கொல் கிறான், வெட்டுகிறான், இம்சிக்கிறான் என்பதாலும் பூதக்ருத்.

(6) சத்துவ குணத்தை மேற்கொண்டு உயிர்களைத் தாங்கு கிறான், காக்கிறான், தரிப்பிக்கிறான் அல்லது போஷிக்கிறான் என்பதால் பூதப்ருத்.

(7) பிரபஞ்ச ரூபமாய் இருக்கிறான் என்பதால்; (ii) அல் லது, தான் மட்டுமேயாக இருக்கிறான் என்பதால் பாவ:; (iii) அல்லது, உள்ளது என்னும் தன்மையை யுடையவன் என்பதால்.

(8) பூதாத்மா—பூதானும் உயிர்களுக்கு ஆத்மா அந்தர்யாமி யாக இருப்பவன் என்பதால்; "ஏஷ த ஆத்மா அந்தர்யாம் யம்ருத:" (பிருஹ. உப. 3, 7, 3—22) என்பது சுருதி.

(9) உயிர்களை ஆக்குகிறான் என்பதால்; (ii) அல்லது, அவற்றைப் (பெருகும்படி செய்கிறான்) விருத்திசெய்கிறான் என்பதால், பூதபாவன:.

பூதக்ருத் முதலியவற்றால் முக்குணங்களுக்கு உட்படுவதாகிய தோஷம் கிடையாது என்று மறுத்துக் கூறுகிறார், [அடுத்த சுலோகத்திலே].

**पूतात्मा परमात्मा च मुक्तानां परमा गतिः ।**
**अव्ययः पुरुषः साक्षी क्षेत्रज्ञोऽक्षर एव च ॥ १५ ॥**

15. பூதாத்மா பரமாத்மா ச முக்தானாம் பரமா கதி:
அவ்யய: புருஷ: ஸாக்ஷீ க்ஷேத்ரஜ்ஞோ'க்ஷர ஏவ ச.

(10) பரிசுத்தமான ஆத்மாவை யுடையவன் எவனோ அவன் பூதாத்மா; "கேவலோ நிர்குணஸ்ச" (சுவேதா. உப. 6, 11) என்பது சுருதி; புருஷனுக்கு (ஆத்மாவுக்கு) குணங்களுடைய சேர்க்கை தன்னிச்சையாலேதான் உண்டாகிறது என்று குறிப்பிடப்படுகின்றது.

(11) பரம: சிறந்ததான, ஆத்மா, பரமாத்மா; காரிய காரணங்களுக்கு அப்பாற்பட்டதாகி அழிவில்லாது நிலைத்த நிலைமையும் தூய்மையும் ஞானமும் விடுதலையும் இயற்கையிலே அமைந்தது (நித்ய சுத்த புத்த முக்த ஸ்வபாவமுடையது) என்பதால்.

(12) முக்தானாம் (மோக்ஷத்தைப் பெற்றவர்களுக்கு) பரமா சிறந்த; கதி: அறிந்தடைவதற்குரிய தெய்வம்; அவனை யடைந்தவனுக்கு மீண்டும் திரும்புதல் என்பது இல்லை என்பதால். 'மாமுபேத்ய து கௌந்தேய புனர்ஜன்ம ந வித்யதே' என்பது பகவத் வசனம் (கீதை. 8, 16.)

(13) இவனுக்கு வ்யய: அழிவோ மாறுபாடோ, காணப்படுவதில்லை என்பதால் அவ்யய:; "அஜரோ' மரோ' வ்யய:" (ப்ருஹ 4, 4, 25.) என்பது சுருதி.

(14) புரம் சரீரம்; அதனுள்ளே சயனித்திருக்கிறான் என்பதால் புருஷ:; "நவத்வாரம் புரம் புண்ய மேதைர் பாவை: ஸமந்விதம், வ்யாப்ய ஸேதே மஹாத்மா யஸ் தஸ்மாத் புருஷ உச்யதே" என்பது மஹாபாரதம். (ii) அல்லது, "அஸ்தேர் வ்யத்யஸ்தாக்ஷர யோகாத்" என்பது பற்றி, புரா முன்னாலே ஆஸீத் இருந்தது என்று பதப் பிரிவு செய்து, [எல்லாவற்றிற்கும் முன்பு இருந்தவன் என்று] பொருள் கொண்டு, புருஷ: [என்னப்பட்டான்]; "பூர்வமேவாஹமிஹாஸமிதி தத் புருஷஸ்ய புருஷத்வம்" (தைத், ஆரண்ய. 1, 23) என்பது சுருதி. (iii) அல்லது, புருஷு மேம்பட்டவர்களுள் ஸீததி வசிக்கிறான் என்பதால்; (iv) அல்லது, புரூணி பலன்களை ஸநோதி கொடுக்கிறான் என்பதால்; (v) அல்லது புரூணி புவனங்களை (உலகங்களை), ஸம்ஹார காலத்திலே, ஸ்யதி அழிக்கிறான் என்பதால்; (vi) அல்லது, பூரணமாவது, (vii) அல்லது, நிலை பெற்றிருப்பது என்பதால் புருஷ:; "பூரணாத் ஸதனாச் சைவ ததோ' ஸௌ புருஷோத்தம:" என்பது ஐந்தாவது வேதம் (மகாபாரதம், உத்யோகப. 69, 11).

(15) ஸாக்ஷாத் வேறொன்றின் துணையுமின்றியே நேராக இயற்கையறிவால் (ஸ்வரூப போதத்தால்) எல்லாவற்றையும் காண்கிறான் என்பதால் ஸாக்ஷீ; "ஸாக்ஷாத் த்ரஷ்டரி ஸம்ஜ்ஞாயாம்" (5, 2, 91) என்னும் பாணினி வாக்கியத்தின்படி, 'இனி ப்ரத்யயம்' வந்தது.

(16) க்ஷேத்ரம் சரீரத்தை, ஜாநாதி [அறிகிறான்] என்பதால். க்ஷேத்ரஜ்ஞ:; "ஆதோ'னுப ஸர்(க்)கே க:" என்று (பாணினிஸூ. 3, 2, 3) 'கப்ரத்யயம்' (வந்தது). "க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி" என்பது பகவத் வசனம் (கீதை. 13, 2); "க்ஷேத்ராக்யாணி ஸரீராணி தேஷாம் சைவ யதாஸுகம், தானி வேத்தி ஸ யோகாத்மா தத: க்ஷேத்ரஜ்ஞ உச்யதே

என்பது ப்ரஹ்ம புராணம். [இது போன்றதொரு சுலோகம் (சாந்திப. 361, 6) மகாபாரதத்திலும் காணப்படுகிறது].

(17) அவனே அழியாதிருக்கிறன் என்பதால் அக்ஷர: பரமாத்மா; 'அம்ரோதேர் வா ஸரப்ரத்யயாந்தஸ்ய ரூபம் அக்ஷர:'' [என்பது இலக்கணக் குறிப்பு].

ஏவ என்னும் சொல்லால் க்ஷேத்ரஜ்ஞனும் அக்ஷரப் பொருளாவோனும் (நுணுகிப் பார்த்தால்) உண்மையில் வேறு அல்லர் என்பதும்—'தத் த்வமஸி' என்பது சுருதி—ச என்னும் சொல்லால், "ப்ரஸித்தேரப்ரமாணத்வாத்" என்னும் நியாயப்படி, விவகார தசையில் (லோக விவகாரத்தில்) பேதம் பிரமாணமாகாது என்பதும் குறிப்பிடப்பட்டன.

**योगो योगविदां नेता प्रधानपुरुषेश्वरः ।**
**नारसिंहवपुः श्रीमान्केशवः पुरुषोत्तमः ॥ १६ ॥**

16. யோகோ யோகவிதாம் நேதா ப்ரதானபுருஷேஶ்வர:
நாரஸிம்ஹ வபு: ஸ்ரீமான் கேஶவ: புருஷோத்தம:

(18) ஜ்ஞானேந்த்ரியாணி ஸர்வாணி நிருஹ்ய மனஸா ஸஹ
ஏகத்வபாவனா யோக: க்ஷேத்ரஜ்ஞபரமாத்மனோ:
ததவாப்யதயா யோக: இதி யோகவிதோ விது:

[க்ஷேத்ரஜ்ஞனையும் பரமாத்மாவையும் ஒன்றுகப் பாவிப்பது யோகம் அந்த (யோக) பாவனையால் அடையப்படுவோன் என்பதால்] யோக:.

(19) யோகம் [யோகத்தை] விதந்தி ஆராய்கிறர்கள், அறிகிறர்கள் அல்லது பெறுகிறர்கள் என்பதால் யோகவித:; அவர்களுடைய நேதா ஞானிகளுடைய யோக க்ஷேமங்களை வகிப்பது முதலான காரியங்களைச் செய்வதால் [தலைவன்] யோகவிதாம் நேதா; "தேஷாம் நித்யாபியுக்தானாம் யோக க்ஷேமம் வஹாம்யஹம்'' என்பது பகவத் வசனம் (கீதை. 9, 22).

(20) **ப்ரதானம்** பிரகிருதி, அதாவது, மாயை; புருஷ: ஜீவன்; இவ்விரண்டிற்கும் ஈசுவரன் **ப்ரதானபுருஷேஶ்வர:**.

(21) நரன், சிங்கம் இவ்விரண்டின் அவயவங்கள் எவ்வுருவிலே காணப்படுகின்றனவோ அவ்வுருவத்தை யுடையவன் **நாரஸிம்ஹவபு:**.

(22) எவனுடைய திருமார்பிலே திருமகள் நிரந்தரமாக அமர்ந்திருக்கிறளோ (நித்திய வாஸஞ் செய்கிறளோ) அவன் **ஸ்ரீமான்**.

(23) அழகு வாய்ந்த குஞ்சியை (தலை மயிரை) யுடையவன் **கேஶவ:**; "கேஶாத்வோऽந்யதரஸ்யாம்" (பாணினிஸூ. 5, 2, 109) என்பதால் புகழ்ச்சிப் பொருளிலே "வப்ரத்யயம்" வந்தது [இது இலக்கணக் குறிப்பு].; (ii) 'க:' என்னப்படும் பிரமனும், 'அ:' என்னப்படும் விஷ்ணுவும், 'ஈஶ:' என்னப்படும் உருத்திரனும் ஆகிய மூன்று மூர்த்திகளும் **கேஶா:**; அவர்கள் எவனுக்கு வசப்பட்டவர்களாக இருக்கிறர்களோ, அவன் **கேஶவ:**; (iii) அல்லது, கேஶி என்னும் அரக்கனைக் கொன்றதால் **கேஶவ:**; "யஸ்மாத் த்வயேஷ துஷ்டாத்மா ஹத: கேஶீ ஜநார்(த்)தன, தஸ்மாத் கேஶவ நாம்நா த்வம் லோகே க்யாதிம் கமிஷ்யஸி" என்பது விஷ்ணு புராணத்திலே (5, 16, 23) ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து நாரதர் சொன்ன வார்த்தை. "ப்ருஷோதராதித்வாச் சப்த ஸாதுத்வ கல்பனா" [இது இந்தச் சொல்லிற்கு இலக்கணக் குறிப்பு.]

(24) புருஷர்களுடைய (புருஷர்களுள்) உத்தமன் **புருஷோத்தம:**; இங்கு "ந நிர்தாரணே" (பாணினிஸூ. 2, 2, 10) என்பதுபற்றிய தடை (நிஷேதம்) இல்லை; [ஸமாஸத்திற்குரிய] ஆற்றல் (ஸாமர்த்தியம்) சாதி முதலியவற்றின் உதவியின்றியே [இங்கு] இருப்பதால்; எங்கு சாதி, குணம், செய்கை (கிரியை) இவற்றுல் வேறுபாடுபெற்றி [ஸமாஸத்திற்குரிய] ஆற்றல் வேண்டப்படுவதோ, அங்கு [இவ்வித ஸமாஸம் செய்வதற்கு] தடை

ஏற்படுகிறது; எவ்வாறு என்றால், மானுடரின் (மானுடருள்) க்ஷத்திரியன் சூரத்தால் மிக்கவன் [இது சாதி பற்றிய வேறுபாடு அமைந்தது] என்றும், பசுக்களின் (பசுக்களுள்) காராம் பசு பாலைத் தருவதிற் சிறந்தது; [இது குணம் பற்றிய வேறுபாடு அமைந்தது] என்றும், பிரயாணிகளின் (பிரயாணிகளுள்) ஓடுவோன் விரைவிற் செல்வோன் ஆவான் [இது கிரியை பற்றிய வேறுபாடு அமைந்தது] என்றும் [வரமாட்டா]; (ii) அல்லது ஐந்தாம் வேற்றுமை [தொக்கி நிற்பது] என்றும் கொள்ளலாம். பகவத் வசனமும் இவ்வாறு உள்ளது:

*யஸ்மாத் க்ஷரமதீதோ' ஹ மக்ஷராதபி சோத்தம:*
*அதோ'ஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம:*
(கீதை. 15, 18).

[(i) புருஷர்களுள் சிறந்தவன். (ii) க்ஷரப்பொருளைக் காட்டிலும் அக்ஷரப்பொருளைக் காட்டிலும் மேலானவன் என்பதால் புருஷோத்தம:].

**सर्वः शर्वः शिवः स्थाणुर्भूतादिर्निधिरव्ययः ।**
**सम्भवो भावनो भर्ता प्रभवः प्रभुरीश्वरः ॥ १७ ॥**

17. ஸர்வ: ஶர்வ: ஶிவ: ஸ்தாணுர் பூதாதிர் நிதிரவ்யய:
ஸம்பவோ பாவனோ பர்(த்)தா ப்ரபவ: ப்ரபுரீஶ்வர:

(25) *அஸதஶ்ச ஸதஶ்சைவ ஸர்வஸ்ய ப்ரபவாப்யயாத்*
*ஸர்வஸ்ய ஸர்வதா ஜ்ஞானாத் ஸர்வமேனம் ப்ரசக்ஷதே*
(மஹாபா. உத்யோக. 69, 11)

[ஸத் அஸத் என்று இருவகைப் பட்டவையான எல்லாப் பொருளும் இவனாலே தோன்றி மறைதலாலும், எல்லாவற்றையும் எப்பொழுதும் அறிவதாலும், இவனை 'ஸர்வ:' என்பர்] என்பது வியாச பகவானுடைய வசனமாதலால் ஸர்வ:.

(26) ஶ்ருஞ்தி ஸம்ஹார காலத்திலே சகல ஜீவராசிகளையும் அழிக்கிறான், அழிப்பிக்கிறான் என்பதால் ஶர்வ:.

(27) முக்குணங்களுக்கு உட்படாமல் தூயவனு யிருப்ப தால் ஶிவ:; ஸ ப்ரஹ்மா ஸ ஶிவ:'' (கை. உப. 8) என்று அபேதமே அறிவுறுத்தப்படுவதால் (உபதேசிக்கப்படுவதால்), சிவன் முதலான பெயர்களால் ஹரியே துதிக்கப்பெறுகிறுன்.

(28) நிலையுற்றவனுதலால் ஸ்தாணு:.

(29) உயிர்களுக்கு (பொருள்களுக்கு) ஆதி காரணமாயிருப் பதால் பூதாதி:.

(30) பிரளய காலத்திலே இவனிடத்திலே எல்லாப் பொரு ளும் க்ஷேமமாக வைக்கப் பெற்றிருப்பதால் நிதி:; 'கர்மண் யதிகரணே ச' என்று 'கி ப்ரத்யயம்' வந்தது [பாணினி. 3, 3, 93; இது இலக்கணக் குறிப்பு]. அந்த நிதியே [அடைமொழியால்] சிறப்பிக்கப்படுகின்றது, அவ்யய: என்று; அழியாத நிதி என்பது பொருள்.

(31) தன் இச்சைகொண்டு நன்கமைந்த பிறப்பை யுடைய வன் என்பதால் ஸம்பவ:

தர்மஸம்ஸ்தாபனர்(த்)தாய ஸம்பவாமி யுகே யுகே
(கீதை. 4, 8) என்பது பகவத் வசனம்.
அத துஷ்டவிநாஶாய ஸாதூனும் ரக்ஷணுய ச
ஸ்வேச்சயா ஸம்பவாம்யேவம் கர்(ப்)பது:கவிவர்ஜித:

என்பதையும் [காண்க].

(32) [பலன்களை] அனுபவிப்போர்கள் எல்லோருக்கும் [உரிய] பலன்களை உண்டாக்குகிறுன் என்பதால் பாவன:; எல்லோருக்கும் எல்லாப் பலன்களையும் [வகுத்து] அளிக்குந் தன்மையானது, 'பலமத உபபத்தே:' (ப்ரஹ்மஸூ. 3, 2, 38) என்றபடி, இங்கே (இந்தப் பெயராலே) விளக்கப்பட்டது.

(33) பிரபஞ்சத்திற்கு அதிஷ்டானமாகி (நிலைத்து நிற்கும் இடமாகி) அதனைத் தாங்குவதால் பர்(த்)தா.

(34) [ஐந்து] பெரும்பூதங்கள் இவனிடமிருந்தே சிறப்பாகத் தோன்றுதலால் ப்ரபவ:; (ii) அல்லது, சிறந்ததான பவ: பிறப்பு இவனுக்கு உண்டு என்பதால்.

(35) எல்லாச் செய்கைகளிலும் அளவு கடந்த திறமையுடையவன் என்பதால், ப்ரபு:.

(36) உபாதிகளால் பாதிக்கப்படாத (இயற்கையான) ஆட்சியுடையவன் என்பதால் ஈஶ்வர: 'ஏஷ ஸர்வேஶ்வர:' (மாண்டூக்யோப. 6) என்பது சுருதி.

**स्वयम्भूः शम्भुरादित्यः पुष्कराक्षो महास्वनः ।**
**अनादिनिधनो धाता विधाता धातुरुत्तमः ॥ १८ ॥**

18. ஸ்வயம்பூ: ஶம்புராதித்ய: புஷ்கராக்ஷோ மஹாஸ்வன:
அனாதிநிதனோ தாதா விதாதா தாதுருத்தம:

(37) தான் மட்டுமே இருக்கிறான் என்பதால் ஸ்வயம்பூ:; "ஸ ஏவ ஸ்வயமுத்பபௌ" என்பது மனுவசனம் (மனுஸ்மிருதி. 1, 7). (ii) எல்லாவற்றிற்கும் மேலாகிறான், (iii) அல்லது தானே [எல்லாம்] ஆகிறான் என்பதால் ஸ்வயம்பூ:; (iv) அல்லது, எவற்றிற்கு மேலாக வுள்ளானோ, எது மேலாகவுள்ளதோ, அவையும் அதுவுமாய் இருவகையாகவும் தானே ஆவதால் [ஸ்வயம்பூ:]. "பரிபூ: ஸ்வயம்பூ: (ஈஶாவாஸ். உப. 8) என்பது மந்திரவர்ணம். (v) அல்லது, ஸ்வயம்பூ: பரமேசுவரனாகிய தானே சுதந்திரமுடையவன் [பிறர்க்கு வசப்படாதிருப்பவன்] என்பதால்; "பராஞ்சி கானி வ்யத்ருணத் ஸ்வயம்பூ:" (கடோப. 2, 4, 1) என்பது மந்திரவர்ணம்.

(38) ஶம், சுகத்தைப் பக்தர்களுக்கு பாவயதி [அளிக்கிறான்] என்பதால் ஶம்பு:.

(39) ஆதித்திய மண்டலத்தின் உள்ளே இருக்கும் பொன்மயமான புருஷன் ஆதித்ய:; (ii) அல்லது, ஆதித்தியர் பன்னிரு

வருள் விஷ்ணு: என்பவன் ஆதலால்; "ஆதித்யாநு மஹம் விஷ்ணு:" (கீதை 10, 21) என்று சொல்லப்பட்டிருக்கிறது. (iii) அல்லது அதிதிக்கு, அதாவது, அகண்டமான பூமிக்கு இவன் கணவன் என்பதால் [ஆதித்ய:]. "இயம் வா அதிதி:" (தைத். ஸம். 5, 1, 7) என்பதும், "மஹீம் தேவீம் விஷ்ணு பத்னீம்" (தைத். ப்ராஹ. 3, 1, 2) என்பதும் சுருதி. (iv) அல்லது, எவ்வாறு ஆதித்யன் (சூரியன்) ஒருவனே நீர்நிலைகள் பலவற்றிலே பலர்போலத் தோற்றுகிறானோ, அவ்வாறே, பல சரீரங்களிலே ஆத்மா ஒன்றே பலர்போலத் தோற்றுகிறான் என்று ஆதித்யனோடுள்ள ஒப்புமை பற்றி, ஆதித்ய: [என்னப் படுகிறான்].

(40) தாமரை மலரோடு உவமிக்கப்பெற்ற இரண்டு கண்களை யுடையவன் என்பதால் புஷ்கராக்ஷ:.

(41) மஹான் சிறப்புடையதான (கம்பீரமான) ஸ்வந: நாதத்தையுடையவன்; (ii) அல்லது, சுருதியை (நாதமாக) உடையவன் எவனோ அவன் மஹாஸ்வந:; "ஸன் மஹத்" என்று தொடங்கும் சூத்திரத்தின்படி (பாணினிஸூ. 2, 1, 61) ஸமாஸத்தைக் கொண்டு, "ஆன்மஹத: ஸமாநாதிகரண ஜாதீயயோ:" (பாணினிஸூ. 6, 3, 46) என்று "ஆத்வம்" வந்தது. "அஸ்ய மஹதோ பூதஸ்ய நிச்வஸிதமேதத் ருக்வேதோ யஜுர்வேத:" (ப்ருஹ. உப. 2, 4, 10) என்பது சுருதி.

(42) ஆதி: பிறப்பு, நிதனம் அழிவு; இவை யிரண்டும் எவனுக்கு இல்லையோ அவன் அநாதிநிதந:.

(43) அனந்தன் (ஆதிசேஷன்) முதலிய ரூபங்களைக் கொண்டு எல்லாவற்றையும் (ஜகத் முழுவதையும்) தாங்குகிறான் என்பதால் தாதா.

(44) காரியங்களையும் அவற்றிற்குரிய பலன்களையும் செய்பவன் என்பதால் **விதாதா** [அதாவது, காரியங்களைச் செய்வித்து அவ்வவற்றிற்குரிய பலன்களையும் விதிப்பவன்].

(45) அனந்தன் முதலானவர்களையும் தாங்கும் தன்மை பற்றி [**தாதுருத்தம:**] (ii) அல்லது, தாங்கும் தன்மையைச் சிறப்பாக வுடையவன் என்பதால் **தாதுருத்தம:**; அடைமொழி கொண்டதான [இரு சொல்லும்] ஒரு பெயர். (iii) அல்லது, ஸாமாநாதிகரண்ய நியாயத்தால், ப்ருத்வீ (பூமி) முதலிய எல்லாத் தாதுக்களைக் காட்டிலும் சிறந்ததாயுள்ள 'சித்' என்னும் தாது (மூலப்பொருள்) என்பது இதற்குப் பொருள். (iv) அல்லது, வையதிகரண்ய நியாயத்தால், **தாது:** பிரமனைக் காட்டிலும் மேலானவன் என்பதால் [**தாதுருத்தம:**].

(45) (1) அல்லது, இரண்டு பெயர்களாகவும் [கொள்ளலாம்]. காரியம் காரணம் என்னப்படும் பிரபஞ்சத்தைத் தாங்கி நிற்பதால், 'சித்' என்பதே **தாது:** [மூலப்பொருள்]. (2) **உத்தம:** சிறந்து உயர்ந்தவர்கள் அனைவருக்கும் மேலாக உயர்ந்தவன் என்பதால் **உத்தம:**.

**अप्रमेयो हृषीकेशः पद्मनाभोऽमरप्रभुः ।**
**विश्वकर्मा मनुस्त्वष्टा स्थविष्ठः स्थविरो ध्रुवः ॥ १९ ॥**

19. அப்ரமேயோ ஹ்ருஷீகேஶ: பத்மநாபோ' மரப்ரபு:
விஶ்வகர்மா மனுஸ்த்வஷ்டா ஸ்தவிஷ்ட: ஸ்தவிரோ த்ருவ:

(46) சப்தம் முதலியவை (குணங்கள்) இல்லாமையால் புலன்களால் (பிரயத்யக்ஷமாக) அறிய இயலாது ; அநுமானத்தாலும் அறிய இயலாது ; ஏனென்றால், அதற்குரிய (வியாப்தமான லிங்கம்) அடையாளம் எதுவும் இல்லை ; உபமானத்தாலும் நிச்சயிக்க முடியாது ; ஏனென்றால், வகுத்துக்கூற இயலாததால் ஒப்புமைப் பொருள் இல்லை. அர்த்தாபத்தியாலும் அறிய இயலாது, அவனையில்லையென்றால் உபபன்னமாகாதது

இல்லையாதலால்; அபாவம் (இன்மை) என்னும் பிரமாணத்தா லும் அறிய இயலாது, பாவரூபன் (உண்மைப் பொருள்) ஆதலாலும், அபாவத்திற்கு ஸாக்ஷி (இன்மையைக் காண் போன்) ஆதலாலும். சாஸ்திரமாகிய பிரமாணத்தாலும் அறியப் படுவோன் அல்லன், இந்தப் பிரமாணத்தால் கிடைக்கக் கூடிய அறிவுக்குச் சிறப்பு (அதிசயம்) இல்லையாதலால். இவ்வாறானால், (சாஸ்திர யோனித்வம்) சாஸ்திரத்தால் அறியப்படுவோன் என் பது எப்படி என்றால், பிரமாணம் முதலியவற்றிற்குச் சாக்ஷியாகி (அவற்றைக் காண்போனாகி) பிரகாச ஸ்வரூபனாய் (விளக்க வடிவாகி) இருப்பவன், பிரமாணங்களுக்கு நில மல்லாதவன் [விஷயமாகாதவன்] ஆயினும், [அஞ்ஞானத்தால்] ஆரோபிக்கப் பெற்றதாயும், 'தத்' (பரம்பொருள்) அல்லாததாயுமான பொய்ப் பொருளை [மறுத்து] நீக்குவதால், சாஸ்திரம் பிரமாணமுடைய தாகின்றது; [இவ்வாறு] ஸாக்ஷி ஸ்வரூபனாதலால் (காண்போனா யிருப்பதால்) அப்ரமேய:.

(47) ஹ்ருஷீகாணி இந்திரியங்கள்; அவற்றிற்கு ஈசன் க்ஷேத்திரஜ்ஞ ரூபனாய் விளங்குகிறான்; (ii) அல்லது, இந்திரியங் கள் எவனுக்கு வசப்பட்டு இருக்கின்றனவோ அந்த பரமாத்மா ஹ்ருஷீகேஶ:; (iii) அல்லது, சூரிய சந்திர ரூபங்களைக்கொண்ட வனான எவனுக்கு, ஹ்ருஷ்டா: இன்பத்தைத் தருவனவாகிய கேஶா: கிரணங்கள் உள்ளனவோ, அவன் ஹ்ருஷீகேஶ:; "ஸூர்யரஶ்மிர் ஹரிகேஶ: புரஸ்தாத்" என்பது சுருதி. "ப்ருஷோதராதித்வாத் ஸாதுத்வம்" [என்பது இலக்கணக் குறிப்பு.] 'மோக்ஷ தர்ம'த்திலே இவ்வாறு சொல்லப்பட்டுள்ளது:

> ஸூர்யாசந்த்ரமஸௌ ஶஶ்வ தம்ஶுபி: கேஶஸம்ஜ்ஞிதை:
> போதயன் ஸ்வாபயம்ஶ்சைவ ஜகதுத்திஷ்டதே ப்ருதக்
> போதனாத் ஸ்வாபனாச் சைவ ஜகதோ ஹர்ஷணம் பவேத்
> அக்னீஷோமக்ருதைரேவம் கர்மபி: பாண்டுநந்தன
> ஹ்ருஷீகேஶோ'ஹமீஶானோ வரதோ லோகபாவன:
>
> (மஹாபா. சாந்தி. 352, 1-2.)

(48) சகல ஜகத்துக்கும் காரணமான தாமரையானது எவனுடைய [நாபியிலே] கொப்பூழிலே யுள்ளதோ அவன் பத்மநாப:; 'அஜஸ்ய நாபாவத்யேகமர்பிதம்' என்பது சுருதி (தைத். ஸம். 4 ,6, 2).

(49) அமரர்களுக்குப் பிரபு அமரப்ரபு :.

(50) விஶ்வம் (உலகு அனைத்தும்), கர்ம எவனுடைய செயலாக ஆயிற்றோ, அவன் விஶ்வகர்மா ; (ii) அல்லது, செய்யப்படுவதால் ஜகத்து கர்ம என்னப்படும், விஶ்வம் [ஜகத்து] என்னும் 'கர்ம' எவனுடையதோ அவன் விஶ்வகர்மா; (iii) அல்லது, விசித்திரமான நிர்மாண சக்தியை யுடையவன் என்பதாலும் விஶ்வகர்மா ; (iv) அல்லது, விஶ்வகர்மா த்வஷ்டா என்னப்படுபவனோடு ஒப்புமை யுடையவனுதலாலும், விஶ்வகர்மா.

(51) மனனஞ் செய்வதால், மனு :; "நான்யோ' தோ'ஸ்தி மந்தா" என்பது சுருதி (ப்ருஹ. உப. 3, 7, 23); (ii) அல்லது, மந்திர வடிவன் (iii) அல்லது, பிரஜாபதி (என்னும் தேவதை) மனு : (என்னப்படுகிருன்).

(52) ஸம்ஹார காலத்தில் சகல வுயிர்களையும் அழிப்பவன் (தனூகரணஞ் செய்பவன்) ஆதலால், த்வஷ்டா ; "த்வக்ஷதேஸ் தனூகரணார்(த்)தாத் த்ருச் ப்ரத்யய :" [என்பது இலக்கணக் குறிப்பு].

(53) மிகப் பெருத்தவன் ஸ்தவிஷ்ட :.

(54) (பண்டைப்) பழம் பொருளானவன் ஸ்தவிர :; "த்வேஷம் ஹ்யஸ்ய ஸ்தவிரஸ்ய நாம" என்பது பஹ்வ்ருச சுருதி (ருக் வேதம் 7, 100, 3) ; (ii) அல்லது, வயதானதைக் குறிப்பதும் ஆம் ; (ஸ்திரமாய்) நிலைத்திருப்பதால் த்ருவ :; ஸ்தவிரோ த்ருவ: என்பது அடைமொழி யுடைய (இரு சொற் கொண்ட) ஒரு பெயர்.

**अग्राह्यः शाश्वतः कृष्णो लोहिताक्षः प्रतर्दनः ।**
**प्रभूतस्त्रिककुब्धाम पवित्रं मङ्गलं परम् ॥ २० ॥**

20. அக்ராஹ்ய: ஶாஶ்வத: க்ருஷ்ணோ லோஹிதாக்ஷ: ப்ரதர்தன:
ப்ரபூதஸ்த்ரிககுப் தாம பவித்ரம் மங்கலம் பரம்.

(55) *கருமேந்திரியங்களால் உணரப்படாதவன் என்பதால்* அக்ராஹ்ய:; *"யதோ வாசோ நிவர்தந்தே அப்ராப்ய மனஸா ஸஹ" (தைத். உப. 2, 9) என்பது சுருதி.*

(56) *எல்லாக் காலத்திலும் இருப்பதால்* ஶாஶ்வத:; *"ஶாஶ்வதம் ஶிவமச்யுதம்" (நாரா. உப. 13, 1) என்பது சுருதி.*

(57) *ஸச்சிதானந்த ரூபன்* க்ருஷ்ண:;

*க்ருஷிர் பூவாசக: ஶப்தோ ணஶ்ச நிர்வ்ருதிவாசக:*
*விஷ்ணுர் தத்பாவயோகாச்ச க்ருஷ்ணோ பவதி ஶாஶ்வத:*

*என்பது வியாஸ வசனம் (மஹாபா. உத்யோக. 69, 5). [க்ருஷி: என்பது 'ஸத்' உண்மைப்பொருள்; 'ண' என்பது ஆனந்தம், இவை எவனிடத்தில் எப்போதும் சேர்ந்திருக்கின்றனவோ அந்த விஷ்ணு க்ருஷ்ண:]. (ii) அல்லது, கரிய நிறமுடையவன் ஆதலால் க்ருஷ்ண:.*

*க்ருஷ்ணோ வர்ணஶ்ச மே யஸ்மாத் தஸ்மாத் க்ருஷ்ணோஹமர்ஜுந*

*என்பது மஹா பாரதம் (சாந்தி. 352, 14).*

(58) *சிவந்த கண்களையுடையவன் என்பதால்* லோஹிதாக்ஷ:; *"ஸமா வ்ருஷபோ லோஹிதாக்ஷ:" என்பது சுருதி (தைத். ஆரண்ய. 4, 42).*

(59) *பிரளய காலத்தில் உயிர்களை* ப்ரதர்தயதி *கொல்கிறான் என்பதால்* ப்ரதர்தன:.

(60) *ஞானம் ஐசுவரியம் முதலிய குணங்களால் நிறைந்தவன் ஆதலால்,* ப்ரபூத:.

(61) மேல் கீழ் மத்தியம் என்றும் வேறுபடுத்திய ஆகாச மண்டலம் மூன்றும் இவனுக்கு இருப்பிடம் ஆகையால், **த்ரிககுப்தாம** ; இது ஒரே பெயர் ஆகும்.

(62) எதனால் தூய்மைப்படுவதோ, (ii) அல்லது, எது தூய்மைப்படுத்துகிறதோ, அந்த ரிஷியும் மந்திரமும் அல்லது தேவதை **பவித்ரம்**; [(i) ரிஷியாயும் மந்திரமாயும் இருப்பவன் (ii) தேவதையாயிருப்பவன்]; "புவ : ஸம்ஜ்ஞாயாம் " (பாணினி ஸூ. 3, 2, 185) என்றும், " கர்தரி சர்ஷிதேவதயோ :" (பாணினி ஸூ. 3, 2, 186) என்றும் பாணினி பகவான் சொல்லியிருப்பதால், 'இத்ர ப்ரத்யய:' [என்பது இலக்கணக் குறிப்பு].

(63) அஶுபாநி நிராசஷ்டே தநோதி ஶுபஸந்ததிம்
ஸ்ம்ருதிமாத்ரேண யத் பும்ஸாம் ப்ரஹ்ம தந் மங்கலம் விது :

[எவன் நினைத்த மாத்திரத்திலே மனிதர்களுக்கு நேரும் அசுபங்களை விலக்கியும் சுபங்களை இடையறாது பெருக்கியும் செய்கிறானோ, அவன் பிரும்மம்; அவனை 'மங்கலம்' என்று அறிகிறார்கள்] என்னும் ஸ்ரீ விஷ்ணு புராண வாக்கியத்தால், (ii) அல்லது, மங்களமான ரூபமுடையவனாதலால் **மங்கலம் ; பரம்** என்பது பிரும்மம் எல்லா வுயிர்களினும் சிறந்ததான மங்களப் பொருள் என்பதைக் குறிப்பது ; **மங்கலம் பரம்** என்னும் இது அடைமொழியுடைய ஒரே பெயர் ஆகும்.

**ईशानः प्राणदः प्राणो ज्येष्ठः श्रेष्ठः प्रजापतिः ।**
**हिरण्यगर्भो भूगर्भो माधवो मधुसूदनः ॥ २१ ॥**

21. **ஈஶாந: ப்ராணத: ப்ராணோ ஜ்யேஷ்ட: ஶ்ரேஷ்ட: ப்ரஜாபதி:**
**ஹிரண்யகர்போ பூகர்போ மாதவோ மதுஸூதன:**

(64) எல்லா வுயிர்களையும் நியமிப்பதால் **ஈஶாந :**.

(65) பிராணன்களை, ததாதி இயக்குவதால் ப்ராணத: 'கோஹ்யேவான்யாத் க: ப்ராண்யாத்' என்பது சுருதி (தைத். உப 2, 7); (ii) அல்லது, பிராணன்களை த்யதி காலனது வடிவு கொண்டு துண்டிக்கிறான்; (iii) அல்லது, பிராணன்களை தாபயதி சுத்தமாக்குகிறான் என்பதால்; (iv) அல்லது, பிராணன்களை தாதி அழிக்கிறான் என்பதாலும் ப்ராணத:.

(66) உயிர்க்கிறான் என்பதால் ப்ராண: க்ஷேத்ரஜ்ஞன்; (ii) அல்லது, பரமாத்மா; ப்ராணஸ்ய ப்ராணம்" என்பது சுருதியாதலால் (ப்ருஹ. உப. 4, 4, 18); (iii) அல்லது, முக்கியப் பிராணன் [என்றும் பொருள் கொள்ளலாம்].

(67)—(68) மிக்க மூப்புடையது ஜ்யேஷ்ட:; "ஜ்ய ச" (பாணினிஸூ. 5, 3, 61) என்னும் அதிகாரத்தில், 'வ்ருத்தஸ்ய ச' என்று 'விருத்த' என்னும் சொல்லுக்கு 'ஜ்ய' ஆதேசம் குறித்திருப்பதால்; [இது இலக்கணக் குறிப்பு]. மிகவும் சிலாக்கியமானது ஶ்ரேஷ்ட:; "ப்ரஶஸ்யஸ்ய ஶ்ர:" என்னும் (பாணினிஸூ. 5, 3, 60) ஆதேசம் குறித்திருப்பதால்; (ii) அல்லது, 'ப்ராணோ வாவ ஜ்யேஷ்டஶ்ச ஶ்ரேஷ்டஶ்ச' என்னும் (சாந்தோ. 5, 1, 1) சுருதியால், முக்கியப் பிராணன்; 'ஶ்ரேஷ்டஶ்ச' என்னும் (ப்ரஹ்ம. ஸூ. 2, 4, 8) அதிகரணத்தின்படி, எல்லாவற்றிற்கும் காரணமா யிருப்பதால் ஜ்யேஷ்ட:; எல்லாவற்றையும் கடந்து மேலாயிருப்பதால் ஶ்ரேஷ்ட:.

(69) ஈசுவரனாகி எல்லா (ப்ரஜை) வுயிர்களுக்கும் பதி (தலைவன்) ஆவதால் ப்ரஜாபதி:.

(70) பொன் மயமான அண்டத்தினுள் இருப்பதால், விரிஞ்சி [பிரமன்] ஹிரண்யகர்ப: என்னப்படுவோன்; [அந்த] பிரமனுடைய ஆத்மா. "ஹிரண்யகர்ப: ஸமவர்த தாக்ரே" என்பது சுருதி (ருக். ஸம். 10, 121, 1)

(71) பூமியை கர்ப்பத்தில் (ஹ்ருதயத்தில்) உடையவன் **பூகர்ப:.**

(72) மாயா: திருவின் தவ: கேள்வன் **மாதவ:**; (ii) அல்லது, 'மது வித்யை'யால் உணர்வதற்கு உரியவன் ஆதலால்; (iii) "மௌனாத் த்யானாச்ச யோகாச் ச வித்தி பாரத மாதவம்" என்னும் வியாச வசனத்தால் (மஹாபா. உத்யோக. 69, 4) **மாதவ:.**

(73) மது என்னும் பெயர்கொண்ட அசுரனைக் கொன்றவன் என்பதால் **மதுஸூதன:.**

*கர்ணமிச்ரோத்பவம் சாபி மதுநாமமஹாஸுரம்*
*ப்ரஹ்மணோ'பசிதிம் குர்வந் ஜகான புருஷோத்தம:*
*தஸ்ய தாத வதாதேவ தேவதானவமானவா:*
*மதுஸூதன இத்யாஹுர் ருஷயச்ச ஜனார்தனம்*

என்பது மஹாபாரதம் (பீஷ்ம. 67, 13—15).

**ईश्वरो विक्रमी धन्वी मेधावी विक्रमः क्रमः ।**
**अनुत्तमो दुराधर्षः कृतज्ञः कृतिरात्मवान् ॥ २२ ॥**

22. ஈச்வரோ விக்ரமீ தன்வீ மேதாவீ விக்ரம: க்ரம:
அநுத்தமோ துராதர்ஷ: க்ருதஜ்ஞ: க்ருதி ராத்மவான்

(74) சர்வ சக்திமானாதலால் **ஈச்வர:.**

(75) விக்ரம: சூரத்தனம்; அதனை யுடையவன் **விக்ரமீ.**

(76) தனு வில்; அதனை யுடையவன் **தன்வீ**: "வ்ரீஹ்யாதித்வாத் இனி ப்ரத்ய:" [என்பது இலக்கணக் குறிப்பு]. 'ராம: சஸ்த்ரப்ருதாமஹம்' (கீதை 10—31) என்பது பகவத்வசனம்.

(77) மேதா பல நூல்களை மனதிலே தரிக்கும் திறமை; அதனை யுடையவன் **மேதாவீ**; "அஸ்மாயா மேதாஸ்ரஜோ விநி:";

(பாணினிஸூ. 5, 2, 121) என்று விநிப்ரத்யயம் வந்தது [என்பது இலக்கணக் குறிப்பு].

(78) ஜகத்து முழுவதையும் கடந்தான் என்பதால் **விக்ரம:**; (ii) அல்லது வி கருடப் பறவை; அதன் மீது ஏறிச் செல்வதால் **விக்ரம:**.

(79) **க்ரமணுத்** அடியெடுத்து வைப்பதால், அதாவது, வியாபித்திருப்பதால்; (ii) அல்லது, கிரமணத்திற்கு (வியாபிப்பதற்கு)க் காரணமா யிருப்பதால் **க்ரம:**; "க்ராந்தே விஷ்ணும்" (மனுஸ். 12, 121) என்பது மனு வசனம்.

(80) இவனினும் சிறந்தோன் அறியப்படாதலால் **அனுத்தம:**; "யஸ்மாத் பரம் நாபரமஸ்தி கிஞ்சித்" (நாரா. உப. 12, 3) என்பது சுருதி; "நத்வத்ஸமோ'ஸ்த்யப்யதிக: குதோன்ய:" என்பது ஸ்மிருதி (கீதை. 11, 43).

(81) தைத்தியர்கள் (அசுரர்கள்) முதலியவர்களால் [இவனை] பயமுறுத்த முடியாது என்பதால் **துராதர்ஷ:**.

(82) பிராணிகள் செய்யும் புண்ணிய பாபங்களை அறிவோனுதலால் **க்ருதஜ்ஞ:**; (ii) அல்லது, (பத்ரம் புஷ்பம்) பச்சிலை பூ முதலியவற்றை சிறிது கொடுத்தாலும் மோக்ஷத்தைத் தருவோன் ஆதலால்.

(83) **க்ருதி:** மனிதர் செய்யும் பிரயத்தினம்; (ii) அல்லது, [அவர்கள் செய்யும்] கிரியை. (iii) அல்லது, எல்லாமாய் இருந்துகொண்டு, அதற்கு (அதாவது, அந்த பிரயத்தினம் கிரியை இவைகளுக்கு) ஆதாரமா யிருந்து (தனது) செயலால் விளங்குகிறுன் என்பதால் **க்ருதி:**.

(84) தன் மகிமையிலே நிலைத்திருப்பதால் **ஆத்மவான்**; "ஸ பகவ: கஸ்மின் ப்ரதிஷ்டித இதி ஸ்வே மஹிம்நி" (சாந். உப. 7, 24, 1) என்பது சுருதி.

**सुरेशः शरणं शर्म विश्वरेताः प्रजाभवः ।**
**अहः संवत्सरो व्यालः प्रत्ययः सर्वदर्शनः ॥ २३ ॥**

23. ஸுரேஶ: ஶரணம் ஶர்ம விஶ்வரேதா: ப்ரஜாபவ:
அஹ: ஸம்வத்ஸரோ வ்யால: ப்ரத்யய: ஸர்வதர்ஶந:

85. *ஸுராணாம் தேவர்களின், ஈஶ: (பிரான்)* ஸுரேஶ:; (ii) *அல்லது, 'ஸுபப்ரதாவா ராதாது:'* [*என்பது இலக்கணக் குறிப்பு*]; *நன்மை யளிப்போர்க்குத் தலைவன்* ஸுரேஶ:.

(86) *(ஆர்த்தர்களின்) துன்புறுவோர்களின் (ஆர்த்திகளை) துன்பங்களை அழிப்பவனாதலால்* ஶரணம். [*ஸ்ரீராமனைப்பற்றிய சுலோகத்தைப் பின்பற்றி அவனே சரணியன் என்று குறிப்பிடுகிறார்*].

(87) *பரமானந்த வடிவினாதலால்* ஶர்ம.

(88) விஶ்வம் [*ஜகத்து*], *அதற்குக் காரணமாதலால்* விஶ்வரேதா:.

(89) *எல்லா (பிரஜைகளும்) உயிர்களும் எவனுடைய பக்கலிலிருந்து உற்பத்தியாகின்றனவோ, அவன்* ப்ரஜாபவ:.

(90) *பிரகாச (ஒளி) வடிவினனாதலால்,* அஹ:.

(91) *கால வடிவுகொண்டிருப்பதால் விஷ்ணு* ஸம்வத்ஸர: *என்னப்படுகிறான்.*

(92) *(வ்யாலத்தைப்போல்) பாம்பைப்போல் பற்றுவதற்கு இயலாத தன்மையை யுடையவனாகையால்* வ்யால:.

(93) *ப்ரதீதி என்னும் பிரக்ஞையே* ப்ரத்யய:; *"ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம" என்பது சுருதி (ஐத. உப. 3, 5, 3);* [*ஞான வடிவன்*].

(94) *எல்லா மார்க்கங்களாகிய (தர்சனங்களாகிய) கண்களையும் உடையவன்* ஸர்வதர்ஶந:, *எல்லாவற்றுள்ளும் இருப்பதால்; "விஶ்வதஶ்சக்ஷு:" (ஶ்வே. உப. 3, 3); "விஶ்வாக்ஷம்" (நாரா. உப. 13, 1) என்பன சுருதி.*

**अजः सर्वेश्वरः सिद्धः सिद्धिः सर्वादिरच्युतः ।**
**वृषाकपिरमेयात्मा सर्वयोगविनिःसृतः ॥ २४ ॥**

24. அஜ: ஸர்வேச்வர: ஸித்த: ஸித்தி: ஸர்வாதிரச்யுத:
வ்ருஷாகபிரமேயத்மா ஸர்வயோகவிநி:ஸ்ருத:

(95) *பிறவாதவனுதலால் அஜ:; "ந ஜாதோ ந ஜநிஷ்யதே"* (ருக்வே. 1, 81,5)

*ந ஹி ஜாதோ ந ஜாயேய ந ஜநிஷ்யே கதாசன*
*க்ஷேத்ரஜ்ஞ : ஸர்வபூதானும் தஸ்மாதஹம் அஜ : ஸ்ம்ருத :*
(*சாந்தி*. 352, 9.)

*என்பது மஹாபாரதம்.*

(96) *எல்லா ஈசுவரர்களுக்கும் ஈசுவரன்* ஸர்வேச்வர :; "*ஏஷ ஸர்வேச்வர :" என்பது சுருதி (மாண்டூக்யோப.* 6).

(97) *எப்பொழுதும் (நிஷ்பன்னன்) உள்ளவன் என்பதால்* **ஸித்த :.**

(98) *எல்லாப் பொருளிலும் (ஸம்வித் ஞானரூபனுய்) அறிவு வடிவனுய்;* (ii) *அல்லது, நிரதிசய ரூபனுய் இருப்பதால், [அவனே]* ஸித்தி : *[பலன்]; சுவர்க்கம் முதலியன அழிவுறுவன வாதலால், அவை பலன் ஆகமாட்டா.*

(99) *எல்லா உயிர்களுக்கும் ஆதி காரணனுதலால்* ஸர்வாதி:.

(100) *தன் இயற்கைத் திறனுல் முன்பு வழுவாதும் இப்பொழுது வழுவாமலும் இனி வழுவாதவாறும் இருக்கிருன் என்பதால்* **அச்யுத :** *"ஶாஶ்வதம் ஶிவமச்யுதம்" (நாரா. உப.* 13, 1) *என்பது சுருதி. இவ்வாறே பகவத் வசனமும் : "யஸ்மாத் ந ச்யுதபூர்வோ'ஹம் அச்யுதஸ் தேந கர்மணு" (மஹாபாரத. சாந்தி.* 352, 16).

*இவ்வாறு முதல் நூறு பெயர்களுக்கு விரிவுரை செய்யப் பட்டது.*

(101) எல்லா விருப்பங்களையும் வர்ஷிப்பதால் (பொழிந்து தருவதால்), தருமம் **வ்ருஷப:** என்னப்படும்; காத் நீரிலிருந்து பூமியை அபாத் காப்பாற்றியது என்பதால் வராகம் **கபி:** என்னப்பட்டது; விருஷ ரூபியாகவும் கபிரூபியாகவும் இருந்தவன் **வ்ருஷாகபி:**; "கபிர்வராஹ: ஶ்ரேஷ்டஶ்ச தர்மஶ்ச வ்ருஷ உச்யதே, தஸ்மாத் வ்ருஷாகபிம் ப்ராஹ காஶ்யபோ மாம் ப்ரஜாபதி:" என்பது மஹாபாரதம் (சாந்தி. 352, 24).

(102) இத்தன்மையது என்று மாதும் வகுத்து அளவிடுவதற்கு முடியாதது இவனுடைய ஆத்மா (இயல்பு) என்பதால் **அமேயாத்மா.**

(103) எல்லாத் தொடர்பும் (ஸம்பந்தமும்) நீங்கியவன் **ஸர்வயோகவிநி:ஸ்ருத:**; "அஸங்கோ ஹ்யயம் புருஷ:" என்பது சுருதி (ப்ரஹ. உப. 4, 3, 15); (ii) அல்லது, பல்வேறு சாஸ்திரங்களிலும் சொல்லப்பட்ட யோகங்களுக்கும் அப்பாற்பட்டவன் என்பதால்.

वसुर्वसुमनाः सत्यः समात्माऽसम्मितः समः ।
अमोघः पुण्डरीकाक्षो वृषकर्मा वृषाकृतिः ॥ २५ ॥

25. வஸுர்வஸுமனா: ஸத்ய: ஸமாத்மா' ஸம்மித: ஸம:
அமோக: புண்டரீகாக்ஷோ வ்ருஷகர்மா வ்ருஷாக்ருதி:

(104) எல்லா வுயிர்களும் இவனிடத்திலே வாசஞ் செய்கின்றன (உறைகின்றன), (ii) அல்லது, அவற்றுள் இவனும் வாசஞ் செய்கிறான் என்பதால் **வஸு:**; (iii) அல்லது, 'வஸூனாம் பாவகஶ்சாஸ்மி' (கீதை, 10, 23) [வஸுக்களுள் பாவகன் என்னும் வஸு நான்] என்பதால், [பாவகன் என்னும்] **வஸு:.**

(105) தனம் (செல்வம்) என்னும் பொருளைக் குறிக்கும் 'வஸு' என்னும் சொல்லால் சிறப்புற்றது என்பது குறிக்கப்படும். சிறப்புற்ற மனதை யுடையவன் எவனோ அவன் **வஸு**

மணு:; விருப்பு வெறுப்பு முதலிய கிலேசங்களாலும் மதம் (கொழுப்பு) முதலிய உபக்கிலேசங்களாலும் சித்தம் கலக்கமுறாத காரணத்தால் அவனுடைய மனது சிறப்புற்றது. [அவித்யை, அஸ்மிதை, ராகம், த்வேஷம், அபிநிவேசம் என்பன ஐந்தும் கிலேசம்].

(106) பொய்யாகாத ரூபமுடையவனாதலால் பரமாத்மா ஸத்ய:; "ஸத்யம் ஜ்ஞானமனந்தம் ப்ரஹ்ம" என்பது சுருதி (தைத். உப. 2, 1, 1); அல்லது, மூர்த்தமும் (உருவமும்) மூர்த்தமின்மையும் (அருவமும்) உள்ளவன் ஆதலால்; "ஸச்சத்யச்சாபவத்" என்பது சுருதி (தைத். உப. 2, 6); (iii) அல்லது, ஸத் என்றால் பிராணன்; தி என்றால் அன்னம்; யம் என்றால் சூரியன்; இவ்வாறு, பிராணன், அன்னம், ஆதித்தியன் ஆகிய ரூபங்களை யுடையவன் என்பதால் ஸத்ய:; "ஸதிதி ப்ராணஸ்தீத்யன்னம் யமித்யஸாவாதித்ய:" என்பது சுருதி (ஐதரேய. ஆரண்யக. 2, 1, 5, 6); (iv) அல்லது, நல்லோர்க்கு நல்லவன் என்பதால் ஸத்ய:.

(107) எவனுடைய ஆத்மா மனமானது, ஒரு நிலைப்பட்டதாய் விருப்பு வெறுப்பு முதலியவற்றால் கேடுறாமலிருப்பதோ அவன் ஸமாத்மா; (ii) அல்லது, எல்லா உயிர்களுக்கும் (பொருட்களுக்கும்) ஸம: ஒன்றேயான ஆத்மாவாதலால்; "ஸம ஆத்மேதி வித்யாத்" என்பது சுருதி (கௌஷீதகி. உப. 3, 9).

(108) பொருளின் தொகுதி (அர்த்த ஜாதங்கள்) எல்லாவற்றாலும் அளவிடப்பட்டவன் மித:, எல்லாவற்றாலும் அளவிடப்படாதவன் அமித: என்பதால் அஸம்மித:.

(109) எந்தக் காலத்திலும் எவ்வித மாறுபாடும் இல்லாதவன் என்பதால் ஸம:; (ii) அல்லது, மயா லக்ஷ்மீயோடு இருக்கிறான் என்பதால் ஸம:.

(110) பூஜிக்கப்பெற்றும் ஸ்துதிக்கப்பெற்றும் அல்லது நினைக்கப் பெற்றும் எல்லாப் பலன்களையும் கொடுக்கிறான்;

(ஒன்றையும்) வீண்போக்குவதில்லை என்பதால் அமோக:; (ii) அல்லது, பொய்யாகாத ஸங்கல்பத்தை (மனோபாவத்தை) யுடையவன் என்பதால், "ஸத்யகாம: ஸத்யஸங்கல்ப:" என்பது சுருதி (சாந்தோ. உப. 8, 7, 1).

(111) ஹ்ருதயத்திலுள்ள தாமரையில், அஶ்னுதே வியாபித்திருக்கிறான் (பரந்துளன்), அங்கே (ஞானத்தால்) காணப்படுகிறான் என்பதால் புண்டரீகாக்ஷ: ; "யத் புண்டரீகம் புரமத்ய ஸம்ஸ்தம்" என்பது சுருதி; (ii) அல்லது, தாமரை வடிவு கொண்ட இரண்டு கண்களையுடையவன் என்பதால்.

(112) தருமமாகிய காரியத்தைச் செய்வோன் என்பதால் வ்ருஷகர்மா.

(113) தருமத்தின் பொருட்டு ஆக்ருதி: சரீரம் எவனுக்கு உள்ளதோ அவன் வ்ருஷாக்ருதி: ; "தர்மஸம்ஸ்தாபனார்(த்)தாய ஸம்பவாமி யுகே யுகே" என்பது பகவத் வசனம் (கீதை 4, 8).

**रुद्रो बहुशिरा बभ्रुर्विश्वयोनिः शुचिश्रवाः ।**
**अमृतः शाश्वतः स्थाणुर्वरारोहो महातपाः ॥ २६ ॥**

26. ருத்ரோ பஹுஶிரா பப்ருர் விஶ்வயோனி: ஶுசிஶ்ரவா:
அம்ருத: ஶாஶ்வத: ஸ்தாணுர் வராரோஹோ மஹாதபா:

(114) ஸம்ஹார காலத்தில் உயிர்களை ஒடுக்கி (சங்கரித்து) கதறும்படி செய்கிறான் என்பதால் ருத்ர: ; (ii) அல்லது, ருதம் (துன்பத்தை அல்லது நன்மையை) ராதி கொடுக்கிறான் என்பதால்; (iii) அல்லது ரு: துக்கம் அல்லது துக்கத்திற்குக் காரணம்; இதனை த்ராவயதி ஓடும்படி செய்கிறான் என்பதால் ருத்ர: (iv,) (v): அல்லது, அழுகிறான் அல்லது பெருங் கூச்சல் போடுகிறான் என்பதால் ருத்ர: என்று சொல்லப்படுகிறான்; "ருர் து: கம் து: கஹே

தும் வா வித்ராவயதி ஸ ப்ரபு: , ருத்ர இத்யுச்யதே தஸ்மாச் சிவ: பரம காரணம்'' என்பது லிங்க புராண வசனம்.

(115) பல தலைகளையுடையவன் என்பதால் பஹுஶிரா: ; "ஸஹஸ்ரஶீர்ஷா புருஷ:" (புருஷஸூ. 1) என்பது மந்த்ர வர்ணம்.

(116) உலகங்களை காப்பாற்றுகிறான் என்பதால் பப்ரு:.

(117) எல்லாவற்றிற்கும் காரணமாதலால் விஶ்வயோனி:.

(118) பரிசுத்தமான ஶ்ரவாம்ஸி கேட்கத் தக்க பெயர்களை யுடையவன் என்பதால் ஶுசிஶ்ரவா:.

(119) ம்ருதம் மரணம் இவனுக்கு இல்லை என்பதால் அம்ருத: ; "அஜரோ'மர:" என்பது சுருதி (ப்ரஹ. உப. 4, 4, 25).

(120) சாசுவதமாய் (என்று முள்ளதாய்) ஸ்தாணுவாய் (நிலை பெற்றதாய்) இருப்பதால் ஶாஶ்வதஸ்தாணு:.

(121) சிறந்த ஆரோஹ: சரீரம் எவனுக்கு உண்டோ அவன் வராரோஹ:; (ii) அல்லது, எவனிடத்திலே ஏறியுறைவது சிறந்ததோ அவன்; அவனிடத்திலே உறைவோருக்கு மீண்டும் இறங்குவது இல்லையாதலால்; "ந ச புனராவர்(த்)ததே" என்பது சுருதி (சாந்தோ. உப. 8, 15, 1); "யம் ப்ராப்ய ந நிவர்த்தந்தே" என்பது ஸ்மிருதி (கீதை 8, 21).

(122) சிருஷ்டிப் பொருளைப் பற்றிய தப: ஞானம் எவனுக்கு மஹத் (பெரிதோ), அவன் மஹாதபா:; "யஸ்ய ஜ்ஞானமயம் தப:" என்பது சுருதி (முண்டகோப. 1, 1, 9); (ii) அல்லது, தப: என்பது ஐசுவரியம் (ஆளுந்திறன்), அல்லது, பிரதாபம்; அதனை அதிகமுடையவன் என்பதால் மஹாதபா:.

**सर्वगः सर्वविद्भानुर्विष्वक्सेनो जनार्दनः ।**
**वेदोवेदविदव्यङ्गो वेदाङ्गो वेदवित्कविः ॥ २७ ॥**

27. ஸர்வக : ஸர்வவித்பானுர் விஷ்வக்ஸேனோ ஜனார்தன :
வேதோ வேதவிதவ்யங்கோ வேதாங்கோ வேதவித்கவி :

(123) எங்கும் செல்கிறான் என்பதால் ஸர்வக: ; (அதாவது) காரணப் பொருளாய் எங்கும் வியாபித்திருப்போன்.

(124) ஸர்வம் [எல்லாவற்றையும்] வேத்தி [அறிகிறான்], (ii) அல்லது, விந்ததி [பெறுகிறான்] என்பதால் ஸர்வவித் ; பிரகாசிப்பதால் பானு : ; "தமேவ பாந்தமனுபாதி ஸர்வம்" என்பது சுருதி (கடோப. 2, 2, 15); "யாதாதித்யகதம் தேஜ :" என்று தொடங்கியுள்ளது ஸ்மிருதியும் (கீதை 15, 12). ஸர்வவித்தும் பானுவும் ஆவோன் ஸர்வவித்பானு :.

(125) எவன் யுத்தஞ் செய்ய முயன்ற மாத்திரத்திலே அரக்கர் சேனை விஷ்வக் [எல்லாப்புறமும்] அஞ்சதி ஓட்டமெடுக்கின்றதோ அவன் விஷ்வக்ஸேன :.

(126) ஜனன் கெட்ட மனிதர்களை அர்தயதி அழிக்கிறான்; (ii) அல்லது, நரகம் முதலிய இடங்களுக்குப் போகும்படி செய்கிறான் என்பதால் ஜனார்தன: ; (iii) அல்லது, ஜனை: மனிதர்களால், (அப்யுதயம், நிச்ரேயஸ்) க்ஷேம மோக்ஷங்களாகிய புருஷார்த்தத்தைப் பெறுவதற்காக யாசிக்கப் படுகிறான் என்பதால் ஜனார்தன :.

(127) அறிவிப்போன் என்பதால் வேத : ; "தேஷாமேவானுகம்பார்(த்)த மஹமஜ்ஞானஜம் தம: , நாமயாம்யாத்மபாவஸ்தோ ஜ்ஞானதீபேன பாஸ்வதா" என்பது பகவத் வசனம் (கீதை. 10, 11).

(128) உள்ளபடி வேதப்பொருளை அறிவோன் என்பதால் வேதவித் ; "வேதாந்தவித் வேதவிதேவ சாஹம்" என்பது பகவத் வசனம் (கீதை. 15, 15).

ஸர்வே வேதா : ஸர்வவித்யா : ஸஶாஸ்த்ரா :
ஸர்வே யஜ்ஞா : ஸர்வ இஜ்யாஶ்ச க்ருஷ்ண : |
விது : க்ருஷ்ணம் ப்ராஹ்மணாஸ் தத்த்வதோ யே
தேஷாம் ராஜன் ஸர்வயஜ்ஞா : ஸமாப்தா : ||

என்பது மஹா பாரதம்.

(129) ஞானம் முதலியவற்றால் பரிபூர்ணன் (நிறைந்தவன்) **அவிகல :** [அவ்யங்க :] என்னப்படுகின்றான் ; (ii) அல்லது, **வ்யங்க :** (வியக்தி) வடிவு [இன்னதென்று] அறியப்படுவதில்லை என்பதால் **அவ்யங்க :** ; "அவ்யக்தோயம்" என்பது பகவத் வசனம் (கீதை. 2, 25).

(130) வேதங்கள் எவனுக்கு அங்கங்களோ அவன் **வேதாங்க :** [வேதஸ்வரூபன்].

(131) வேதங்களை விந்த்தே ஆராய்கிறான் என்பதால் **வேத வித்.**

(132) [வெகுதூரம்] கடந்து செல்லும் நோக்கத்தை (ஞானத்தை)யுடையவன் **கவி :,** எல்லாவற்றையும் கண்டறிந்தோன் ; "நான்யோ'தோ'ஸ்தி த்ரஷ்டா" என்று தொடங்கும் (ப்ரஹ. உப. 3, 7, 23)சுருதியைக் காண்க ; "கவிர் மனீஷீ" (ஈசா. உப. 8) என்று தொடங்கும் மந்த்ரவர்ணத்தையும் காண்க.

**लोकाध्यक्षः सुराध्यक्षो धर्माध्यक्षः कृताकृतः ।**
**चतुरात्मा चतुर्व्यूहश्चतुर्दंष्ट्रश्चतुर्भुजः ॥ २८ ॥**

28. **லோகாத்யக்ஷ: ஸுராத்யக்ஷோ தர்மாத்யக்ஷ : க்ருதாக்ருத :**
**சதுராத்மா சதுர்வ்யூஹஶ் சதுர்தம்ஷ்ட்ரஶ் சதுர்புஜ :**

(133) உலகங்களை மேற்பார்வையிடுவோன் **லோகாத்யக்ஷ :,** எல்லா உலகங்களுக்கும் தலைமை வகித்து மேற்பார்ப்பவன்.

(134) லோக பாலர்கள் முதலான சுரர்களுக்கு மேலதிகாரி **ஸுராத்யக்ஷ :.**

(135) தர்மம் அதர்மம் இவற்றை நேராகக் கண்டறிவோன், அவ் வவற்றிற்குரிய பலனைக் கொடுப்பதற்காக, என்பதால் **தர்மாத்யக்ஷ:**.

(136) காரியப் பொருளாய் **க்ருத:** என்றும், காரணப் பொருளாய் **அக்ருத:** என்று மிருப்பதால், **க்ருதாக்ருத:**.

(137) சிருஷ்டி முதலிய காலங்களில் வேறுபட்ட நான்கு (விபூதிகள்) மேன்மை யுருவங்கள் எவனுக்குண்டோ அவன் **சதுராத்மா**; வைஷ்ணவ புராணத்தில் (1, 22, 31-33.)

*ப்ரஹ்மா தக்ஷாதய : காலஸ் ததைவாகிலஜந்தவ : |*
*விபூதயோ ஹரேரேதா ஜகத : ஸ்ருஷ்டிஹேதவ : ||*
*விஷ்ணுர் மன்வாதய : கால : ஸர்வபூதானி ச த்விஜ |*
*ஸ்திதேர் நிமித்தபூதஸ்ய விஷ்ணோரேதா விபூதய : ||*
*ருத்ர : காலோந்தகாத்யாஶ்ச ஸமஸ்தாஶ் சைவ ஜந்தவ : |*
*சதுர்தா ப்ரலயாயைதா ஜனார்தனவிபூதய : ||*

என்று உள்ளது.

(138) *வ்யூஹ்யாத்மானம் சதுர்தா வை வாஸுதேவாதிமூர்(த்)திபி : |*
*ஸ்ருஷ்ட்யாதீன் ப்ரகரோத்யேஷ விஶ்ருதாத்மா ஜனார்தன : ||*

என்னும் வியாசருடைய வாக்கியப்படி, **சதுர்வ்யூஹ:** (நான்கு வியூகங்களை யுடையவன்).

(139) நான்கு பற்களை யுடையவன் **சதுர்தம்ஷ்ட்ர:** நரசிங்க வடிவினன்; (ii) அல்லது, ஒப்புமைபற்றி 'கொம்பு' தம்ஷ்ட்ரம் (பல்) என்னப்படும். "சத்வாரி ஶ்ருங்கா:" என்பது சுருதி. (ருக்வேத. 4, 58, 3.) [நான்கு கொம்புகள் இவனுக்கு உண்டு.]

(140) நான்கு தோள்களை யுடையவன் **சதுர்புஜ:**.

**भ्राजिष्णुर्भोजनं भोक्ता सहिष्णुर्जगदादिजः ।**
**अनघो विजयो जेता विश्वयोनिः पुनर्वसुः ॥ २९ ॥**

29. ப்ராஜிஷ்ணுர் போஜனம் போக்தா ஸஹிஷ்ணுர் ஜகதாதிஜ:
அனகோ விஜயோ ஜேதா விஶ்வயோனி : புனர்வஸு :

(141) *(ஒரே ஒளிப்பிழம்பாய்) ஒளி மயமாய் இருப்பதால்* **ப்ராஜிஷ்ணு :**

(142) *(அனுபவிக்கப்படும் பொருள்) உணவுப் பொருள் போல்வதால் ப்ரக்ருதியாகிய மாயை* **போஜனம்** *என்னப்படுவது; [ப்ரக்ருதியும் இவனே].*

(143) *புருஷ வடிவிலே அதை (ப்ரகிருதியை) உண்கிறான் (அனுபவிக்கிறான்) என்பதால்* **போக்தா.**

(144) *ஹிரண்யாக்ஷன் முதலானவர்களை* **ஸஹதே** *வென்று அடக்குகிறான் என்பதால்* **ஸஹிஷ்ணு :.**

(145) *ஹிரண்யகர்ப்பனுய் ஜகத் சிருஷ்டி காலத்தில் (தன்னைத்) தானே தோன்றச் செய்கிறான் என்பதால்* **ஜகதாதிஜ:.**

(146) **அகம்** *(குற்றம்) இவனிடத்திலே அறிய இயலாது என்பதால்* **அனக :;** *"அபஹதபாப்மா" என்பது சுருதி (சாந்தோ. உப. 8, 1, 5.)*

(147) *ஞானம், பற்றின்மை (வைராக்கியம்), ஐசுவரியம் (ஆட்சி) முதலிய குணங்களால் உலகனைத்தையும் வென்று மேம்படுகிறான் என்பதால்* **விஜய :.**

(148) *எல்லா வுயிர்களுக்கும் தன்னியல்பாலேயே மேலாகி விளங்குகிறான் என்பதால்* **ஜேதா.**

(149) *உலகனைத்தையும் யோனியாக (இருப்பிடமாக, அல்லது, வயிறாக) கொண்டவன்;* **(ii)** *அல்லது, உலகமனைத்துமாய் காரணமும் ஆனவன் என்பதால்* **விஶ்வயோனி :.**

(150) மீண்டும் மீண்டும் சரீரங்களில், க்ஷேத்திரஜ்ஞனாய் வாசஞ் செய்கிறான் என்பதால் புனர்வஸு :.

**उपेन्द्रो वामनः प्रांशुरमोघः शुचिरूर्जितः ।**
**अतीन्द्रः संग्रहः सर्गो धृतात्मा नियमो यमः ॥ ३० ॥**

30. உபேந்த்ரோ வாமன : ப்ராம்ஸு ரமோக : ஸுசிரூர்ஜித :
அதீந்த்ர : ஸம்க்ரஹ : ஸர்கோ த்ருதாத்மா நியமோ யம :

(151) இந்திரனுக்குத் தம்பியானவன் உபேந்த்ர :; (ii) அல்லது, மேலான இந்திரன் உபேந்த்ர :.

*மமோபரி யதேந்த்ரஸ்த்வம் ஸ்தாபிதோ கோபிரீஸ்வர : |*
*உபேந்த்ர இதி க்ருஷ்ண த்வாம் காஸ்யந்தி புவி தேவதா : ||*

என்பது ஹரிவம்சம்.

(152) பலியிடம் வாமன ரூபனாய் யாசித்தவன் வாமன:; (ii) அல்லது, [நன்றாகப் பஜனை செய்வதற்கு] சேவை செய்வதற்குரியவன் என்பதால் வாமன :.

*மத்யே வாமன மாஸீனம் விஸ்வே தேவா உபாஸதே*

(கடோப. 2, 5, 3) என்பது மந்த்ரவர்ணம். [பூஜிப்பதற்காக சிறிய வடிவைக் கொண்டவன் என்பது கருத்து.]

(153) அவனே மூவுலகையும் தாவியபோது நெடியோன் ஆனதால் ப்ராம்ஸு :.

*தோயே து பதிதே ஹஸ்தே வாமனோ' பூதவாமன : |*
*ஸர்வதேவமயம் ரூபம் தர்ஸயாமாஸ வை ப்ரபு : ||*
*பூ : பாதௌத்யௌ ஸிரஸ்சாஸ்ய சந்த்ராதித்யௌ ச சக்ஷுஷீ ||*

என்று தொடங்கியுள்ள சுலோகங்களின்படி, விசுவ ரூபத்தைக் காட்ட

*தஸ்ய விக்ரமதோ பூமிம் சந்த்ராதித்யௌ ஸ்தனந்தரே |*
*நப : ப்ரக்ரமமாணஸ்ய நாப்யாம் தௌ ஸமவஸ்திதௌ ||*
*திவமாக்ரமமாணஸ்ய ஜானுமூலே வ்யவஸ்திதௌ ||*

என்று (அவனுடைய) நெடுமையை விளக்குகின்றது ஹரிவம்சம்.

(154) வீண்போகும் செயல் (ஒன்றும்) எவனுக்கு இல்லையோ அவன் அமோக:.

(155) நினைப்பவர் ஸ்துதிப்பவர் அர்ச்சிப்பவர் இவர்களை தூய்மை செய்வதால் ஶுசி:; "அஶ்பர்ஶஶ்ச மஹான்ஶுசி:" என்பது மந்த்ரவர்ணம்.

(156) மிகுந்த பலசாலியாவதால் ஊர்ஜித:.

(157) இயற்கை ஞானம் ஐசுவரியம் (பிரபுத்வம்) முதலியவற்றால் இந்திரனைக் காட்டிலும் மேலானவனாதலால் அதீந்த்ர:.

(158) எல்லோரையும் (எதிர்த்து) அழிப்பதால் ஸங்க்ரஹ:.

(159) படைப்புப் பொருளாவதால், (ii) அல்லது, படைப்புக்கு ஹேதுவாதலால் ஸர்(க்)க:.

(160) ஏகரூபமாய் (ஒரேப்பிரகாரமாய்) பிறப்பு முதலியன இன்றியே ஆத்மாவானது எவனால் ஒரு நிலையாகக் கொள்ளப்பட்டதோ, அவன் த்ருதாத்மா.

(161) அவ்வவர்க்குரிய தொழிலிலே (அதிகாரத்திலே) உயிர்களை நியமிப்பதால் (பணி கொள்வதால்) நியம:.

(162) உள்ளே புகுந்திருப்பதால் யம:.

**वेद्यो वैद्यः सदायोगी वीरहा माधवो मधुः ।**
**अतीन्द्रियो महामायो महोत्साहो महाबलः ॥ ३१ ॥**

31. வேத்யோ வைத்ய : ஸதாயோகீ வீரஹா மாதவோ மது :
அதீந்த்ரியோ மஹாமாயோ மஹோத்ஸாஹோ மஹாபல :

(163) (நிஶ்ஶ்ரேயஸ்ஸை) மோக்ஷத்தை வேண்டுவோரால் அறிவதற்குரியவன் ஆதலால் வேத்ய :.

(164) எல்லா வித்யைகளையும் அறிந்தவனுதலால் வைத்ய :.

(165) எப்பொழுதும் விளங்கும் இயல்பினையுடையவன் என்பதால் ஸதாயோகீ.

(166) தருமத்தைப் பாதுகாப்பதற்காக வீரர்களான அசுரர்களை வதைப்போன் என்பதால் வீரஹா.

(167) மாயா ; வித்யைக்குத் தலைவன் மாதவ :.

*மா வித்யா ச ஹரே : ப்ரோக்தா தஸ்யா ஈஶோ யதோ பவாந் |*
*தஸ்மாந் மாதவநாமாஸி தவ : ஸ்வாமீதி ஶப்தித : ||*

என்பது ஹரிவம்சம் (3, 88, 49).

(168) மது (தேன்) எவ்வாறு பரமப் பிரீதியை உண்டுபண்ணுமோ, அதுபோலவே இவனும் என்பதால் மது :.

(169) "அஶப்தமஸ்பர்ஶம்" என்னும் (கடோப. 1, 3, 15) சுருதியின்படி, சப்தம் முதலியன இன்மையால் இந்திரியங்களுக்குப் புலப்படாதவன் என்பதால் அதீந்த்ரிய :.

(170) மாயையில் வல்லவர்களையும் மாயை செய்வோன் என்பதால் மஹாமாய :; "மம மாயா துரத்யயா" (கீதை 7, 14) என்பது பகவத்வசனம்.

(171) ஜகத்தின் உற்பத்தி, ஸ்திதி, லயம் இவற்றிலே முனைந்திருப்போன் என்பதால் மஹோத்ஸாஹ :.

(172) பலசாலிகளைக் காட்டிலும் மிக்க பலசாலி (பலிஷ்டன்) ஆதலால் மஹாபல :.

महाबुद्धिर्महावीर्यो महाशक्तिर्महाद्युतिः ।
अनिर्देश्यवपुः श्रीमानमेयात्मा महाद्रिधृक् ॥ ३२ ॥

32. மஹாபுத்திர் மஹாவீர்யோ மஹாஶக்திர் மஹாத்யுதி :
அநிர்தேஶ்யவபு : ஶ்ரீமா னமேயாத்மா மஹாத்ரித்ருக்

(173) புத்திமான்களைக் காட்டிலும் அதிக புத்திமான் என்பதால் மஹாபுத்தி :.

(174) பெரிதாயும் உற்பத்தி காரணமாயு முள்ள அவித்யை என்னும் வீர்யத்தை யுடையவன் என்பதால் மஹாவீர்ய:.

(175) பெரிய ஶக்தி: திறமையை (சாமர்த்தியத்தை) யுடையவன் என்பதால் மஹாஶக்தி:.

(176) பெரியதோர் ஒளி இவனுக்கு உள்ளேயும் புறத்திலும் இருப்பதால் மஹாத்யுதி:; "ஸ்வயம் ஜ்யோதி:" என்பது (ப்ருஹ. உப. 4, 3, 9) சுருதி. "ஜ்யோதிஷாம் ஜ்யோதி:" என்பது முதலியவையும் (ப்ரஹ. உப. 4, 4, 16) சுருதி.

(177) இது அது என்று பிறருக்குச் சுட்டிக் காட்ட இயலாததாய் தானே அறிந்துகொள்ள வேண்டுவதா யிருப்பதால், இவன் உடல் (ஸ்வரூபம்) சுட்டிக்காட்ட வொண்ணாதது என்பதால் அநிர்தேஶ்யவபு:.

(178) ஈசுவரத்தன்மைக்குரிய எல்லாத் திருவும் எவனுக்கு உண்டோ அவன் ஸ்ரீமான்.

(179) எல்லாப் பிராணிகளாலும் அளவிட முடியாத ஆத்மா அறிவு எவனுக்குண்டோ அவன் அமேயாத்மா.

(180) பெருமலையாகிய மந்தரத்தையும் கோவர்(த்)தனத்தையும், அமுதங்கடையுங் காலத்திலும் பசுக்களைப் பாதுகாக்குங் காலத்திலும் தாங்கினன் என்பதால் மஹாத்ரித்ருக்.

**महेष्वासो महीभर्ता श्रीनिवासः सतां गतिः ।**
**अनिरुद्धः सुरानन्दो गोविन्दो गोविदां पतिः ॥ ३३ ॥**

33. மஹேஷ்வாஸோ மஹீபர்(த்)தா ஸ்ரீநிவாஸ: ஸதாம் கதி:
அநிருத்த: ஸுராநந்தோ கோவிந்தோ கோவிதாம்பதி:

(181) சிறந்த விதமாக இஷ்வாஸ: அம்பு போடுவது எவனிடம் [காணப்படுமோ] அவன் மஹேஷ்வாஸ:.

(182) (ஏகார்ணவமான) ஒரே வெள்ளப் பெருக்கிலே முழுகிய தேவியாகிய பூமியை (முழுகாதவாறு) தாங்கி நின்றான் என்பதால் மஹீபர்(த்)தா.

(183) எவனுடைய (திரு)மார்பிலே (இறைப்பொழுதும் அகலாமல்) ஸ்திரமாக ஸ்ரீதேவி வாழ்கிறாளோ அவன் ஸ்ரீநிவாஸ:.

(184) வேத மார்க்கத்தைக் கைக்கொண்ட சாதுக்கள் புருஷார்த்தங்களைப் பெறுவதற்குக் காரணமானவன் ஸதாம் கதி:.

(185) தான் (ப்ராதுர்பாவஞ் செய்யும்போது) அவதாரங்கள் எடுக்கும்போது எவனும் தடுத்து ஒடுக்கமுடியாத தன்மையை யுடையவன் என்பதால் அநிருத்த :.

(186) சுரர்களுக்கு ஆனந்தமளிப்பவன் என்பதால் ஸுரானந்த :.

(187) நஷ்டாம் வைதரணீம் பூர்வ மவிந்தம் வை குஹாகதாம்
கோவிந்த இதி தேனாஹம் தேவைர் வாக்பிரபிஷ்டுத :

என்னும் மோக்ஷ தர்ம வசனப்படி (மஹாபா. சாந்தி 352, 5), [அழிவுறும் பூமியைத் தாங்கி யெடுத்தலால்) கோவிந்த :; (ii) (iii) அல்லது,

அஹம் கிலேந்த்ரோ தேவானாம் த்வம் கவாமிந்த்ரதாம் கத : |
கோவிந்த இதி லோகாஸ்த்வாம் ஸ்தோஷ்யந்தி புவி பாஸ்வதம் ||

என்றும்,

கௌரேஷா து யதோ வாணீ தாம் ச விந்தயதே பவாந் |
கோவிந்தஸ்து ததோ தேவ முனிபி : கத்யதே பவாந் ||

(2, 19, 45)

என்றும் 'ஹரிவம்ச'த்தில் உள்ளன வாதலால் [பசுக்களுக்குத் தலைவன் என்பதாலும் வாக்கானது தன்னை அடையும்படி செய்வோன் என்பதாலும்] கோவிந்த :.

(188) கோ : பாஷை ; அதனை யறிந்தவர்கள் கோவித :; அவர்களுள் சிறப்புடையவனாய் விளங்குந் தலைவன் கோவிதாம் பதி :.

**मरीचिर्दमनो हंसः सुपर्णो भुजगोत्तमः ।**
**हिरण्यनाभः सुतपाः पद्मनाभः प्रजापतिः ॥ ३४ ॥**

34. மரீசிர் தமனோ ஹம்ஸ: ஸுபர்ணோ புஜகோத்தம:
ஹிரண்யநாப: ஸுதபா: பத்மநாப: ப்ரஜாபதி:

(189) ஒளியுடையவர்களுக்கும் ஒளியாவதால் மரீசி:;
தேஜஸ் தேஜஸ்விநாமஹம் (கீதை 10, 36)
என்பது பகவத் வசனம்.

(190) தன் (நிலையினின்றும்) அதிகாரத்தினின்றும் வழுவிய உயிர்களை ஒடுக்குவதற்கு (வைவஸ்வதன்) இயமன் முதலான ரூபங்களை மேற்கொண்டு சீலமுடையவனாக (சக்திமானாக) இருக்கிறான் என்பதால் தமன:.

(191) 'அஹம் (நான்) ஸ: (அவன்)' என்று, தன்மயமாகவே தம்மைப் பாவிப்போரின் ஸம்ஸார பயத்தை நீக்குகிறான் என்பதால் ஹம்ஸ:; 'ப்ருஷோதராதித்வாத் ஸாதுத்வம்' (என்பது இலக்கணக் குறிப்பு); (ii) அல்லது, எல்லாச் சரீரங்களிலும் ஹந்தி புகுகிறான் என்பதால் ஹம்ஸ:; "ஹம்ஸ: ஸுசிஷத்" (கடோப. 2, 2, 2) என்பது மந்த்ர வர்ணம்.

(192) [தர்மம் அதர்மம் என்னும்] அழகிய [இரண்டு] சிறகுகளை யுடையவனாதலால் ஸுபர்ண:; "த்வா ஸுபர்ணா" (முண்டகோப. 3, 1, 1) என்பது மந்த்ர வர்ணம்; [ii அல்லது, அழகிய சிறகினை யுடையவன் என்பதால் ஸுபர்ண: (கருடன்); "ஸுபர்ண: பததாமஸ்மி" (கீதை 10, ) என்பது ஈசுவர வசனம்.]

(193) மார்பால் (ஊர்ந்து) செல்வனவாகிய பாம்புகளுள் உத்தமன் என்பதால் புஜகோத்தம:.

(194) பொன்போன்று மங்களமான (நாபியை) கொப்பூழை உடையவன் என்பதால் ஹிரண்யநாப:; (ii) அல்லது, ஹிதஞ் செய்வதும் ரமணீயமானதுமான கொப்பூழையுடையவன் என்பதால்.

(195) பதரிகாசிரமத்தில் நர நாராயணர்களாகி மங்களகரமான தவத்தைச் செய்வதால் ஸுதபா:; "மனஸஶ்சேந்த்ரியாணாம் ச ஹ்யைகாக்ர்யம் பரமம் தப:" என்பது ஸ்ம்ருதி.

(196) பதுமம் போன்று அழகான வட்ட வடிவிலே (நாபி) கொப்பூழ் எவனுக்கு உண்டோ அவன்; (ii) அல்லது, இருதயமாகிய பதுமத்தின் நாபௌ மத்தியிலே (பிரகாசித்துக் கொண்டிருப்பதால்) விளங்குவதால் பத்மநாப:; 'ப்ருஷோதராதித்வாத் ஸாதுத்தவம்' (என்பது இலக்கணக் குறிப்பு).

(197) (பிரஜைகளுக்கு) உயிர்களுக்கு பதி: பிதா ப்ரஜாபதி:.

अमृत्युः सर्वदृक्सिंहः सन्धाता सन्धिमान् स्थिरः ।
अजो दुर्मर्षणः शास्ता विश्रुतात्मा सुरारिहा ॥ ३५ ॥

35. அம்ருத்யு: ஸர்வத்ருக் ஸிம்ஹ: ஸந்தாதா ஸந்திமாந் ஸ்திர:
அஜோ துர்மர்ஷண: ஶாஸ்தா விஶ்ருதாத்மா ஸுராரிஹா

(198) ம்ருயு: விநாசம் அல்லது அதற்குக் காரணம்; அது எவனுக்கு இல்லையோ அவன் அம்ருத்யு:.

(199) உயிர்கள் செய்வது செய்யாதது எல்லாவற்றையும், தனக்கு இயற்கையில் அமைந்த அறிவினால் காண்போன் ஸர்வத்ருக்.

(200) கொல்வதால் ஸிம்ஹஃ; 'ப்ருஷோதராதித்வாத் ஸாதுத்வம்' (என்பது இலக்கணக் குறிப்பு).

இவ்வாறு இரண்டாவது நூறு பெயர்களுக்கு விரிவுரை செய்யப்பட்டது.

(201) மனிதர்களை (அவரவர்களுடைய) செய்கைகளின் பலன்களோடு சேர்க்கிறான் என்பதால் ஸந்தாதா.

(202) பலன்களை அனுபவிப்போனும் அவனே என்பதால் ஸந்திமான்.

(203) எப்பொழுதும் ஒரே ரூபமுடையவனாதலால் ஸ்திர :.

(204) அஜதி செல்கிறான், (ii) அல்லது, எறிகிறான் என்பதால் அஜ:: [எல்லாவற்றுள்ளும் புகுந்திருப்பவன்; கீழ்ப்படுத்துபவன்].

(205) தானவர் (ராக்ஷஸர்) முதலியோரால் [இவனுடைய பராக்கிரமத்தை] மர்ஷிதும் தாங்குவதற்கு இயலாது என்பதால் துர்மர்ஷண:.

(206) சுருதி ஸ்மிருதி முதலியவற்றால் எல்லோருக்கும் (புத்தி கூறி) உத்திரவிடுவதால் ஶாஸ்தா.

(207) ஸத்யம் ஞானம் முதலிய லக்ஷணங்களை (அறிகுறிகளை) யுடையதான ஆத்மா என்று சுருதியிலே சிறப்பாகச் சொல்லப்பட்டதால் விஶ்ருதாத்மா.

(208) ஸுராரீனும் [தேவர்களின் பகைவர்களை] அழிப்போன் என்பதால் ஸுராரிஹா.

गुरुर्गुरुतमो धाम सत्यः सत्यपराक्रमः ।
निमिषोऽनिमिषः स्रग्वी वाचस्पतिरुदारधीः ॥ ३६ ॥

36. குருர் குருதமோ தாம ஸத்ய ஃ ஸத்யபராக்ரம :
நிமிஷோ' நிமிஷ ஃ ஸ்ரக்வீ வாசஸ்பதிருதாரதீ :

(209) எல்லா வித்யைகளையும் உபதேசிப்பவன் என்பதால், (ii) அல்லது, எல்லோரையும் பிறப்பித்த தந்தையென்பதால் குரு:.

(210) (விரிஞ்சி) பிரமன் முதலானவர்களும் பிரும்மவித்தையைக் கொடுப்பதால் குருதம ஃ; "யோ ப்ரஹ்மாணம் [விததாதி பூர்வம்]" என்பது மந்திரவர்ணம் (சுவேதா. உப. 6. 18).

(211) தாம சோதி; "நாராயணபரோ ஜ்யோதி:" என்பது (நாரா. உப. 13, 1) மந்த்ரவர்ணம்; ii அல்லது, எல்லாக் காமங்களுக்கும் உறைவிடமாதலால் தாம; "பரமம் ப்ரஹ்ம பரம் தாம" (ப்ருஹ. உப. 2, 3, 6) என்பது சுருதி.

(212) உண்மை பேசுதல் என்னும் தருமத்தின் வடிவமாயிருப்பதால் ஸத்ய:; "தஸ்மாத் ஸத்யம் பரமம் வதந்தி" (நாரா. உப. 79) என்பது சுருதி; ii அல்லது, உண்மைக்கும் உண்மை என்பதால்; "ப்ராணு வை ஸத்யம் தேஷாமேவ ஸத்யம்" (ப்ரஹ. உப. 2, 3, 6) என்பது சுருதி.

(313) ஸத்ய: பொய்க்காத, பராக்கிரமம் எவனுக்கு உண்டோ அவன் ஸத்யபராக்ரம:.

(214) யோக நித்திரையிலே இன்புறுவோனுடைய இரு கண்களும் மூடியிருப்பனவாதலால் நிமிஷ:.

(215) எப்பொழுதும் விழித்திருக்கும் இயல்புடையவன் ஆதலால் அநிமிஷ:; (ii) அல்லது, மீன் வடிவிலோ ஆத்மாவாகவோ [இமையாதிருப்பதால்], அநிமிஷ:.

(216) பூத தன்மாத்திரையின் வடிவாகிய வைஜயந்தீ என்னும் மாலையை எப்பொழுதும் தரித்துக் கொண்டிருக்கிறான் என்பதால் **ஸ்ரக்வீ.**

(217) வாச: வித்யையின், பதி [நாயகன்] வாசஸ்பதி:; இவனுடைய தீ: புத்தியானது, எல்லா அர்த்தங்களையும் கிரகிப்பது என்பதால் உதராதீ:; வாசஸ்பதிருதாரதீ: என்பது ஒரே பெயர்.

**अग्रणीर्ग्रामणीः श्रीमान्न्यायो नेता समीरणः ।**
**सहस्रमूर्धा विश्वात्मा सहस्राक्षः सहस्रपात् ॥ ३७ ॥**

**37.** அக்ரணீர் க்ராமணீ: ஸ்ரீமாந் ந்யாயோ நேதா ஸமீரண:
ஸஹஸ்ரமூர்தா விஶ்வாத்மா ஸஹஸ்ராக்ஷ: ஸஹஸ்ரபாத்

(218) அக்ரம் முதன்மையான, பதத்திற்கு மோக்ஷத்தை விரும்புவோர்களை அழைத்துச் செல்லுகிறுன் என்பதால் **அக்ரணீ:.**

(219) உயிர்த் தொகுதியை வழிப்படுத்துவதால் **க்ராமணீ:.**

(220) எல்லாவற்றைக் காட்டிலும் அதிகமான ஸ்ரீ: காந்தி இவனுக்கு என்பதால் **ஸ்ரீமான்.**

(221) பிரமாணங்களுக்கு அனுகூலமாய் அபேதத்தை நிலை நிறுத்துவதான (தர்க்கம்) யுக்தியாயிருப்பதால் **ந்யாய :.**

(222) உலகமென்னும் யந்திரத்தை நிர்வகிப்பதால் **நேதா.**

(223) மூச்சாகி உயிர்களை இயக்குவதால் (சேஷ்டிக்கும்படி செய்வதால்) **ஸமீரண :.**

(224) ஆயிரங்களான தலைகளையுடையவன் என்பதால் **ஸஹஸ்ரமூர்தா.**

(225) விஶ்வஸ்ய [உலகமனைத்துக்கும்] ஆத்மா **விஶ்வாத்மா.**

(226) ஆயிரங்களான கண்களையுடையவன் எவனோ அவன் **ஸஹஸ்ராக்ஷ :.**

(227) ஆயிரங்களான பாதங்களையுடையவன் **ஸஹஸ்ரபாத்;** "ஸஹஸ்ரஶீர்ஷா புருஷ : , ஸஹஸ்ராக்ஷ : ஸஹஸ்ரபாத்" என்பது சுருதி (புருஷஸூக். 1)

**आवर्तनो निवृत्तात्मा संवृतः संप्रमर्दनः ।**
**अहःसंवर्तको वह्निरनिलो धरणीधरः ॥ ३८ ॥**

38. ஆவர்(த்)தனோ நிவ்ருத்தாத்மா ஸம்வ்ருத : ஸம்ப்ரமர்தன :
அஹ: ஸம்வர்(த்)தகோ வஹ்நி ரநிலோ தரணீதர :

(228) ஸம்ஸார சக்கிரத்தைச் சுழற்றும் திறமையுள்ளவன் **ஆவர்(த்)தன :.**

(229) *ஸம்ஸார பந்தத்தினின்று* நிவ்ருத்த: *விடுபட்ட* ஆத்மா *ஸ்வரூபத்தையுடையவன்* நிவ்ருத்தாத்மா.

(230) *மூடுகின்ற அவித்யையால் மறைக்கப்பட்டவன்* ஸம்வ்ருத:.

(231) *உருத்திரன் காலன் முதலான (மூர்த்தி)களால் நன்றாக அழிக்கிறான் என்பதால்* ஸம்ப்ரமர்த்தன :.

(232) *ஒழுங்காகப் பகற்பொழுதை ஆக்குவோன் என்பதால் சூரியன்* அஹ : ஸம்வர்(த்)தக :; [*சூரியனும் அவனே*].

(233) வஹனத் [*ஹவிஸைக் கொண்டு போய்க்கொடுப்பதால்*] வஹ்நி : [*அக்னியாயிருப்பவன்*].

(234) *நிலைத்து நில்லாததால்* அநில:; (ii) *அல்லது,* ஆதியற்ற *தால்* அநில :; (iii) *அல்லது, (ஆதானம்) கட்டு இல்லாததால்;* (iv) *அல்லது,* அனனத் *உயிர்ப்பதால்* அநில: [*காற்றும் அவனே*].

(235) *சேஷனாகவும் வராகமாகவும்,* தரணீம் [*பூமியை*] *தாங்குவதால்* தரணீதர :.

# सुप्रसादः प्रसन्नात्मा विश्वधृग्विश्वभुग्विभुः ।
# सत्कर्ता सत्कृतः साधुर्जह्नुर्नारायणो नरः ॥ ३९ ॥

39. ஸுப்ரஸாத : ப்ரஸந்நாத்மா விஶ்வத்ருக் விஶ்வபுக் விபு :
ஸத்கர்(த்)தா ஸத்க்ருத : ஸாதுர் ஜஹ்நுர் நாராயணோ நர :

(236) *அபகாரஞ் செய்த சிசுபாலன் முதலானவர்களுக்கும் மோக்ஷமளித்தவனாதலால், எவனுடைய அனுக்கிரகம் [நிக்ரஹரூபமானாலும்] மங்களமாகுமோ அவன்* ஸுப்ரஸாத:.

(237) *ரஜோகுணம் தமோகுணம் இவற்றால் கலக்கமுறாத,* ஆத்மா *அந்தக்கரணத்தை (மனதை) யுடையவன் என்பதால்* ப்ர ஸந்நாத்மா; (ii) *அல்லது, பிரஸன்னமான ஸ்வபாவத்தையுடைய*

வன் ; காருணிகன் என்பது (இதன்) பொருள்; (iii) அல்லது, எல்லா விருப்பங்களையும் பெற்றவன் (அவாப்த ஸமஸ்த காமன்).

(238) உலகனைத்தையும் த்ருஷ்ணோதி அவமதிப்பவன் என்பதால் விஶ்வத்ருக்; 'ஞித்ருஷா ப்ராகல்ப்யே' (என்பது இலக்கணக் குறிப்பு).

(239) விஶ்வம் [உலகனைத்தையும்] உண்கிறான் (அனுபவிக்கிறான்); (ii) அல்லது, புனக்தி பரிபாலனஞ் செய்கிறான் என்பதால் விஶ்வபுக்.

(240) இரணியகர்ப்பன் முதலான வடிவுகளால் வெவ்வேறு கிறான் என்பதால் விபு:; 'நித்யம் விபும்' என்பது மந்த்ரவர்ணம். (முண்டகோப. 1, 5, 6).

(241) ஸத்கரோதி பூஜிப்பவன் என்பதால் ஸத்கர்(த்)தா.

(242) பூஜிக்கப்பட்டவர்களாலும் பூஜிக்கப்பட்டவன் ஸத்க்ருத:.

(243) நியாயமான (ப்ரவ்ருத்திகளை) செயல்களைச் செய்வதால் ஸாது:; (ii) அல்லது, எல்லாவற்றையும் சாதிக்கிறான் என்பதால்; (iii) அல்லது, வேறுபட்டதாகிய சாத்தியப் பொருளுக்கு ஏற்றதான உபாதானப் பொருளின்றியே சாத்தியப் பொருளை மட்டும் சாதிப்பவன் (செய்து முடிப்பவன்) ஆதலால்.

(244) மனிதரை ஸம்ஹார காலத்தில் அபஹ்னுதே அழிக்கிறான் என்பதால் ஜஹ்னு:; (ii) அல்லது, ஜஹாதி அறிவில்லாத பக்தியீனர்களை பரம்பொருளினின்றும் விலக்கி விடுகிறான் என்பதால்.

(245) நர: ஆத்மா; அதினிடமிருந்து உண்டான ஆகாயம் முதலிய காரியப் பொருட்கள் நாராணி; அந்த காரியப் பொருட்களை இவன் காரணாத்மாவாய் வியாபித்திருக்கிறான்; ஆதலாலும் இவனுக்கு அவை இருப்பிடம் (அயனம்) என்பதால் நாராயண:; "யச்ச கிம்சிஜ் ஜகத் ஸர்வம் த்ருஶ்யதே ஶ்ரூயதேபி வா, அந்தர் பஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தித:" என்பது மந்த்ரவர்ணம் (நாரா. உப. 13, 1—2).

*நராஜ்ஜாதானி தத்த்வானி நாராணீதி ததோ விது : |*
*தான்யேவ சாயனம் தஸ்ய தேன நாராயண : ஸ்ம்ருத : ||*

என்பது மஹாபாரதம் (அனுசா. 186, 7); (ii) அல்லது, நாராணும் ஜீவர்களுடைய, இருப்பிடமாக பிரளய காலத்தில் ஆவதால், "யத் ப்ரயந்த்யபிஸம்விஶந்தி" (தைத். உப. 3, 1) என்பது சுருதி. "நாராணு மயனம் யஸ்மாத் தஸ்மாந் நாராயண : ஸ்ம்ருத:" என்பது ப்ரஹ்ம வைவர்(த்)த (புராண)ம்; (iii) அல்லது,

*ஆபோ நாரா இதி ப்ரோக்தா ஆபோ வை நரஸூநவ : |*
*தா யதஸ்யாயனம் பூர்வம் தஸ்மாந் நாராயண : ஸ்ம்ருத : ||* (1, 10)

என்னும் மனு வாக்கியத்தாலும் நாராயண : [ஜலத்தை இருப்பிடமாகக் கொண்டவன்].

*"நாராயணாய நம இத்யயமேவ ஸத்ய :*
*ஸம்ஸாரகோரவிஷஸம்ஹரணாய மந்த்ர : |*
*ஶ்ருண்வந்து பவ்யமதயோ யதயோ' ஸ்தராகா*
*உச்சைஸ்தரா முபதிஶாம்யஹ மூர்த்வபாஹு : ||*

என்று ஸ்ரீ நாரஸிம்ஹ புராணத்திலுள்ளது.

(246) *நயதீதி நர : ப்ரோக்த : பரமாத்மா ஸநாதன :*

என்பது வியாஸ வசனம் ; [அதின்படி, வழிநடத்துகிறான் என்பதால், நர :].

**असंख्येयोऽप्रमेयात्मा विशिष्टः शिष्टकृच्छुचिः ।**
**सिद्धार्थः सिद्धसङ्कल्पः सिद्धिदः सिद्धिसाधनः ॥ ४० ॥**

40. அஸம்க்யேயோ'ப்ரமேயாத்மா விஶிஷ்ட: ஶிஷ்டக்ருச்சுசி :
ஸித்தார்(த்)த : ஸித்தஸங்கல்ப : ஸித்தித : ஸித்திஸாதன :

(247) பெயர் வேறுபாடு, உருவ வேறுபாடு முதலியவற்றால் ஏற்படும் எண்ணிக்கைத் தொகை எவனிடத்தில் காணப்படுவதில்லையோ அவன் அஸம்க்யேய : (பெயர் உருவம் முதலிய வேறுபாடுகள் இல்லாதவன்].

(248) அப்ரமேய : அளவைக்கு உட்படாத ஆத்மா சொரூபத்தை யுடையவன் அப்ரமேயாத்மா.

(249) எல்லாப் பொருளுக்கும் மேம்பட்டவன் [அப்பாற்பட்டவன்] ஆதலால் விஶிஷ்ட :.

(250) ஶிஷ்டம் கட்டளையை இடுவோன் (உத்திரவிடுவோன்) ஶிஷ்டக்ருத் ; (ii) அல்லது, சிஷ்டர்களை, கரோதி காப்பாற்றுகிறான். "ஸாமான்ய வசனோ தாதூர் விஶேஷ வசனோ த்ருஷ்ட :, குரு காஷ்டானீத்யாஹரணே யதா" (என்பது இலக்கணக் குறிப்பு): [அதாவது, சாமானியப் பொருளில் வரும் வினைச்சொல்லுக்கு விசேஷப் பொருளைக் காணலாம் ; "குரு காஷ்டானி" (விறகுகளைச் செய்) என்னுமிடத்து, "விறகுகளைக் கொண்டுவா" என்று பொருள் கூறுவதுபோல, கரோதி என்பதற்கு 'காப்பாற்றுகிறான்' என்பது பொருள்] ஆதலால் ஶிஷ்டக்ருத்.

(251) மாசில்லாதவனாதலால் ஶுசி :.

(252) வேண்டப்பட்ட பொருள் இவனுக்கு ஸித்த : கைக்கூடிற்று என்பதால் ஸித்தார்த்த : ; "ஸத்யகாம :" (சாந். உப. 8, 7, 1) என்பது சுருதி.

(253) ஸித்த : (நிறைவேறின) சித்தித்த, ஸங்கல்பத்தை (எண்ணத்தை) யுடையவன் என்பதால் ஸித்தஸங்கல்ப : "ஸத்யஸங்கல்ப :" (சாந். உப. 8, 7, 1) என்பது சுருதி.

(254) ஸித்திம் பலனை, காரியஞ் செய்வோருக்கு அவ்வவருடைய யோக்யதைப்படி (அதிகாரப்படி) கொடுக்கிறானாதலால் ஸித்தித :.

(255) காரியங்களை பலனைப் பெறும்படி செய்வதால் ஸித்தி ஸாதன :.

**वृषाही वृषभो विष्णुर्वृषपर्वा वृषोदरः ।**
**वर्धनो वर्धमानश्च विविक्तः श्रुतिसागरः ॥ ४१ ॥**

41. வ்ருஷாஹீ வ்ருஷபோ விஷ்ணுர் வ்ருஷபர்வா வ்ருஷோதர:
வர்தனோ வர்தமானஶ்ச விவிக்த: ஶ்ருதிஸாகர:

(256) வ்ருஷ: *தர்மம், புண்ணியம்; அதுவே [ஒளியுடைய தாகையால்]* அஹ:; த்வாதஶாஹம் (*பன்னிரண்டு பகல்*) *என்பது முதலிய யாகம்* வ்ருஷாஹ:, *அதை யுடையவன்;* வ்ருஷாஹீ [*பல பகல் செய்யும் யாகங்களுக்கு உரியவன்*] "*வ்ருஷாஹ இத்யத்ர, 'ராஜாஹ: ஸகிப்யஷ்டச்' [பாணினி ஸூ. 5. 4, 9] இதி டச்ப்ரத்யய ஸமாஸாந்த:*" (*என்பது இலக்கணக் குறிப்பு.*)

(257) *பக்தர்களுக்கு விரும்பியவற்றை இவன் (வர்ஷிப்ப தால்) பொழிந்து தருவதால்* வ்ருஷப:

(258) "*விஷ்ணுர் விக்ரமணாத்*" (*மஹாபா. உத்யோ.* 69, 13) *என்னும் வியாஸருடைய வாக்கின்படி, திரிவிக்கிரமனாய் அடியெடுத்து வைத்தான் என்பதால்* விஷ்ணு:.

(259) *பரமபதத்திற்கு ஏறிச் செல்ல விரும்புவோர்க்கு தர் மங்களை படிக்கட்டுகளாகச் சொல்கிறார்கள் என்பதால்,* வ்ருஷபர்வா [*தர்மங்களாகிய படிக்கட்டுகளால் அடையக்கூடியவன்*].

(260) *உயிர்களை உள்ளே பெய்து வைக்கும் வயிற்றை யுடையவன்* வ்ருஷோதர: [*எல்லா வுயிர்களையும் வயிற்றினுள் ஒடுக்கி வைத்திருப்போன்*].

(261) *போஷித்து (விருத்தியடைய) பெருகச் செய்வதால்* வர்தன:.

(262) *பிரபஞ்சமாகப் பெருகுவதால் (விருத்தியடைவதால்)* **வர்தமான:.**

(263) இவ்வாறு *பெருகும்போதும் வெவ்வேறாகப் பிரிந் திருப்பதால்* விவிக்த:.

(264) சமுத்திரத்திலே நீர்போல, சுருதிகள் இங்கு வந்தடைவதால் ஶ்ருதிஸாகர:.

सुभुजो दुर्धरो वाग्मी महेन्द्रो वसुदो वसुः ।
नैकरूपो बृहद्रूपः शिपिविष्टः प्रकाशनः ॥ ४२ ॥

42. ஸுபுஜோ துர்தரோ வாக்மீ மஹேந்த்ரோ வஸுதோ வஸு:
நைகரூபோ ப்ருஹத்ரூப: ஶிபிவிஷ்ட: ப்ரகாஶன:

(265) இவனுடைய மங்களமான தோள்கள் ஜகத் முழுவதையும் ரக்ஷிப்பனவாக இருப்பதால், ஸுபுஜ:.

(266) உலகோரைத் தாங்கும் பூமி முதலியவை பிறரால் தாங்க முடியாதவை; அவற்றைத் தாங்குவோனும், எவராலும் தாங்குவதற்கு இயலாத தன்மையனும் இருப்பதால் துர்தர:; (ii) அல்லது, மோக்ஷத்தை விரும்புவோரின் இருதயத்திலே தியான வேளையில் சிரமப்பட்டு (அரிதில்) தரிக்கப்படுகிறான் என்பதால் துர்தர:.

(267) எவனிடத்திலிருந்து பிரும்ம மயமான [வேதமயமான] வாக்கு வெளிப்போந்ததோ அவன் வாக்மீ.

(268) பெரியோனும் இந்திரனுமானவன் மஹேந்த்ர:, ஈசுவரர்களுக்கும் ஈசுரவன்.

(269) வஸு தனம், அதைத் தருகிறான் என்பதால் வஸுத:; "அன்னதோ வஸுதான:" (ப்ருஹ. உப. 4, 4, 24) என்பது சுருதி.

(270) கொடுக்கப்படும் அந்த (வஸுவும்) தனமும் அவனே என்பதால் வஸு:; (ii) அல்லது, மாயையால் ஆத்ம ஸ்வரூபத்தை (தன் ஸ்வரூபத்தை) மூடுகிறான் என்பதால் வஸு:; (iii) அல்லது, அந்தரிக்ஷத்திலேயே வசிக்கிறான், வேறிடத்தில் [வசிப்பது] இல்லை என்று பொது நீங்கிய (அஸாதாரணமான) இருப்பிடத்தை உடையவனாதலால், வாயு வஸு: (என்னப்படு

கிறான்); "வஸுராந்தரிக்ஷஸத்" (கடோப. 2, 5, 2) என்பது சுருதி; [வாயுவாகிய வஸு அவனே.]

(271) இவனுக்கு ரூபம் ஒன்றே என்று அறியப்படாததால், நைகரூப:; "இந்த்ரோ மாயாபி: புருரூப ஈயதே" (ப்ருஹ. உப. 2, 5, 19) என்பது சுருதி. "ஜ்யோதீம்ஷி விஷ்ணு:" (விஷ்ணு பு. 2, 12, 38) என்பது முதலான ஸ்மிருதி வசனங்களாலும் [பல வடிவுகளையுடையவன்.]

(272) ப்ருஹத் பெரிய, வராகம் முதலிய ரூபங்களையுடையவன் என்பதால் ப்ருஹத்ரூப:.

(273) ஶிபய: (யாக பசுவாக உபயோகிக்கும்) பிராணிகள்; அவற்றுள், விஶதி யாகரூபியாய் நிலைத்திருக்கிறான் என்பதால் ஶிபிவிஷ்ட:, யக்ஞமூர்த்தி; "யஜ்ஞோவை விஷ்ணு: பஶவ: ஶிபிர் யஜ்ஞ ஏவ பஶுஷு ப்ரதிதிஷ்டதி" (தைத்.ஸம். 1, 4, 7) என்பது சுருதி; (ii) அல்லது, ஶிபய: கிரணங்கள், அவற்றுள் இருப்பவன்;

ஶைத்யாச்சயன யோகாச்ச ஶீதி வாரி ப்ரசக்ஷதே |
தத்பானாத் ரக்ஷணச் சைவ ஶிபயோ ரஶ்மயோ மதா: |
தேஷு ப்ரவேஶாத் விஶ்வேஶ: ஶிபிவிஷ்ட இஹோச்யதே ||

(274) எல்லாவற்றையும் பிரகாசப்படுத்தும் இயல்பினன் ஆதலால் ப்ரகாஶன:.

**ओजस्तेजोद्युतिधरः प्रकाशात्मा प्रतापनः ।**
**ऋद्धः स्पष्टाक्षरो मन्त्रश्चन्द्रांशुर्भास्करद्युतिः ॥ ४३ ॥**

43. **ஓஜஸ்தேஜோத்யுதிதர: ப்ரகாஶாத்மா ப்ரதாபன:**
**ருத்த: ஸ்பஷ்டாக்ஷரோ மந்த்ரஶ் சந்த்ராம்ஶுர்**
**பாஸ்கரத்யுதி:**

(275) ஓஜ: பிராண சக்தி, தேஜ: சூரத்தனம் முதலிய குணங்கள், த்யுதி: ஒளி; இவற்றை மேற் கொண்டிருப்பவனாதலால் ஓஜஸ்தேஜோத்யுதிதர:.

அல்லது, (275 i) ஓஜ: (275 ii) தேஜ: என்று இரண்டு பெயர்கள்; "பலம் பலவதாம் சாஹம்," "தேஜஸ் தேஜஸ்விநு மஹம்," என்பவை பகவத் வசனம் (கீதை 7, 11 & 7, 10); (275 iii) த்யுதிம் ஞானமாகிய ஒளியை, மேற்கொண்டவன் என்பதால் த்யுதிதர :.

(276) ஒளியின் தன்மையதான ஆத்மாவையுடையவன் ப்ரகாஶாத்மா.

(277) சூரியன் முதலான விபூதி மூர்த்திகளால் உலகனைத்தையும் வாட்டுகிறான் என்பதால் ப்ரதாபன :.

(278) தர்மம், ஞானம், பற்றின்மை (வைராக்கியம்) முதலியவை அவனைச் சார்ந்திருப்பதால் ருத்த ঃ.

(279) ஸ்பஷ்டம் 'ஓம்' என்னும் எழுத்தின் இயல்பின்படி உதாத்தமான (மேல் ஸ்வரத்தையுடைய) எழுத்தை (அக்ஷரத்தை) உடையவன் ஸ்பஷ்டாக்ஷர : ['ஓம்' என்பதை வடிவாக வுடையவன்].

(280) ருக் யஜுஸ் ஸாம என்னும் வடிவுகொண்ட மந்த்ர : [வேதம்]; (ii) அல்லது, மந்திரங்களால் அறியத்தக்கவன் என்பதால் மந்த்ர :.

(281) ஸம்ஸார வெக்கையாகிய வெயிலிலே தவிக்கின்ற மனதையுடையவர்களுக்கு சந்திரகிரணம்போலே இன்பமூட்டுவதால் சந்த்ராம்ஶு ঃ.

(282) பாஸ்கரனுடைய (சூரியனுடைய) ஒளிபோன்ற ஒளியுடையவனென்பதால் பாஸ்கரத்யுதி :.

अमृतांशूद्भवो भानुः शशबिन्दुः सुरेश्वरः ।
औषधं जगतः सेतुः सत्यधर्मपराक्रमः ॥ ४४ ॥

44. அம்ருதாம்ஶூத்பவோ பானு: ஶஶபிந்து : ஸுரேஶ்வர :
ஔஷதம் ஜகத : ஸேது : ஸத்யதர்மபராக்ரம :

(283) பாற்கடலைக் கடையும்போது, அம்ருதாம்சோ: சந்திரனுடைய பிறப்பு எவனிடமிருந்தோ அவன் அம்ருதாம்சூத்பவ: [இவன் கடலைக் கடைந்ததால் பிறந்தவன் சந்திரன்].

(284) ஒளிர்வது பானு: "தமேவ பாந்தம்" என்பது முதலியவை சுருதி (கடோப. 2, 5, 15).

(285) சசம் [முயல்], அதைப் போன்ற பிந்து: அடையாளம் இருப்பதால் சசபிந்து: சந்திரன்; அவனைப்போல உயிர்களைப் போஷிப்பதால் சசபிந்து:; "புஷ்ணாமி சௌஷதீ: ஸர்வா: ஸோமோ பூத்வா ரஸாத்மக:" (கீதை 15, 13) என்பது பகவத் வசனம்.

(286) ஸுராணும் தேவர்களுக்கும், மங்களத்தைக் கொடுப்பவர்களுக்கும், ஈசுவரனுதலால் ஸுரேச்வர:.

(287) ஸம்ஸாரமாகிய ரோகத்திற்கு, மருந்து ஆவதால் ஔஷதம்.

(288) ஸேது:; அணை, அதைப்போல (கடந்து செல்வதற்கு உதவுவதால்) ஜகத்தைக் கரையேற்றுவதால்; (ii) அல்லது, வர்ணாசிரம தர்மங்கள் (ஒன்றோடொன்று) கலவாமைக்குக் காரணமாகையால் ஜகத்திற்கு அணைபோன்று இருப்பதாலும், ஜகத: ஸேது:; "ஏஷ ஸேதுர் விதரண ஏஷாம் லோகானுமஸம்பேதாய" (ப்ருஹ் உப. 4, 4, 22) என்பது சுருதி.

(289) சத்தியா: பொய்க்காத, தர்மா: ஞானம் முதலிய குணங்களும் பராக்ரமச்ச பராக்கிரமும் எவனுக்கு உண்டோ அவன் ஸத்யதர்மபராக்ரம:.

**भूतभव्यभवन्नाथः पवनः पावनोऽनलः ।**
**कामहा कामकृत्कान्तः कामः कामप्रदः प्रभुः ॥ ४५ ॥**

45. பூதபவ்யபவந்நாத: பவன: பாவனோ'னல:
காமஹா காமக்ருத் காந்த: காம: காமப்ரத: ப்ரபு:

(290) இறந்தகாலத்தும் எதிர்காலத்தும் நிகழ்காலத்து முள்ள உயிர்த் தொகுதிகளுக்கு நாதன்; (ii) அல்லது, அவர்களால் யாசிக்கப்படுகிறான்; (iii) அல்லது, அவர்களைத் துன்புறுத்துகிறான்; (iv) அல்லது, அவர்களை ஆள்கிறான், அவர்களுக்கு உத்திரவிடுகிறான் என்பதால் பூதபவ்யபவந்நாத:.

(291) தூய்மை செய்வதால் (சுத்தமாக்குவதால்) பவந:; "பவந: பவதாமஸ்மி" (கீதை 10, 31) என்பது பகவத் வசனம்.

(292) வீசச்செய்வதால் பாவந:; "பீஷா'ஸ்மாத் வாத: பவதே" (தைத். உப. 2, 8) என்பது சுருதி.

(293) அனன் பிராணன்களை, ஆத்மாவாகி லாதி பெற்றுக் கொள்கிறானதலால் ஜீவன் அனல: [ஜீவனாயிருப்பவன்]; (ii) அல்லது, 'ணலதேர்கந்தவாசிஹே நஞ்பூர்வாத்' (என்பது இலக்கணக் குறிப்பு) ஆகையால், [வாசனை யில்லாதவன்]; "அகந்தமரஸம்" (ப்ரஹ் உப. 5, 8, 8) என்பது சுருதி; (iii) அல்லது, அலம் போதும் என்பது இவனுக்கு இல்லையாதலால் [அனல:].

(294) மோக்ஷத்தை விரும்பும் பக்தர்களின் காமங்களையும் இமிசைபுரிவோரின் காமங்களையும் அழிக்கிறான் என்பதால் காமஹா.

(295) சாத்துவிக குணமுடையவர்களின் காமங்களை நிறைவேற்றுகிறான் என்பதால் காமக்ருத்; (ii) அல்லது, காமன் ஆகிய பிரத்துயும்னனுடைய பிதாவாதலால்.

(296) மனதைக் கவரும் ரூபத்தாற் சிறந்தவன் காந்த:.

(297) புருஷார்த்தங்களை வேண்டுவோரால் விரும்பப்படுவோன் என்பதால், காம:.

(298) பக்தர்களுக்குக் காமங்களை (விரும்பியவற்றை) மிகுதியாகக் கொடுப்பதால் காமப்ரத:.

(299) சிறந்து விளங்கியிருப்பவன் என்பதால் ப்ரபு:.

**युगादिकृद्युगावर्तो नैकमायो महाशनः ।
अदृश्योऽव्यक्तरूपश्च सहस्रजिदनन्तजित् ॥ ४६ ॥**

46. யுகாதிக்ருத் யுகாவர்(த்)தோ நைகமாயோ மஹாஶன:
அத்ருஶ்யோ' வ்யக்தரூபஶ்ச ஸஹஸ்ரஜிதனந்தஜித்

(300) *யுகம் முதலிய கால வேறுபாடுகளைச் செய்தவன் என்பதால்* **யுகாதிக்ருத்**; (ii) *அல்லது, யுகங்களின் தொடக்கத்தை [யுகங்களைத் தொடங்கும்படி] செய்தவன் என்பதால்* [**யுகாதிக்ருத்**].

*இவ்வாறு பெயர்களின் மூன்றாவது நூறு விரித்துரை செய்யப்பட்டது.*

(301) *கால வடிவங்கொண்டு, கிருதம் முதலிய யுகங்களை திரும்பத் திரும்ப வரச் செய்வதால்* **யுகாவர்(த்)த:**.

(302) *மாயை ஒன்று இல்லை, பல மாயைகளை நிர்வகிக்கிறான் ஆதலால்* **நைகமாய:**; *"நலோபோ நஞ:" என்பதால் 'ந'காரம் லோபம் ஆகாது; "ஞகாரானுபந்தரஹிதஸ்யாபி நகாரஸ்ய ப்ரதிஷேதவாசிநோ வித்யமானத்வாத்"* (*என்பது இலக்கணக் குறிப்பு*).

(303) *கற்ப முடிவிலே எல்லாவற்றையும் விழுங்கி விடுவதால், பெரிய அஶனம் உணவை யுடையவன் ஆதலால்* **மஹாஶன:**.

(304) *எல்லோருடைய புத்திக்கும் இந்திரியங்களுக்கும் எட்டாதவனாதலால்* **அத்ருஶ்ய:**.

(305) *ஸ்தூல வடிவிலே, வியக்தமாக (தெளிவாக) அறியக் கூடிய ரூபத்தையுடையவன் என்பதால்* **வ்யக்தரூப:**; (ii) *அல்லது, தானே ஒளிவிடுகின்ற தன்மையன் ஆகையால், யோகிகளுக்கு* **வ்யக்தரூப:** [*தெளிவாகக் காணக்கூடிய வடிவுடையவன்*] *என்பதால்.*

(306) அநேக ஆயிர அசுரர்களை யுத்தத்தில் வெல்வதால் ஸஹஸ்ரஜித்.

(307) சிந்தனைக் கெட்டாத தன் சக்தியாலே எவ்விடத்தி லும் எவ்லா வுயிர்களையும் போர் விளையாட்டு முதலியவைகளிலே வெல்கிறான் என்பதால் அனந்தஜித்.

**इष्टोऽविशिष्टः शिष्टेष्टः शिखण्डी नहुषो वृषः ।**
**क्रोधहा क्रोधकृत् कर्ता विश्वबाहुर्महीधरः ॥ ४७ ॥**

47. இஷ்டோ’ விஶிஷ்ட: ஶிஷ்டேஷ்ட: ஶிகண்டீ நஹுஷோ வ்ருஷ:
க்ரோதஹா க்ரோதக்ருத் கர்(த்)தா விஶ்வபாஹுர் மஹீதர:

(308) பரமானந்த வடிவனாய் பிரியனாதலால் இஷ்ட:; (ii) அல்லது, யாகத்தால் பூசிக்கப் பெற்றவன் என்பதால் இஷ்ட:.

(309) எல்லோர்க்கும் அந்தர்யாமியாய் (உட்புகுந்திருப்ப வனாய்) இருப்பதால் அவிஶிஷ்ட:.

(310) ஶிஷ்டானும் ஞானிகளுக்கு, இஷ்டன் ஶிஷ்டேஷ்ட:; (ii) அல்லது, சிஷ்டர்கள் [ஞானிகள்] இவனுக்கு இஷ்டர்கள் [பிரியமானவர்கள்] என்பதால்; “ப்ரியோ ஹி ஜ்ஞானினோத் யர்(த்)த மஹம் ஸ ச மம ப்ரிய:” என்பது (கீதை 7, 17) பகவத் வசனம்; (iii) அல்லது, சிஷ்டர்களால் இஷ்ட: பூஜிக்கப் பெற்ற வன் என்பதால் ஶிஷ்டேஷ்ட:.

(311) ஶிகண்ட: மயிற்பீலி [கலாபம்] இவனுக்கு, இடை யன் வேஷத்தைத் தரிக்கும்போது, அணியாவதால் ஶிகண்டீ.

(312) தனது மாயையால் உயிர்களைக் கட்டுகிறான் என்ப தால் நஹுஷ:; [“ணஹ் பந்தனே” என்பது இலக்கணக் குறிப்பு.]

(313) விரும்பியவற்றை (வர்ஷிப்பதால்) பொழிந்து தருவதால் வ்ருஷ:, தரும வடிவினன்;, "வ்ருஷோ ஹி பகவான் தர்ம: ஸ்ம்ருதோ லோகேஷு பாரத, நைகண்டுகபதாக்யானைர் வித்தி மாம் வ்ருஷ முத்தமம்" (சாந்தி 352,23) என்பது மஹாபாரதம்.

(314) சாதுக்களின் (நல்லோர்களின்) கோபத்தை அழிக்கிறான் என்பதால் க்ரோதஹா.

(315 i) நல்லோரல்லாதாரிடத்தில் (ஸாதுக்கள் அல்லாதாரிடத்தில்) கோபஞ் செய்கிறான் என்பதால் க்ரோதக்ருத்.

(315 ii) செய்யப்படுவதால் கர்ம (என்பது) ஜகத்து; அதன் கர்(த்)தா [அதனைச் செய்வோன்]; "ஏதேஷாம் புருஷாணும் கர்(த்)தா யஸ்ய வை தத் கர்ம ஸ வேதிதவ்ய:" (கௌஷீ. உப. 4, 18) என்பது சுருதி.

(315) அல்லது, கோபங்கொள்ளும் தைத்தியரை (அரக்கர்களை, கர்த்தா வெட்டியெறிவோன் என்று ஒரேபெயராகவும் கொள்ளலாம்.

(316) உலகமனைத்துக்கும் (ஆலம்பனம்) பற்றுக்கோடாகி, எல்லாம் தோள்களாகவுடையவன்; (ii) அல்லது, எல்லாப் புறங்களிலும் (தோள்களையுடையவன்) என்பதால் விஶ்வபாஹு:; "விஶ்வதோபாஹு:" (ஶ்வேதா. உப, 3, 3) என்பது சுருதி.

(317) மஹீம் பூஜையை, (ii) அல்லது, பூமியை, தரதி ஏற்கிறான் அல்லது தாங்குகிறான் என்பதால் மஹீதர:.

अच्युतः प्रथितः प्राणः प्राणदो वासवानुजः ।
अपांनिधिरधिष्ठानमप्रमत्तः प्रतिष्ठितः ॥ ४८ ॥

48. அச்யுத: ப்ரதித: ப்ராண: ப்ராணதோ வாஸவானுஜ:
அபாம் நிதிரதிஷ்டான மப்ரமத்த: ப்ரதிஷ்டித:

(318) ஆறுவகைப் பாவவிகாரங்களும்* இல்லாதவன் என்பதால் அச்யுத:; "ஶாஶ்வதம் ஶிவமச்யுதம்" (நாரா. உப. 13, 1) என்பது சுருதி.

(319) ஜகத்தை தோன்றச்செய்தல் முதலிய கார்யங்களால் பிரக்கியாதி பெற்றவன் ப்ரதித:.

(320) ஸூத்ராத்மாவாகி [தொடுக்கப்பட்ட மணிகளினூடே செல்லும் நூலைப்போல] உயிர்களை உயிர்ப்பிப்பதால் ப்ராண:; "ப்ராணோ வா அஹமஸ்மி" என்பது பஹ்வ்ருசம் (ஐத. ஆரண். 2, 2, 3).

(321) (i) சுரர்களுக்கு (ii) அல்லது, அசுரர்களுக்கு, ப்ராணம் பலத்தை (i) தாதாதி அளிக்கிறான் (ii) அல்லது, த்யதி அழிக்கிறான், என்பதால் ப்ராணத:.

(322) காசியபனுக்கு அதிதியிடம் வாசவனுடைய (இந்திரனுடைய) தம்பியாய் பிறந்தான் என்பதால் வாஸவானுஜ:.

(323) ஜலம் எங்கேபோய்ச் சேருகிறதோ அது அபாம் நிதி: [கடல்] "ஸரஸாமஸ்மி ஸாகர:" (கீதை, 10, 24) என்பது பகவத்வசனம்.

(324) பிரும்மம் உபாதானகாரணமாகி உயிர்களை அதிஷ்டித்திருப்பதால் அதிஷ்டானம்; "மத்ஸ்தானி ஸர்வபூதானி" (கீதை 9, 4) என்பது பகவத் வசனம்.

(325) (அதிகாரிகளுக்கு) தகுதிப்படி விதிக்கப்பட்ட காரியங்களைச் செய்வோர்க்கு (அவரவர்கள் செய்யும்) காரியங்களுக்குத் தக்கதான பலனை யளிக்கிறான்; (இந்தக் காரியத்தில்) அசாக்கிரதையா யிருப்பதில்லை என்பதால் அப்ரமத்த:.

---

* ஆறுபாவவிகாரங்களாவன—'ஜாயதே, அஸ்தி, வர்ததே, விபரிணமதே, அபக்ஷீயதே, நஶ்யதி' என்னும் நிருக்திப்படி (1) மறைந்திருத்தல் (2) வெளிப்படுதல் (3) வளர்தல் (4) வளர்ச்சிமுற்றுதல் (5) தேய்வுறுதல் (6) அழிந்துபோதல் என்னும் மாறுபாடுகள்.

(326) *தன்னுடைய பெருமையிலே நிலைத்திருப்பவன்* **ப்ரதிஷ்டித:**; "*ஸ பகவ: கஸ்மின் ப்ரதிஷ்டித இதி, ஸ்வே மஹிம்நி*" (*சாந். உப.* 7, 24, 1) *என்பது சுருதி.*

**स्कन्दः स्कन्दधरो धुर्यो वरदो वायुवाहनः ।**
**वासुदेवो बृहद्भानुरादिदेवः पुरन्दरः ॥ ४९ ॥**

49. ஸ்கந்த: ஸ்கந்ததரோ துர்யோ வரதோ வாயுவாஹன:
வாஸுதேவோ ப்ருஹத்பானு ராதிதேவ: புரந்தர:

(327) **ஸ்கந்ததி** *அமுதமாகிப் பெருகுகிறான்* (ii) *அல்லது, வாயுவாக உலர்த்துகிறான் என்பதால்* **ஸ்கந்த:**.

(328) **ஸ்கந்தம்** *தரும மார்க்கத்தை, நிலைத்துநிற்கச் செய்கிறான் என்பதால்* **ஸ்கந்ததர:**.

(329) *எல்லாவுயிர்களையும் பிறப்பித்தல் முதலான வேலையின் பாரத்தைத் தாங்குகிறான் என்பதால்* **துர்ய:**.

(330) *மனத்தால் விரும்பும் வரங்களைத் தருகிறான் என்பதால்;* (ii) *அல்லது, யாகஞ் செய்வோனுக்கு பசுவை* **வரம்** *தக்ஷிணையாக தருகிறான் என்பதால்* **வரத:**; "*கௌர் வை வர:*" *என்பது சுருதி.* (*ஆப. ஶ்ரௌ. ஸூ.* 5, 11, 4)

(331) *ஆவஹன் * முதலிய ஏழு மருத்துக்களையும் வீசும்படி செய்வோன் என்பதால்* **வாயுவாஹன:**.

(332) *எல்லாப் பொருளிலும் [தான்] நிலைபெற்றிருப்பதாலும் [எல்லாப் பொருளையும் தன்னிடத்து] நிலைபெற்றிருக்கச் செய்வதாலும் [எல்லாவற்றையும் மாயையால்] மூடி மறைப்பதாலும்* **வாஸு:**; **தீவ்யதி** *விளையாடுகிறான், வெற்றிபெற விரும்புகிறான், நடத்துகிறான், ஒளிர்கிறான், [துதிக்கப்படுகிறான்,] பிறப்*

---

* *ஆவஹன், ப்ரவஹன், ஸம்வஹன், உத்வஹன், விவஹன், பரிவஹன், பராவஹன் என்பன மருத்துக்கள் ஏழுவரின் பெயர்.*

பிக்கிறான், (ஊடுருவிச்) செல்கிறான் என்பதால் தேவ :; வாஸுவாயும் தேவனுயு மிருப்பதால் வாஸுதேவ :.

சாதயாமி ஜகத்விஶ்வம் பூத்வா ஸூர்ய இவாம்ஶுபி : |
ஸர்வபூதாநி வாஸஶ்ச வாஸுதேவஸ்தத : ஸ்ம்ருத : ||

(மஹா பாரதம் ; சாந்தி 350, 41.)

வஸனுத் ஸர்வபூதானும் வஸுத்வாத் தேவயோனித : |
வாஸுதேவஸ்ததோ ஜ்ஞேயோ யோகிபிஸ் தத்த்வதர்ஶிபி : ||

என்று [மஹா பாரதம்] உத்யோக பருவத்திலுள்ளது (69, 3).

ஸர்வத்ராஸௌ ஸமஸ்தம் ச வஸத்யத்ரேதி வை யத : |
தத : ஸ வாஸுதேவேதி வித்வத்பி : பரிபட்யதே || (1, 2, 12)

ஸர்வாணி தத்ர பூதானி வஸந்தி பரமாத்மனி |
பூதேஷு ச ஸ ஸர்வாத்மா வாஸுதேவஸ் தத : ஸ்ம்ருத : || (6, 5, 80)

என்றும் விஷ்ணு புராணத்திலுள்ளன.

(333) ப்ருஹந்தோ பானவோ யஸ்ய சந்த்ரஸூர்யாதிகாமின : |
தைர் விஶ்வம் பாஸயதி ய : ஸ ப்ருஹத்பானுருச்யதே ||

[சந்திர சூரியர்களைக் காட்டிலும் மிகுந்தவையாய் பெரியனவாய் இருக்கும் ஒளிகளையுடையவனுகி அவற்றால் உலகமுழுவதையும் ஒளிரச் செய்கின்றவன் எவனே அவன் ப்ருஹத்பானு:].

(334) ஆதி : காரணம் ; காரணமாகிய தேவன் ஆதிதேவ :; ஒளி பெறுதல் முதலிய குணங்களையுடையவன் தேவ : [என்னப் படுகிறான்].

(335) சுரர்களின் (தேவர்களின்) விரோதிகளுடைய புரங்களை கூறுகூறாகச் செய்வதால் புரந்தர: "வாசம்யமபுரந்தரௌ ச" [பாணினி. ஸூ. 6, 3, 69] என்று பாணினி (நிபாதனஞ் செய்திருப்பதால்) ஸூத்திரித்திருப்பதால்.

**अशोकस्तारणस्तारः शूरः शौरिर्जनेश्वरः ।**
**अनुकूलः शतावर्तः पद्मी पद्मनिभेक्षणः ॥ ५० ॥**

50. அஶோகஸ் தாரணஸ்தார : ஶூர : ஶௌரிர் ஜனேஶ்வர :
அனுகூல : ஶதாவர்(த்)த : பத்மீ பத்மநிபேக்ஷண :

(336) சோகம் முதலிய ஆறு (ஊர்மிகளும்) அலைகளைப் போன்ற குற்றங்களும்* இல்லாததால் அஶோக :

(337) ஸம்ஸாரமாகிய ஸாகரத்தைக் கடப்பதற்கு உதவுதால் தாரண :.

(338) கர்ப்பவாஸம், பிறப்பு, மூப்பு, மரணம் ஆகியவற்றாலுண்டாகும் பயத்தினின்றும் காத்து, அக்கரை சேர்ப்பதால், தார :.

(339) விக்கிரச் செயலால் ஶூர :.

(340) ஶூரஸ்ய வாஸுதேவனுடைய அபத்யம் மகன் ஆதலால் ஶௌரி :.

(341) ஜனனம் ஜந்துக்களுக்கு, ஈசுவரன் என்பதால், ஜனேஶ்வர :.

(342) ஆத்மாவாகி (தானேயாகி) எல்லோர்க்கும் [அனுகூலஞ் செய்வதால்] அனுகூல :; தானே தனக்குப் பிரதிகூலம் செய்யமாட்டான் அன்றோ?

(343) தருமத்தைப் பாதுகாப்பதற்காக பல (நூறு) தடவைகள் அவதாரங்களை யெடுக்கிறான் (தோன்றுகிறான்) என்பதால் ஶதாவர்(த்)த :; (ii) அல்லது, நூறு நாடிகளிலும் பிராண வடிவு கொண்டு இருக்கிறான் என்பதால்.

(344) தாமரை [இவனுடைய] கையிலே யிருப்பதால் பத்மீ.

---

* 'ஶோகமோஹௌ ஜராம்ருத்யூ க்ஷுத்பிபாஸே ஷடூர்மய :' என்று, சோகம், மோகம், மூப்பு, சாவு, பசி, தாகம் ஆகிய ஆறும் ஊர்மிகள் (அலைகள்) என்னப்படும் குற்றங்கள்.

(345) பத்மநிபே தாமரைகளைப் போன்ற ஈக்ஷணே இரண்டு கண்களையுடையவன் என்பதால் பத்மநிபேக்ஷண :.

**पद्मनाभोऽरविन्दाक्षः पद्मगर्भः शरीरभृत् ।**
**महर्द्धिऋद्धो वृद्धात्मा महाक्षो गरुडध्वजः ॥ ५१ ॥**

51. பத்மநாபோ' ரவிந்தாக்ஷ : பத்மகர்ப: ஶரீரப்ருத்
மஹர்த்திர் ருத்தோ வ்ருத்தாத்மா மஹாக்ஷோ கருடத்வஜ:

(346) தாமரையின் நாபோ மத்தியிலே கர்ணிகையில் இருப்பவன் என்பதால் பத்மநாப :.

(347) அரவிந்தம் போன்ற இரண்டு கண்களையுடையவன் என்பதால் அரவிந்தாக்ஷ ஃ.

(348) ஹ்ருதய மென்னப்படும் தாமரையின் மத்தியிலே உபாஸிக்கத் தக்கவனாதலால் பத்மகர்ப ஃ.

(349) அன்னமாயும் பிராணனாயும் போஷித்து சரீரமெடுத்தவர்களின் சரீரங்களை நிலைபெறச் செய்வதால் (தாங்கி நிற்பதால்) ஶரீரப்ருத் ; (ii) அல்லது, தன் மாயா சக்தியால் சரீரங்களை மேற்கொள்கிறான் என்பதால்.

(350) பெரிய ருத்தி ஃ விபூதியை (ஐசுவரியங்களை) யுடையவன் என்பதால் மஹ(ர்)த்தி ஃ.

(351) பிரபஞ்சமாகிப் பெருகுவதால், ருத்த ஃ.

(352) வ்ருத்த ஃ புராதனமான, ஆத்மாவை உடையவன் ஆதலால் விருத்தாத்மா.

(353) இரண்டு பெரிய கண்களை, அல்லது, பல பெரிய கண்களை யுடையவன் என்பதால் மஹாக்ஷ ஃ.

(354) கருடனை அடையாளமாகக் கொண்ட கொடியை யுடையவன் என்பதால் கருடத்வஜ ஃ.

अतुलः शरभो भीमः समयज्ञो हविर्हरिः ।
सर्वलक्षणलक्षण्यो लक्ष्मीवान्समितिञ्जयः ॥ ५२ ॥

52. அதுல : ஶரபோ பீம : ஸமயஞ்ஞோ ஹவிர்ஹரி :
ஸர்வலக்ஷணலக்ஷண்யோ லக்ஷ்மீவான் ஸமிதிஞ்ஜய :

(355) துலா (ஈடு) உபமானம், இவனுக்கு இல்லை என்பதால் அதுல :; "ந தஸ்ய ப்ரதிமாஸ்தி யஸ்ய நாம மஹத் யஶ :" என்பது (ஶ்வே. உப. 4, 19) சுருதி; "ந த்வத் ஸமோஸ்த்யப்யதிக : குதோன்ய :" (கீதை. 11, 43) என்பது ஸம்ருதி.

(356) அழியுந்தன்மையன ஆதலால் சரீரங்கள் ஶரா : என்னப்படுவன; அவற்றுள் பிரத்தியக் ஆத்மாவாய் விளங்குவதால் ஶரப :.

(357) (i) எல்லோரும் இவனுக்கு நடுங்குவதால் பீம :; "பீமாதயோபாதானே" என்பது பாணினி ஸ்ம்ருதி (3, 4, 74);

(357) (ii) அல்லது, நல்ல வழியிலே நடப்போர்க்கு அபீம : [பயங்கரமின்றி யிருப்பவன்]. என்று [கொள்ளலாம்].

(358) சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் இவற்றிற்குரிய காலத்தையறிந்தவன் ஆதலால் ஸமயஜ்ஞ :; (ii) அல்லது, ஆறு சமயங்களையும் (மதங்களையும்) அறிந்தவன் என்பதால் ஸமயஜ்ஞ :; (iii) அல்லது, இவனைப் பூஜிப்பது எல்லா வுயிர்களையும் ஸமமாகக் கொள்வது என்பதால்; "ஸமத்வமாராதன மச்யுதஸ்ய" என்பது ப்ரஹ்லாத வசனம் (விஷ்ணு பு. 1, 17, 90) [ஸமத்வ பாவத்தையே ஆராதனமாக வுடையவன்].

(359) யாகங்களில் அவிர்ப்பாகத்தைப் பெற்றுக் கொள்கிறான் என்பதால் ஹவிர்ஹரி :; "அஹம் ஹி ஸர்வயஜ்ஞானாம் போக்தா ச ப்ரபுரேவ ச" (கீதை 9, 24) என்பது பகவத் வசனம்.

(359—i) அல்லது ஹவிஸைப் பெற்றுக்கொள்வதற்கு இவன் (யாகத்தில்) அழைக்கப்படுகிறான் என்பதால் ஹவி:; (ii) அல்லது, "அபத்நந் புருஷம் பஶும்" (புருஷஸூ. 15) என்பதால் மேலான அவிப்பொருளாக வேதத்திலே சொல்லப்பட்டவன் ஆதலால்.

(359—ii) நினைத்த மாத்திரத்தில் மனிதர்களுடைய பாபத்தையும் ஸம்ஸாரத்தையும் போக்குகிறான் என்பதால்; (ii) அல்லது ஹரித வர்ணம் (பச்சை நிறம்) உடையவனாதலால் ஹரி:; "ஹராம்யகம் ச ஸ்மர்த்ரூணாம் ஹவிர்பாகம் க்ரதுஷ்வஹம், வர்ணஶ்ச மே ஹரிர் வேதி தஸ்மாத் தரிரஹம் ஸ்ம்ருத:" (மஹாபா சாந்தி 352, 3) என்பது பகவத் வசனம்.

(360) எல்லா லக்ஷணை: பிரமாணங்களாலும் லக்ஷணம் ஞானம் உண்டாகின்றது; அந்த ஞானம் ஸர்வ லக்ஷண லக்ஷணம், அதுவே ஸர்வ லக்ஷண லக்ஷண்ய: என்னப்பட்டது, அதுவே பரமார்த்தப் பொருளாகையால்.

(361) லக்ஷ்மீ இவனுடைய திருமார்பிலே எப்பொழுதும் வசிப்பதால் லக்ஷ்மீவான்.

(362) ஸமிதிம் யுத்தத்தில், ஜயிக்கிறான் என்பதால் ஸமிதிம் ஜய:.

विक्षरो रोहितो मार्गो हेतुर्दामोदरः सहः ।
महीधरो महाभागो वेगवानमिताशनः ॥ ५३ ॥

53. விக்ஷரோ ரோஹிதோ மார்கோ ஹேதுர் தாமோதர : [ஸஹ :
மஹீதரோ மஹாபாகோ வேகவானமிதாஶந :

(363) க்ஷர: நாசம் இவனுக்கு இல்லை யாதலால் விக்ஷர :.

(364) தன்னிச்சைப்படி, சிவந்த வடிவை (ii) அல்லது ரோகிதமீனின் வடிவை எடுப்பதால் ரோஹித :.

(365) மோக்ஷம்பெற விரும்புவோர் இந்த தெய்வத்தை நாடுவதால் மார்க:; (ii) அல்லது, பரமானந்தம் எவனுடைய உதவியால் (எவனால்) அடையப்படுகிறதோ அவன் மார்க்க:.

(366) உபாதான காரணமும் நிமித்த காரணமும் அவனேயாதலால் ஹேது:.

(367) தமம் (அடக்கம்) முதலிய ஸாதனங்களால் உதாரா சிறந்ததான, புத்தி (உண்டாகும்); அதனால் அறியப்படுவோன் என்பதால் தாமோதர:; "தமாத்தாமோதரம் விது:" என்பது (உத்யோகப. 69, 8) மஹாபாரதம்; (ii) அல்லது, கயிற்றால் வயிற்றிலே யசோதையாலே கட்டப்பெற்றவன் என்பதால், தாமோதர:.

*ததர்ஶ சால்பதந்தாஸ்யம் ஸ்மிதஹாஸம் ச பாலகம் |*
*தயோர் மத்யகதம் பத்தம் தாம்னா காடம் தயோதரே |*
*ததஶ்ச தாமோதரதாம் ஸ யயௌ தாமபந்தனாத் ||*

என்பது ப்ரஹ்மபுராணம் (76, 13—14) (iii) அல்லது,

*தாமானி லோகநாமானி தானி யஸ்யோதராந்தரே |*
*தேந தாமோதரோ தேவ: [ஸ்ரீதர: ஸ்ரீஸமாஶ்ரித:] ||*

என்னும் வியாசவசனத்தால் [உலகங்களை வயிற்றுள் வைத்திருப்பதால் தாமோதர:].

(368) எல்லோரையும் வென்று வெற்றிகொள்கிறான், (ii) அல்லது, (எல்லோரையும் தாங்குகிறான்) பொறுத்துக்கொள்கிறான் என்பதால் ஸஹ:.

(369) மலையாகிப் பூமியைத் தாங்குவதால் மஹீதர:; "வனானி விஷ்ணுர் கிரியோ திஶஶ்ச" (விஷ்ணுபு. 2, 12, 38) என்பது பராசர வசனம்.

(370) தன்னிச்சைப்படி தேகத்தை மேற்கொண்டு, மஹா சிறந்தவைகளான, போஜனங்களை தனக்குரியதான பாகமாகக் கொண்டு, அதை உண்பதால் மஹாபாக:; (ii) அல்லது, இவனு

டைய அவதாரங்களில் (இவன்) பெருநன்மையைப் பெறுவதால் மஹாபாக :.

(371) ஜவம் வேகம், அதை யுடையவனாதலால் வேகவான்; "அநேஜதேகம் மனஸோ ஜவீய :" (ஈசா. உப. 4) என்பது சுருதி.

(372) ஸம்ஹார காலத்தில் உலகனைத்தையும் உண்கிறான் என்பதால் அமிதாஶன : [அளவில்லாத உணவை யுடையவன்].

**उद्भवः क्षोभणो देवः श्रीगर्भः परमेश्वरः ।**
**करणं कारणं कर्ता विकर्ता गहनो गुहः ॥ ५४ ॥**

54. உத்பவ : க்ஷோபணோ தேவ : ஸ்ரீகர்ப : பரமேஶ்வர :
கரணம் காரணம் கர்(த்)தா விகர்(த்)தா கஹனோகுஹ :

(373) பிரபஞ்சத்தின் உற்பத்திக்கு உபாதான காரணம் ஆதலால் உத்பவ :; (ii) அல்லது பவாத் ஸம்ஸாரத்தினின்று, மேற்கிளம்பியவன் [ஸம்ஸாரத்திற்கு அப்பாற்பட்டவன்] என்பதால்.

(374) சிருஷ்டி காலத்திலே பிரகிருதியையும் புருஷனையும் உட்புகுந்து கலக்கினான் என்பதால் க்ஷோபண :;

ப்ரக்ருதிம் புருஷம் சைவ ப்ரவிஶ்யாத்மேச்சயா ஹரி : |
க்ஷோபயாமாஸ பகவான் ஸர்ககாலே வ்யயாவ்யயௌ ||

(1, 2, 29) என்பது விஷ்ணு புராணம்.

(375) தீவ்யதி சிருஷ்டி முதலியவற்றால் விளையாடுகிறான்; (ii) அல்லது, அசுரர் முதலியவர்களை வெற்றிகொள்கிறான்; (iii) அல்லது, எல்லா உயிர்களையும் இயக்குகிறான்; (iv) அல்லது, ஆத்மாவாய் ஒளிர்கிறான்; (v) அல்லது, ஸ்தோத்திரங்களால் ஸ்துதிக்கப் படுகிறான்; (vi) அல்லது, எங்கும் செல்கிறான் என்பதால் தேவ :; "ஏகோ தேவ :" (ஶ்வே. உப. 6, 11) என்பது மந்த்ர வர்ணம்.

(376) ஸ்ரீ: விபூதி [ஐசுவரியம்] எவனுடைய **கர்பே** வயிற்றினுள்ளே, ஜகத்ரூபமாய் இருக்கிறதோ அவன் **ஸ்ரீகர்ப:.**

(377) மிகவும் சிறந்த (ஐசுவரியத்தை) ஆட்சித்திறனையுடையவன் என்பதால் **பரமேஶ்வர:**; "ஸமம் ஸர்வேஷு பூதேஷு திஷ்டந்தம் பரமேஶ்வரம்" (கீதை : 13, 27) என்பது பகவத் வசனம்.

(378) ஜகத்தைத் தோற்றுவிப்பதற்கு மிகச் சிறந்த ஸாதகம் (கருவி) ஆதலால் **கரணம்.**

(379) உபாதான காரணமும் நிமித்த காரணமும் ஆதலால் **காரணம்.**

(380) **கர்(த்)தா** ஸ்வதந்திரமுடையவன் என்பதால்.

(381) உலகமானது விசித்திரமாக (வெவ்வேறு விதமாக) சிருஷ்டிக்கப்பட்டதால் **விகர்(த்)தாவும்** அந்த விஷ்ணு பகவானே.

(382) அவனுடைய ஸ்வரூபத்தையோ (இயல்பையோ) திறமையையோ செய்கையையோ அறிவதற்கு இயலாது என்பதால் **கஹன:.**

(383) ஸ்வரூபம் முதலியவற்றை தன் மாயையால் **கூஹதே** மூடிமறைக்கிறான் என்பதால் **குஹ:**; "நாஹம் ப்ரகாஶ: ஸர்வஸ்ய யோகமாயாஸமாவ்ருத:" (கீதை. 7, 25) என்பது பகவத் வசனம்.

**व्यवसायो व्यवस्थानः संस्थानः स्थानदो ध्रुवः ।**
**परर्द्धिः परमस्पष्टस्तुष्टः पुष्टः शुभेक्षणः ॥ ५५ ॥**

**55.** வ்யவஸாயோ வ்யவஸ்தான: ஸம்ஸ்தான: ஸ்தானதோ த்ருவ:
பரர்த்தி: பரமஸ்பஷ்டஸ் துஷ்ட: புஷ்ட: ஶுபேக்ஷண:

(384) ஸம்வித் ஞான மாத்திரமான வடிவினன் என்ப

(385) இவனிடத்திலே எல்லாம் வைக்கப்பட்டிருத்தலால் **வ்யவஸ்தான**:; (ii) அல்லது, லோகபாலர் முதலிய அதிகாரிகள், கர்ப்பத்தால் பிறக்கும் பிறவிகள், முட்டையினின்று பிறக்கும் பிறவிகள், முளையாகிப் பிறந்து வளரும் செடிகொடிகள், பிராம்மணன் க்ஷத்திரியன் வைசியன் சூத்திரன் இடையிடையுள்ள (கலப்பு) சாதிகள், பிரும்மசாரி கிருஹஸ்தன், வானப்ரஸ்தன் சன்னியாசி ஆகிய ஆசிரமங்கள் முதலியவற்றை யெல்லாம் வகுத்து உண்டாக்கினன் என்பதால் **வ்யவஸ்தான**:; "க்ருத்யல்யுடோ பஹுலம் இதி பஹுல க்ரஹணாத் கர்(த்)தரி ல்யுட் ப்ரத்யய:" (என்பது இலக்கணக் குறிப்பு).

(386) பிரளயமாகிய ஸம்ஸ்திதியானது (நல்லிருப்பானது) உயிர்களுக்கு இவனிடத்தே யாதலால்; (ii) அல்லது, உண்மையான இருப்பை யுடையவன் என்பதால் **ஸம்ஸ்தான**:.

(387) துருவன் முதலானவர்களுக்கு (அவரவர்கள்) செய்யும் செயலுக்கு ஏற்றவாறு ஸ்தானம் அளிப்பதால் **ஸ்தானத**:.

(388) அழிவில்லாதவனுதலால் **த்ருவ**:.

(389) சிறந்த ருத்தி: விபூதியை யுடையவன் என்பதால் **பரர்த்தி**:.

(390) **பரா** சிறந்த **மா** சோபை; அதை யுடையவன் என்பதால் **பரம**:; (ii) அல்லது, வேறு ஆட்சிக்குட்படாத தன்மை யுடைவனுகி எல்லோரினும் சிறந்தவனுதலாலும், ஸம்வித் ஞானமாகித் தெளிவா யிருப்பதாலும் **பரமஸ்பஷ்ட**:.

(391) ஒரே பரமானந்தமான வடிவையுடையவனுதலால் **துஷ்ட**:.

(392) எல்லாம் நிறைந்தவனுதலால் **புஷ்ட**:.

(393) எவனுடைய ஈக்ஷணம் கண்ணோக்கமானது **சுபம்** சுபகரமாகி, மோக்ஷத்தை நாடுவோருக்கு மோக்ஷத்தைக் கொடுப்பதாயும் போகத்தை வேண்டுவோர்க்கு போகத்தைக் கொடுப்ப

தாயும் எல்லாச் சந்தேகங்களையும் போக்குவதற்குக் காரண மாயும் பாபிகளைத் தூய்மை செய்வதாயும் ஹ்ருதயக் கிரந்தி என்னும் சிக்கலைச் சேதஞ் செய்வதாயும் எல்லாக் கருமபந்தங் களையும் அழிப்பதாயும் அவித்தையை (நிவர்த்தி செய்வதாயும்) போக்குவதாயும் (இருக்கிறதோ), அவன் ஶமபேக்ஷண :; "பித்யதே ஹ்ருதயக்ரந்தி :" என்று தொடங்கும் சுருதியைக் காண்க. (முண். உப. 2, 2, 8)

**रामो विरामो विरजो मार्गो नेयो नयोऽनयः ।**
**वीरः शक्तिमतां श्रेष्ठो धर्मो धर्मविदुत्तमः ॥ ५६ ॥**

56. ராமோ விராமோ விரஜோ மார்கோ நேயோ நயோ' நய ;
வீர : ஶக்திமதாம் ஶ்ரேஷ்டோ தர்மோ தர்மவிதுத்தம :

(394) நித்யானந்த வடிவனான இவனிடத்திலே யோகிகள் இன்புறுகிறார்கள் என்பதால் ராம :; "ரமந்தே யோகினோ யஸ்மிந் நித்யானந்தே சிதாத்மனி" என்பது பத்ம புராணம்; (ii) அல்லது, தன்னிச்சையாலே ரமணீயமான உடலைத் தாங்கிய தசரத புத்திரன் ராம :.

(395) உயிர்களின் விராம : முடிவு இவனிடத்திலே யாதலால் விராம:.

(396) இந்திரியங்களுக்கு ஆட்செய்வதில் இவனுக்கு (விருப்பம்) பற்று இல்லையாதலால் விரத :.

(397) எவனை யறிந்ததும் மோக்ஷத்தை நாடும் யோகிகள் சாவாத்தன்மையுடையவராகக் கருதப்படுகின்றார்களோ அவனே வழி என்பதால் மார்க :; "நான்ய : பந்தா வித்யதே'யனாய" என்பது சுருதி. (ஶ்வே. உப. 6, 15).

(398) மார்கேண ஸம்யக்ஞானத்தாலே ஜீவன் பரமாத்மாவாகக் கொள்ளப்படுகிறான் ஆதலின் நேய :.

(399) வழி நடத்துவதால் நய: (வழி நடத்துவோன்).

(400) இவனை நடத்துவிப்போன் இல்லையாதலால் அநய :.

இவ்வாறு பெயர்களின் நான்காவது நூறு விரித்துரை செய்யப்பட்டது.

(401) விக்கிரசாலியாதலால் வீர :.

(402) பிரமன் (விரிஞ்சி) முதலான சக்திமான்களைக் காட்டிலும் அதிக சக்திமான் ஆதலால் ஶக்திமதாம் ஶ்ரேஷ்ட :.

(403) எல்லா வுயிர்களையும் தாங்குவதால் தர்ம : ; "அணு ரேஷ தர்ம :" (கடோப. 1, 1, 21) என்பது சுருதி; (ii) அல்லது, தருமங்களைக் கொண்டு ஆராதிக்கப்படுவதால் தர்ம :.

(404) சுருதிகளும் ஸ்மிருதிகளும் எவனுடைய உத்திரவுகளோ அவனே எல்லா தர்மவித்துக்களிலும் (அறமறிந்தோர்களிலும்) சிறந்தவன் என்பதால் தர்மவிதுத்தம :.

**वैकुण्ठः पुरुषः प्राणः प्राणदः प्रणवः पृथुः ।**
**हिरण्यगर्भः शत्रुघ्नो व्याप्तो वायुरधोक्षजः ॥ ५७ ॥**

57. வைகுண்ட: புருஷ: ப்ராண: ப்ராணத: ப்ரணவ: ப்ருது:
ஹிரண்யகர்ப: ஶத்ருக்னோ வ்யாப்தோ வாயுரதோக்ஷஜ:

(405) வெவ்வேறான குண்டா போக்கின் தடை விகுண்டா ; போக்குத்தடையைச் செய்வோன் என்பதால் வைகுண்ட : ; ஜகத்தின் தொடக்கத்திலே சிதறிக் கிடந்த (ஐம்)பூதங்களை ஒன்றோடொன்று சேர்த்து அவற்றின் போக்கைக் கட்டுப்படுத்துகிறான் என்பதால்.

மயா ஸம்ஶ்லேஷிதா பூமி ரத்பிர் வ்யோம ச வாயுனா |
வாயுஶ்ச தேஜஸா ஸார்தம் வைகுண்டத்வம் ததோ மம ||

என்பது (மஹாபாரதம்) சாந்தி பர்வத்திலுள்ளது (352, 15).

(406) எல்லாவற்றிற்கும் முன்னுலிருப்பதால்; (ii) அல்லது, ஸகல பாவங்களையும் அழிப்பதால் புருஷ:;

ஸ யத் பூர்வோ'ஸ்மாத் ஸர்வஸ்மாத் ஸர்வான்
பாப்மன ஔஷத் தஸ்மாத் புருஷ: (ப்ருஹ. உப. 1, 4, 1)

என்பது சுருதி. (iii) அல்லது தேகத்தில் [சயனித்து] தங்கியிருப்பதால் புருஷ:; "ஸ வா அயம் புருஷ: ஸர்வாஸு பூர்ஷு புரி ஶய:" (ப்ருஹ. உ.ப. 2, 5, 18) என்பது சுருதி.

(407) க்ஷேத்ரஜ்ஞ வடிவு கொண்டு உயிர்க்கிருன்; (ii) அல்லது, பிராணனுகி (உடல்களை) இயங்கச் செய்கிருன் என்பதால் ப்ராண:; "சேஷ்டாம் கரோதி ஶ்வஸன ஸ்வரூபீ" என்பது விஷ்ணு புராணம்.

(408) பிரளயம் முதலிய காலங்களிலே பிராணிகளின் பிராணன்களை வெட்டியழிக்கிருன் என்பதால் ப்ராணத:.

(409) ஓம் என்று ஒலிக்கிருன் என்பதால் ப்ரணவ:; "தஸ்மாதோமிதி ப்ரணௌதி" என்பது சுருதி; (ii) அல்லது, வணங்கப்படுகிருன் என்பதால் ப்ரணவ:; "ப்ரணமந்தீஹ யம் வேதாஸ் தஸ்மாத் ப்ரணவ உச்யதே" என்பது ஸநத்குமார வசனம்.

(410) பிரபஞ்ச ரூபமாய் விரிந்துள்ளான் ஆதலால் ப்ருது:.

(411) ஹிரண்யகர்ப்பனுடைய பிறப்பிற்குக் காரணமான பொன் மயமான முட்டை எந்த வீரியத்தால் உண்டாயிற்ருே, அது இவனுடைய (கருப்பம்) வீரியம் ஆதலால் ஹிரண்யகர்ப:.

(412) தேவர்களின் பகைவர்களை அழிப்பதால் ஶத்ருக்ன:.

(413) காரணமாகி எல்லாக் காரியப் பொருளிலும் வியாபித்திருப்பதால் வ்யாப்த:.

(414) வாதி மணங் கமழச் செய்கிருன் என்பதால் வாயு:; "புண்யோ கந்த: ப்ருதிவ்யாம் ச" (கீதை 7, 9) என்பது பகவத் வசனம்.

(415) "அதோ ந க்ஷீயதே ஜாது யஸ்மாத் தஸ்மாத் அதோக்ஷஜ:" என்று உத்யோக பர்வத்தில் (69, 210) உள்ளது; [ஒருகாலும் சிறிதேனும் குறைவு படாதவன்]; (ii) அல்லது, ஆகாசம் அக்ஷம்; பூமி அத:; இவ்விரண்டுக்கும் மத்தியிலே விராட்புருஷ வடிவுகொண்டு தோன்றுகிறான் ஆதலால் அதோக்ஷஜ:; (iii) அல்லது, "அதோ பூதேஷு யக்ஷகணே ப்ரத்யக்ரூப ப்ரவாஹிதே, ஜாயதே தஸ்ய வை ஜ்ஞானம் தேந அதோக்ஷஜ உச்யதே" [இந்திரியங்கள் உள்ளே நோக்கி அதனால் ப்ரதியக் ரூபங்கள் நாசமுற்றால் அவனைப்பற்றிய ஞானமுண்டாகும் என்பதால் அதோக்ஷஜ: என்று சொல்லப்படுகிறான்].

ऋतुः सुदर्शनः कालः परमेष्ठी परिग्रहः ।
उग्रः संवत्सरो दक्षो विश्रामो विश्वदक्षिणः ॥ ५८ ॥

58. ருது: ஸுதர்ஶந: கால: பரமேஷ்டீ பரிக்ரஹ:
உக்ர: ஸம்வத்ஸரோ தக்ஷோ விஶ்ராமோ விஶ்வ தக்ஷிண:

(416) கால வடிவனாகி 'ருது' என்னும் சொல்லால் குறிக்கப்படுவதால் ருது:.

(417) மங்களமான மோக்ஷமென்னும் பலனை யுடைய தர்ஶனம் ஞானம்; அதை யுடையவன் என்பதால் ஸுதர்ஶந:; (ii) அல்லது, மங்களகரமான இரண்டு கண்கள் இவனுக்குத் தாமரை யிதழ்போல் இருக்கின்றன என்பதால்; (iii) அல்லது, சிரமமின்றி (எளிதில்) பக்தர்களால் காணப்படுகிறான் என்பதால் ஸுதர்ஶந:.

(418) எல்லாவற்றையும் வரையறை செய்து அளவுபடுத்துவதால் கால:; "கால: கலயதாமஹம்" (கீதை. 10, 30) என்பது பகவத் வசனம்.

(419) பரமே மிகச் சிறந்த, தன் மஹிமையாகிய ஹ்ருதயாகாசத்தாலே நிலைத்திருக்கும் இயல்புடையவன் என்பதால்

பரமேஷ்டீ ; "பரமேஷ்டீ விப்ராஜதே" (ஆபஸ். த. 1, 23, 2) என்பது மந்த்ரவர்ணம்.

(420) எங்கும் புகுந்திருப்பவனாதலால், சரணம் வேண்டு வோர்களால் நன்றாகப் பற்றிக்கொள்ளப்படுவோன் ; (ii) அல் லது, நன்றாக (எல்லாப் படியாலும்) அறியப்படுவோன் என்ப தால்; (iii) அல்லது, இலை பூ முதலியன பக்தர்களால் சமர்ப்பிக் கப்பட்டவற்றை நன்றாக ஏற்றுக்கொள்கிறான் [கீதை. 9, 26] என்பதால் பரிக்ரஹ :.

(421) சூரியன் முதலானவர்களுக்கும் பயப்படுவதற்குக் காரணமாதலால் உக்ர :; "பீஷோதேதி ஸூர்ய :" (தைத். உப 2, 8) என்பது சுருதி.

(422) இவனிடத்தில் உயிர்கள் ஒன்று கூடி வசிப்பதால் ஸம்வத்ஸர :.

(423) ஜகத் வடிவாக (விருத்தி யடைவதால்) பெருகு வதால்; (ii) அல்லது, எல்லாக் காரியங்களையும் விரைவாகச் செய்து முடிப்பதால் தக்ஷ :.

(424) பசி தாகம் முதலிய ஆறு வகைப்பட்ட (ஊர்மி களால்) அலைகளால் அலைக்கப்படும் ஸம்ஸாரமாகிய ஸாகரத்திலே அவித்யை முதலிய (கிலேசங்களாலும்) பெருந்துன்பங்களாலும், மதம் (செருக்கு) முதலிய (உபக்கிலேசங்களாலும்) சிறு துன்பங் களாலும் வசப்படுத்தப்பெற்று, விசிராந்தி (ஓய்வு) பெற விரும்புவோருக்கு மோக்ஷமென்னும் விஶ்ராமத்தை (ஓய்வை)க் கொடுப்பதால் விஶ்ராம :.

(425) எல்லாரையுங் காட்டிலும் தக்ஷிண : (அதிக) சக்தி மான் ; (ii) அல்லது, எல்லாக் கருமங்களிலும் திறமையுடைய வன் என்பதால் விஶ்வதக்ஷிண :.

**विस्तारः स्थावरः स्थाणुः प्रमाणं बीजमव्ययम् ।**
**अर्थोऽनर्थो महाकोशो महाभोगो महाधनः ॥ ५९ ॥**

59. விஸ்தார: ஸ்தாவ: ஸ்தாணு: ப்ரமாணம் பீஜமவ்யயம்
அர்(த்)தோ'னர்(த்)தோ மஹாகோஶோ மஹாபோகோ
மஹாதன :

(426) *தன்னிடத்திலே எல்லா ஜகத்துக்களும் விரிவடை கின்றன என்பதால்* **விஸ்தார :.**

(427) *நிலைத்திருக்கும் இயல்புடையவனுகையால்* **ஸ்தாவர :;** *நிலைத்திருக்கும் இயல்புடையவையான பூமி முதலிய பொருளும் இவனிடத்தில் நிலை பெற்றிருப்பதால்* **ஸ்தாணு :** ; *ஸ்தாவர மாயும் ஸ்தாணுவாயுமுள்ளவன்* **ஸ்தாவரதாஸ்ணு :.**

(428) *ஸம்வித் ஞான வடிவினனுதலால்* ப்ரமாணம்.

(429) *மாறுபாடு ஒன்றும் இல்லாத [அழிவில்லாத] காரணம் என்பதால்* **பீஜமவ்யயம்** ; *இது அடைமொழியோடு கூடிய ஒரே பெயர்.*

(430) *இன்பவடிவினன் ஆதலால் எல்லோராலும் வேண்டப்படுவோன் என்பதால்* **அர்(த்)த :.**

(431) *[தான்] விரும்பியவற்றைப் பெற்றவனுதலால் இவனுக்கு [பெறவேண்டிய] பயன் இல்லை என்பதால்* **அனர்(த்)த :.**

(432) *அன்னமயம் * முதலான பெரிய (கோசங்களை) போர்வைகளை யுடையவன் என்பதால்* **மஹாகோஶ :.**

(433) *பெரிதான இன்பவடிவை யுடையவன் என்பதால்* **மஹாபோக :.**

---

* *அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்த மயம் என்று ஐந்து கோசங்கள் தைத்திரிய உபநிஷத்தில் கூறப் பட்டுள்ளன.*

(434) போகங்களுக்குச் சாதனமாகிய மிகுந்த தனத்தை யுடையவன் என்பதால் மஹாதன :.

अनिर्विण्णः स्थविष्ठोऽभूर्धर्मयूपो महामखः ।
नक्षत्रनेमिर्नक्षत्री क्षमः क्षामः समीहनः ॥ ६० ॥

60. அநிர்விண்ண: ஸ்தவிஷ்டோ'பூர் தர்மயூபோ மஹாமக:
நக்ஷத்ரநேமிர் நக்ஷத்ரீ க்ஷம: க்ஷாம: ஸமீஹன:

(435) விரும்பியவற்றைப் பெற்றவனாதலால் (நிர்வேதம்) துக்கம் இவனுக்கு இல்லையென்பதால் அநிர்விண்ண :.

(436) விராட்புருஷ வடிவிலே நிற்பதால் ஸ்தவிஷ்ட :; "அக்னிர் மூர்தா சக்ஷுஷீ சந்த்ரஸூர்யௌ" என்பது சுருதி (முண்ட. உப. 2, 1, 4)

(437) (i) பிறப்பில்லாதவனாதலால் அபூ :.

(437) (ii) அல்லது, "பூ ஸத்தாயாம்" என்று சம்பத்து முதலியவற்றையுடையவனாதலால்; 'க்விப்' வந்தது (என்பது இலக்கணக் குறிப்பு); [நிலைத்திருப்பவன்]; (ii) அல்லது, பூமி பூ: [பூமியாவோன்].

(438) யூபத்திலே (கட்டிய) மிருகத்தைப்போல அவனை நன்கு ஆராதிப்பதற்கான தருமங்கள் அவனிடத்திலே கட்டுண்டிருப்பன வாதலால் தர்மயூப: [தர்மங்கள் அவனைப்பற்றிக் கிடக்கின்றன].

(439) எவனிடத்திலே ஸமர்ப்பணஞ் செய்யப்பட்டால் மகா: யாகங்கள், மோக்ஷம் என்னும் பலனை யளிப்பனவாகி மேன்மை பெறுவனவோ, அவன் மஹாமக :.

(440) நக்ஷத்ரதாரகை : ஸார்தம் சந்த்ரஸூர்யாதயோ க்ரஹா :
வாயுபாஶமயைர் பந்தைர் நிபத்தா த்ருவஸம்ஜ்ஞிதே.

[சந்திர சூரியர்கள் முதலியான கிரகங்கள் நக்ஷத்திரங்களோடுகூட வாயுக்கள் என்கிற கயிறுகளால் 'த்ருவன்' என்பவ

ஞேடு கட்டப்பட்டுள்ளன]. அந்த துருவன் சோதிவட்டத்தைச் சுழற்றிவிட்டு நக்ஷத்திரமயமான சிஞ்சுமாரனுடைய வால்புறத்தில் ஸ்திரமாய் வைக்கப்பட்டவன்; அந்த சிஞ்சுமாரனுடைய ஹ்ருதயப் பிரதேசத்தில் சோதிவட்டத்தின் (நேமி) குடம் போல அமைந்து அதனைச் செலுத்திக்கொண்டு நிற்கிறான் என்பதால் விஷ்ணு நக்ஷத்ரநேமி:; 'சிஞ்சுமார வர்ணன'த்திலே "விஷ்ணுர்ஹ்ருதயம்" என்று 'ஸ்வாத்யாய ப்ராஹ்மண'த்திலே (தைத். ஆரண்ய. 2, 19). சொல்லப்படுகிறது.

(441) சந்திரனுடைய வடிவுகொண்டவனுதலால், நக்ஷத்ரீ; "நக்ஷத்ராணு மஹம் ஶஶீ" என்பது (கீதை 10, 21) பகவத் வசனம்.

(442) எல்லாக் காரியங்களையும் [செய்வதில்] திறமையுள்ளவன் க்ஷம:; (ii) அல்லது, பொறுத்துக் கொள்கிறான் என்பதால்; "க்ஷமயா ப்ருதிவீஸம:" என்பது வால்மீகி வசனம் (பாலகா. 1, 18).

(443) எல்லா மாறுபாடுகளும் அற்றபோது தன் ஆத்மாவிலே நிலைத்திருப்பவன் என்பதால் க்ஷாம:; "க்ஷாயோ ம: இதி நிஷ்டாதகாரஸ்ய மகாராதேஶ:" (என்பது இலக்கணக் குறிப்பு.)

(444) சிருஷ்டி முதலியவற்றின் பொருட்டு நன்றாகிய விருப்பத்தைக் கொள்கிறான் என்பதால் ஸமீஹன:.

यज्ञ इज्यो महेज्यश्च क्रतुः सत्रं सतां गतिः ।
सर्वदर्शी विमुक्तात्मा सर्वज्ञो ज्ञानमुत्तमम् ॥ ६१ ॥

61. யஜ்ஞ இஜ்யோ மஹேஜ்யஶ்ச க்ரது: ஸத்ரம் ஸதாம் கதி:
ஸர்வதர்ஶீ விமுக்தாத்மா ஸர்வஜ்ஞோ ஜ்ஞானமுத்தமம்

(445) எல்லா யாகங்களாயும் இருப்பதால் யஜ்ஞ:; (ii) அல்லது, எல்லாத் தேவர்களுக்கும் அவிர்ப்பாகத்தால் இன்பந்

தருவோனும் யாகவடிவு கொண்டிருக்கிறுன் என்பதால், "யஜ்ஞோ வை விஷ்ணு:" (தைத் ஸம் 1, 7, 4) என்பது சுருதி.

(446) யாகங்களால் வழிபடத் தக்கவனும் இவனே என்பதால் இஜ்ய :.

யே யஜந்தி மகை: புண்யைர் தேவதாதீன் பித்ருனபி |
ஆத்மானமாத்மனு நித்யம் விஷ்ணுமேவ யஜந்தி தே ||

என்பது ஹறி வம்சம் (3, 40, 27).

(447) யாகங்களுக்குரிய எல்லாத் தேவதைகளினும் மிகுந்த சிறப்புள்ளவனும் யாகத்தால் வழிபடுவதற் குரியவன், மோக்ஷமென்னும் பலனைத் தருவோன் என்பதால் மஹேஜ்ய:.

(448) யூபத்தை யுடைய யாகம் க்ரது: [யாக ரூபியானவன்].

(449) 'ஆஸத்யுபைதி' சோதனுலக்ஷணம் [அதாவது, 'இருப்பது 'நெருங்குவது' என்பவை ஏவுவதைக் குறிப்பன] என்பதால், ஸத்ரம்; (ii) அல்லது, நல்லோரைக் காப்பதால் ஸத்ரம்.

(450) ஸதாம் மோக்ஷத்தை நாடுவோர்க்கு வேறென்று மில்லாத தனிப்பட்ட கதியாவதால் ஸதாம் கதி:.

(451) எல்லாப் பிராணிகளும் செய்வனவற்றையும் செய்யாதனவற்றையும் தனக்கு இயல்பான அறிவால் காண்கிறுன் என்பதால் ஸர்வதர்ஶீ.

(452) இயற்கையிலேயே விமுக்த: கட்டுப்படாத ஆத்மாவை வுடையவன்; (ii) அல்லது, கட்டுப்படாத ஆத்மாவாயிருப்பவன் என்பதால் விமுக்தாத்மா; "விமுக்தஶ்ச விமுச்யதே" (கடோப 2, 5, 1) என்பது சுருதி.

(453) எல்லாமும் அறிவோனுமாதலால் ஸர்வஜ்ஞ:; "இதம் ஸர்வம் யதயமாத்மா (ப்ருஹ. உப. 2, 4, 6) என்பது சுருதி.

(454) ஜ்ஞானம் உத்தமம் என்னும் இது அடைமொழி யுடையதான ஒரே பெயர்; சிறந்ததாய் வேறொன்றால் பிறவாது தானே என்றுமிருப்பதாய் (அவிச்சின்னமாய்) இடையறுததாய் எல்லாவற்றையும் பெறுவிக்கும் கருவிகளுட் சிறந்ததாய் இருக்கும் ஞானம் ஜ்ஞானம் உத்தமம், (அதாவது) பிரும்மம்; "ஸத்யம் ஜ்ஞானமனந்தம் ப்ரஹ்ம" என்பது சுருதி. (தைத். உப. 2, 1).

सुव्रतः सुमुखः सूक्ष्मः सुघोषः सुखदः सुहृत् ।
मनोहरो जितक्रोधो वीरबाहुर्विदारणः ॥ ६१ ॥

62. ஸுவ்ரத: ஸுமுக: ஸூக்ஷ்ம:ஸுகோஷ:ஸுகத:ஸுஹ்ருத்
மனோஹரோ ஜிதக்ரோதோ வீரபாஹுர் விதாரண:

(455) சோபனமான விரதத்தை யுடையவன் என்பதால் ஸுவ்ரத:.

ஸக்ருதேவ ப்ரபன்னாய தவாஸ்மீதி ச யாசதே |
அபயம் ஸர்வதா தஸ்மை ததாம்யேதத் வ்ரதம் மம ||

என்பது ஸ்ரீராமாயணத்திலே ராம வசனம் (யுத்தகா. 18, 33).

(456) சோபனமான முகத்தை யுடையவன் என்பதால் ஸுமுக:; "ப்ரஸன்ன வதனம் சாருபத்மபத்ராயதேக்ஷணம்" என்பது விஷ்ணு புராணம் (6, 7, 80); (ii) அல்லது, வனவாசஞ் செய்வதில் ஸுமுகனாயிருப்பதால் தசரதனுடைய மகன் ராமன் ஸுமுக:;

ஸ்வபிதுர் வசனம் ஸ்ரீமா னபிஷேகாத் பரம் ப்ரியம் |
மனஸா பூர்வமாஸாத்ய வாசா ப்ரதிக்ருஹீதவான் || (ஸு. 33, 24).

இமானி து மஹாரண்யே விஹ்ருத்ய நவ பஞ்ச ச |
வர்ஷாணி பரமப்ரீத: ஸ்தாஸ்யாமி வசனே தவ || (அயோ. 24, 17).

ந வனம் கந்துகாமஸ்ய த்யஜதஶ்ச வஸுந்தராம் |
ஸர்வலோகாதிகஸ்யைவ மனோ ராமஸ்ய விவ்யதே || (அயோ. 19, 33).

என்பது ஸ்ரீ ராமாயணம்; (iii) அல்லது, வித்யைகளையெல்லாம்

உபதேசிப்பதால் ஸுமுக:; "யோ ப்ரஹ்மாணம்" என்று தொடங்கும் சுருதியைக் காண்க (ஶ்வே. உப. 6, 18).

(457) ஒலி சப்தம் முதலிய ஸ்தூல காரணங்கள் இல்லாமையால்: ஆகாசம் முதலியவை மேன்மேலும் ஸ்தூலமாவதற்கு சப்தம் முதலியவை காரணங்கள், இக்காரணங்கள் (இவனுக்கு) இல்லை யாகையால் ஸூக்ஷ்ம:; "ஸர்வகதம் ஸுஸூக்ஷ்மம்" என்பது சுருதி (முண்டகோப. 1, 1, 6).

(458) வேதம் என்னப்படும் மங்களகரமான கோஷத்தை யுடையவன்; (ii) அல்லது, மேகத்தைப்போன்று கம்பீரமான கோஷத்தையுடையவன் என்பதால் ஸுகோஷ:.

(459) நல்ல நடத்தை யுடையோருக்கு சுகத்தைக் கொடுப்பதாலும், கெட்ட நடத்தையுடையோருடைய சுகத்தை த்யதி வெட்டி யழிப்பதாலும் ஸுகத:.

(460) பிரத்தியுபகாரத்தை எதிர்பாராமல் உபகாரஞ் செய்வோனுதலால் ஸுஹ்ருத்.

(461) நிரதிசயமான (அளவுகடந்த) ஆனந்த வடிவினனுகி மனத்தைக் கவர்வதால் மனோஹர:; "யோ வை பூமா தத்ஸுகம் நால்பே ஸுகமஸ்தி" என்பது சுருதி (சாந்தோ. உப. 7, 23, 1).

(462) எவனால் கோபம் செயிக்கப்பட்டதோ அவன் ஜிதக்ரோத:; வேத வரம்பை ஸ்தாபிப்பதற்காக சுரர்களின் (தேவர்களின்) பகைவர்களை கொல்கிறுனே யல்லாமல், கோபத்தின் வசப்பட்டுக் கொல்வோன் அல்லன் என்றவாறு.

(463) தேவர்களின் சத்துருக்களைக் கொன்று வேதவரம்பை நிலைநிறுத்தி, விக்கிரமம் பொருந்திய தோள்களை யுடையவன் என்பதால் வீரபாஹு:.

(464) அதர்மஞ் செய்வோரைக் கிழித்துப்போடுகிறுன் என்பதால் விதாரண:.

**स्वापनः स्ववशो व्यापी नैकात्मा नैककर्मकृत् ।**
**वत्सरो वत्सलो वत्सी रत्नगर्भो धनेश्वरः ॥ ६३ ॥**

63. ஸ்வாபன : ஸ்வவஶோ வ்யாபீ நைகாத்மா நைககர்மக்ருத்
வத்ஸரோ வத்ஸலோ வத்ஸீ ரத்னகர்போ தனேஶ்வர :

(465) [தன்] மாயையால் பிராணிகளை தங்கள் ஆத்ம ஞானத்தை யிழந்தவர்களாகச் செய்வதால் ஸ்வாபன : [தூங்கச் செய்வோன்].

(466) ஸ்வதந்திரன் ஸ்வவஶ : [பிறர்க்கு வசப்படாதவன்]; ஜகத்தினுடைய உற்பத்தி, ஸ்திதி, லயம் இவற்றிற்குக் காரண மாதலால்.

(467) ஆகாயத்தைப்போல எங்குமிருப்பதால் வ்யாபீ ; "ஆகாஶவத் ஸர்வகதஶ்ச நித்ய :" என்பது சுருதி ; (ii) அல்லது, காரணமாய் எல்லாக் காரியப் பொருளிலும் வியாபித்திருப்பதால் வ்யாபீ.

(468) ஜகத்தை உற்பத்தி செய்வது முதலியவற்றிலே வெளிப்படுத்திய நிமித்த சக்திகளாகிய விபூதிகளால் பல வடிவங்களாகி இருப்பதால் நைகாத்மா.

(469) ஜகத்தின் உற்பத்தி சம்பத்தி விபத்தி முதலான காரியங்களைச் செய்வதால் நைககர்மக்ருத்.

(470) அகிலமும் (ஒன்று விடாமல் எல்லாம்) இவனிடத்திலே வசிப்பதால் வத்ஸர :.

(471) பக்தர்களிடம் சினேகமுடையவனுதலால் வத்ஸல :; "வத்ஸாம்ஸாப்யாம் காமபலே (பாணினிஸூ 5, 2, 98) இதி லச்ப்ரத்ய :" (என்பது இலக்கணக் குறிப்பு).

(472) கன்றுகளைக் காப்பதால் வத்ஸீ; (ii) அல்லது, ஜகத்பிதாவாகிய அவனுக்கு (ப்ரஜைகள்) உயிர்கள் கன்றுகள் போன்றவை என்பதால் வத்ஸீ [கன்றுகளை யுடையவன்].

(473) இரத்தினங்கள் இதன் வயிற்றிலே யிருப்பன என்பதால் சமுத்திரம் ரத்னகர்ப: என்னப்படும்; [இரத்தினங்களை சமுத்திரம் தன் இடத்தில் கொண்டுள்ளதுபோல உயிர்களை தன் வயிற்றிலே கொண்டவன்].

(474) தனங்களுக்கு ஈசுவரன் என்பதால் தனேஶ்வர:; [செல்வங்களை வழங்கக் கூடியவன்].

धर्मगुब्धर्मकृद्धर्मी सदसत्क्षरमक्षरम् ।
अविज्ञाता सहस्रांशुर्विधाता कृतलक्षणः ॥ ६४ ॥

64. தர்மகுப் தர்மக்ருத் தர்மீ ஸதஸத் க்ஷரமக்ஷரம்
அவிஜ்ஞாதா ஸஹஸ்ராம்ஶுர் விதாதா க்ருதலக்ஷண:

(475) தர்மத்தைப் பாதுகாப்பதால் தர்மகுப்; "தர்ம ஸம்ஸ்தாபனார்(த்)தாய ஸம்பவாமி யுகே யுகே" (கீதை 4, 8) என்பது பகவத் வசனம்.

(476) தர்மம் அதர்மம் இவை இவனுக்கு இல்லாவிட்டாலும், தர்மத்தின் வரம்பை (மீறவிடாமல்) நிலையுறுத்துவதற்காக தர்மத்தையே செய்கிறான் என்பதால் தர்மக்ருத்.

(477) தர்மங்களை நிலைநிறுத்துவதால் தர்மீ.

(478) உண்மையான சிறந்த பிரும்மம் ஸத்; "ஸதேவ ஸோம்யேதம்" என்பது சுருதி (சாந்தோ. உப. 6, 2, 1).

(479) சிறப்பில்லாத பிரும்மம் அஸத்; "வாசாரம்பணம் விகாரோ நாமதேயம்" என்பது சுருதி (சாந்தோ. உப. 6, 1, 4).

(480) எல்லாப் பிராணிகளுமானவன் க்ஷரம்.

(481) கூடஸ்தன் அக்ஷரம்;

த்வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரஶ் சாக்ஷர ஏவ ச |
க்ஷர: ஸர்வாணி பூதானி கூடஸ்தோ'க்ஷர உச்யதே ||

என்பது பகவத் வசனம் (கீதை. 15, 16).

(482) ஆத்மாவினிடத்தில் (தன்னிடத்தில்), செய்வோன் என்பது முதலான விகற்ப விஞ்ஞானம் கற்பிதம் என்று 'தத்' என்னும் பிரும்மத்தின் வாசனையால் மூடப்பட்ட ஜீவன் விஜ்ஞாதா ; அதினுஞ் சிறந்த விஷ்ணு அவிஜ்ஞாதா.

(483) ஆதித்தியன் முதலானோரிடமுள்ள கிரணங்கள் இவனுடையவை என்பதால் இவனே முக்கியமான ஸஹஸ்ராம்ஶு:; "யேன ஸூர்யஸ்தபதி தேஜஸேத்த:" என்பது சுருதி (தைத். ப்ரஹ். 3, 12, 9) ; "யதாதித்யகதம் தேஜ:" என்பது ஸ்மிருதி (கீதை 15, 12).

(484) எல்லாப் பிராணிகளையும் தாங்குகின்ற (ஆதி) சேஷன், திக்கஜங்கள், மலைகள் இவற்றை விசேஷித்துத் தாங்கி நிற்பதால் விதாதா.

(485) எப்பொழுதும் இருப்பதான சைதன்னியமாவதால் க்ருதலக்ஷண:; (ii) அல்லது, லக்ஷணனி சாஸ்திரங்கள், இவனாலே செய்யப்பட்டன என்பதால்; "வேதா: ஶாஸ்த்ராணி விஜ்ஞான மேதத் ஸர்வம் ஜனார்தனாத்" என்று இங்கேயே (சு. 139) சொல்லப்போகிறார் ; (iii) அல்லது, ஒரே சாதியைச் சேர்ந்தது, வேறு சாதியைச் சேர்ந்தது என்று பிரிப்பதற்கான லக்ஷணங்கள் (அடையாளங்கள்) எல்லாப் பிறவிகளுக்கும் இவனால் இடப்பட்டன என்பதால் ; (iv) அல்லது, தன்னிடத்திலே ஸ்ரீ வத்ஸமென்னும் மறுவை மார்பிலே அமைத்துக் கொண்டவன் என்பதால் க்ருதலக்ஷண :.

**गभस्तिनेमिः सत्त्वस्थः सिंहो भूतमहेश्वरः ।**
**आदिदेवो महादेवो देवेशो देवभृद्गुरुः ॥ ६५ ॥**

65. கபஸ்திநேமி: ஸத்த்வஸ்த: ஸிம்ஹோ பூதமஹேஶ்வர :
ஆதிதேவோ மஹாதேவோ தேவேஶோ தேவப்ருத்குரு :

(486) கபஸ்தி சக்கிரத்தின் மத்தியிலே சூரியனாய் இருப்பவனாதலால் கபஸ்திநேமி:.

(487) ஒளி பொருந்திய சத்துவ குணத்தை முக்கியமாய் மேற்கொள்கிறான் என்பதால்; (ii) அல்லது, எல்லாப் பிராணிகளிடத்திலும் இருக்கிறான் என்பதால் ஸத்த்வஸ்த:.

(488) சிங்கம் போன்று விக்கிரமுடையவனாதலால் ஸிம்ஹ:; (ii) அல்லது, 'நரு' என்னும் சொல்லை விடுத்துக் கூறுவதால், 'ஸத்யபாமா பாமா' என்பதுபோல, நரஸிம்ஹன் ஸிம்ஹ: [நரசிங்கவுருக் கொண்டவன்].

(489) உயிர்களுக்குப் பெரிய ஈசன்; (ii) அல்லது, பூதேன சத்தியமாய், அவனே பரமனான பெரிய ஈசன் என்பதால் பூதமஹேஶ்வர:.

(490) எல்லாப் பிராணிகளும் இவனாலே பற்றிக்கொள்ளப் படுகின்றன [இவனை முதல்வனாகக் கொண்டன] என்பதால் ஆதி:, ஆதியான தேவன் ஆதிதேவ:.

(491) எல்லா நினைவுகளையும் விடுத்து, ஆத்மஞான யோகமாகிய பெருஞ் செல்வம்பற்றி கொண்டாடப்படுகிறான் ஆதலால் மஹாதேவ: என்னப்படுகிறான்.

(492) தலைமைபற்றி தேவர்களுக்கு ஈசன் தேவேஶ:.

(493) தேவர்களை ரக்ஷிக்கிறான் என்பதால் தேவப்ருத், இந்திரன்; அவனுக்கும் ஆக்ஞையிடுவோன் தேவப்ருத்குரு:; (ii) அல்லது, தேவர்களை ரக்ஷிப்பதாலும் ஸகல வித்யைகளையும் மறைப்பதாலும் தேவப்ருத்குரு:.

**उत्तरो गोपतिर्गोप्ता ज्ञानगम्यः पुरातनः ।**
**शरीरभूतभृद्भोक्ता कपीन्द्रो भूरिदक्षिणः ॥ ६६ ॥**

66. உத்தரோ கோபதிர் கோப்தா ஜ்ஞானகம்ய : புராதன :
ஶரீரபூதப்ருத் போக்தா கபீந்த்ரோ பூரிதக்ஷிண:

(494) ஜன்மம் ஸம்ஸாரம் ஆகிய கட்டினின்றும் விடுவிக்கிருன் என்பதால் உத்தர :; (ii) அல்லது, எல்லோரினும் சிறந்தவன் என்பதால்; "விஶ்வஸ்மாதிந்த்ர உத்தர:" என்பது சுருதி (ருக்வே. 10, 86, 1).

(495) பசுக்களைப் பரிபாலித்து, இடையன் வேஷத்தைத் தரித்தவன் கோபதி :; (ii) அல்லது, கௌ: பூமிப் பிராட்டி, அவளுடைய பதி யாவதால்.

(496) எல்லாப் பிராணிகளையும் பரிபாலிக்கும் லோகரக்ஷகன் என்பதால் கோப்தா.

(497) கர்மாவினுலோ ஞானம் கர்மா இவற்றுலோ அறியப்படமாட்டான்; ஆனுல் ஞானத்தால் [மட்டுமே] அறியப்படுகிருன் என்பதால் ஞானகம்ய:.

(498) காலத்தைக் கொண்டு அளவிட முடியாதவனும் முன்பும் இருந்தவன் என்பதால் புராதன :.

(499) சரீரத்தை எடுப்பதற்கான (ஐந்து) பூதங்களையும் தாங்குவோன் என்பதால் ஶரீரபூதப்ருத்.

(500) காப்பாற்றுவதால் போக்தா; (ii) அல்லது, பரமானந்த வெள்ளம் முழுவதையும் அனுபவிப்பதால் போக்தா.

இவ்வாறு பெயர்களில் ஐந்தாவது நூறு விரித்துரை செய்யப்பட்டது.

(501) கபி: வராகம், சிரேஷ்டமான வராக வுருவத்தை மேற்கொண்டவன் கபீந்த்ர :; (ii) அல்லது, கபீனும் வானரங்களுக்கு, இந்திரன் கபீந்த்ர :, இராகவன்.

(502) பூரய: மிகுதியான யாக தக்ஷிணைகளாய், தர்மத்தின் வரம்புகளைக் காட்டுகின்ற யாகத்தைச் செய்வோரிடம் இருப்பதால் பூரிதக்ஷிண:.

सोमपोऽमृतपः सोमः पुरुजित्पुरुसत्तमः ।
विनयो जयः सत्यसन्धो दाशार्हः सात्वतां पतिः ॥ ६७ ॥

67. ஸோமபோ'ம்ருதப : ஸோம : புருஜித் புருஸத்தம :
விநயோ ஜய : ஸத்யஸந்தோ தாஶார்ஹ : ஸாத்வதாம் பதி :

(503) எல்லா யாகங்களிலும் யாகத்திற்குரிய தேவதையின் ரூபமாகி ஸோமரஸத்தைப் பருகுகிறான் என்பதால் ஸோமப :; (ii) அல்லது, தருமத்தின் ஒழுங்கை விளக்குவோனாகி யாகஞ் செய்வோனுடைய வடிவாகி (ஸோமரஸத்தைப் பருகுகிறான்) என்பதால் ஸோமப :.

(504) தன் ஆத்மாவாகிய அமுதரஸத்தைப் பருகுவதால் அம்ருதப : ; (ii) அல்லது, அசுரர்களால் அபகரிக்கப்பட்ட அமுதத்தைப் பாதுகாத்து, தேவர்களைப் பருகும்படிசெய்து தானும் பருகுகிறான் என்பதால்.

(505) ஸோம (சந்திர) ரூபனாய் ஓஷதிகளை (மூலிகைகளை) போஷிப்பதால் ஸோம : ; (ii) அல்லது, உமையோடு கூடிய சிவன் என்பதால்.

(506) புரூன் பலரையும் செயிப்பதால் புருஜித்.

(507) விசுவத்தை ரூபமாகக்கொண்டவன் என்பதால் புரு :, சிறந்திருப்பதால் ஸத்தம :; புருவாகிய ஸத்தமன் புருஸத்தம :.

(508) துஷ்டர்களுக்கு வினயம் தண்டனையைச் செய்கிறான் என்பதால் வினய :.

(509) எல்லாப் பிராணிகளையும் செயிப்பதால் ஜய :.

(510) உண்மையாகும் ஸந்தா சங்கற்பம் (எண்ணம்) இவனுக்கு உண்டு என்பதால் ஸத்யஸந்த :; [இவனுடைய எண்ணப் படியே நடக்கும்.] "ஸத்யஸங்கல்ப :" என்பது சுருதி (சாந். உப. 8, 1, 5).

(511) தாஶ: தானம், அதைப் பெறுவதற்குத் தகுதியுள்ளவன் தாஶார்ஹ:; அல்லது, தாஶார்ஹ குலத்தில் உதித்தவன் என்பதால்.

(512) ஸாத்த்வதம் என்பது ஒரு தந்திர நூல்; "தத்கரோதி ததாசஷ்டே இதி ணிசிக்ருதே க்விப் ப்ரத்யயே ணிலோபே ச க்ருதே, பதம் ஸாத்த்வத்" (என்பது இலக்கணக் குறிப்பு.) [ஸாத்த்வத் ஸாத்த்வத தந்திரத்தை ஆசரிப்பவன்] அவர்களின் பதி: யோக க்ஷேமங்களைச் செய்வோன் என்பதால் ஸாத்த்வதாம் பதி:.

**जीवो विनयिता साक्षी मुकुन्दोऽमितविक्रमः।**
**अम्भोनिधिरनन्तात्मा महोदधिशयोऽन्तकः ॥ ६८ ॥**

68. ஜீவோ வினயிதா ஸாக்ஷீ முகுந்தோ' மிதவிக்ரம:
அம்போநிதிரனந்தாத்மா மஹோததிஶயோ'ந்தக:

(513) க்ஷேத்ரஜ்ஞ ரூபங்கொண்டு பிராணன்களைத் தரிப்பதால் ஜீவ: என்னப்படுகிறான்.

(514) வினயகுணம் வினயிதா; அதனை உயிர்களிடம் நேரிலே காண்பதால் வினயிதாஸாக்ஷீ.

(514 i) அல்லது, நயதி 'செலுத்துதல்' பொருளில் வருஞ் சொல், என்பதால் வினயிதா [வழிப்படுத்துவோன்.]

(514 ii) அஸாக்ஷீ: கண்கொண்டு காணாதவன்; (அதாவது), ஆத்மாவினும் வேறான வஸ்து [இல்லாமையால்] மற்று ஒன்றையும் காணாதவன் என்பது பொருள்.

(515) முக்தியளிப்பதால் முகுந்த:; "ப்ருஷோதராதித்வாத் ஸாதுத்வம்" (என்பது இலக்கணக் குறிப்பு); "அக்ஷர ஸாம்யாந் நிருக்தி வசனாத் நைருக்தானாம் முகுந்த இதி நிருக்தி:" (என்பதும் இலக்கணக் குறிப்பு).

(516) அமிதா அளவுபடாத விக்ரமா : மூன்று அடி வைப்பு களை யுடையவன் என்பதால் ; (ii) அல்லது, அளவில்லாத விக்ர மணம் சூரத்தனத்தை யுடையவன் என்பதால் அமிதவிக்ரம:.

(517) அம்பாம்ஸி தேவர் முதலானோர் இவனிடத்தில் நிதி போலச் சென்றடைகிறார்கள் என்பதால் அம்போநிதி:; "தானி வா ஏதானி சத்வார்யம்பாம்ஸி, தேவா: மனுஷ்யா பிதரோ ஸுரா:" என்பது சுருதி (தைத். ப்ராஹ் 2, 3, 8); (ii) அல்லது, ஸாகரம் [கடலாக இருப்பவன்]; "ஸரஸா மஸ்மி ஸாகர:" என்பது பகவத் வசனம் (கீதை 10, 24).

(518) இடத்தாலும், காலத்தாலும், பொருளாலும் அளவு படாதவனுதலால் அனந்தாத்மா.

(519) எல்லாப் பிராணிகளையும் ஒடுக்கி ஜகத்தை (ஏகார் ணவமாக) ஒரு பெரிய வெள்ளக்காடாகச் செய்து அந்த மஹோததி யிலே (பெரு வெள்ளத்திலே) சாய்ந்து கிடத்தலால் மஹோததிஸய:.

(520) பிராணிகளை முடிவு செய்கிறான் என்பதால் அந்தக:; "தத்கரோதி ததாசஷ்டே இதி ணிசி ண்வுலி அகாதேஸ:" (என்பது இலக்கணக் குறிப்பு) [சூராதிகணஸூத்ரம் ; பாணி. ஸூ. 3, 1, 133 ; ஷை, 7, 1, 1].

## अजो महार्हः स्वाभाव्यो जितामित्रः प्रमोदनः ।
## आनन्दो नन्दनो नन्दः सत्यधर्मा त्रिविक्रमः ॥ ६९ ॥

69. அஜோ மஹார்ஹ: ஸ்வாபாவ்யோ ஜிதாமித்ர: ப்ரமோதன:
ஆனந்தோ நந்தனோ' நந்த: ஸத்யதர்மா த்ரிவிக்ரம:

(521) ஆத் விஷ்ணுவிடமிருந்து, பிறந்தான் என்பதால் காமன் அஜ: ; [காமதேவனுடைய ரூபத்தைக் கொண்டவன்].

(522) மஹ: பூஜை, அதற்கு உரியவன் என்பதால் மஹார்ஹ:.

(523) எப்பொழுதும் நிலைத்திருக்கும் வடிவையுடையவனாதலால் சுபாவத்தாலே அபாவ்ய: (பிறக்கத்தகாதவன் என்பதால்) ஸ்வாபாவ்ய :.

(524) எவனால் அகத்துள் இருக்கும் (ராகம், த்வேஷம்) விருப்பு வெறுப்பு முதலிய பகைவர்களும், புறத்தேயுள்ள இராவணன் கும்பகர்ணன் சிசுபாலன் முதலான பகைவர்களும் ஜெயிக்கப்பட்டனரோ, அவன் ஜிதாமித்ர :.

(525) தன் ஆத்மாவாகிய அமுதரஸத்தை இனிது பருகி எப்பொழுதும் பேரின்பங் கொள்கிறான்; (ii) அல்லது, தியான மாத்திரத்திலே, தியானஞ் செய்வோருக்கும் பேரின்பத்தைத் தருகிறான் என்பதால் ப்ரமோதன :.

(526) ஆனந்தம் இவனது ஸ்வரூபமாதலால் ஆனந்த :; "ஏதஸ்யைவானந்தஸ்யான்யானி பூதானி மாத்ரா முபஜீவந்தி" என்பது சுருதி (ப்ருஹ. உப. 4, 3, 32).

(527) இன்பமளிக்கிறான் என்பதால் நந்தன :.

(528) (i) எல்லா (உபபத்தியாலும்) பிரகாரத்தாலும் (ஸம்ருத்தன்) நிரம்பியவன் என்பதால் நந்த :.

(528) (ii) அல்லது இந்திரியங்களாலான இன்பம் ஒன்றும் இவனுக்கு இல்லை என்பதால் அநந்த :; "யோ வை பூமா தத் ஸுகம் நால்பே ஸுகமஸ்தி" என்பது சுருதி (சாந். உப. 7, 23, 1).

(529) தர்மம் ஞானம் முதலியன இவனுக்கு (உண்மையால்) இருப்பதால் ஸத்யதர்மா.

(530) எவனுடைய மூன்று அடிவைப்புகள் மூன்று உலகங்களிலும் வைக்கப்பட்டனவோ, அவன் த்ரிவிக்ரம :; "த்ரீணி பதா விசக்ரமே" என்பது சுருதி (தைத். ப்ரா. 2, 4, 6); (ii) அல்லது, மூவுலகங்களும் எவனால் தாவப் பெற்றனவோ அவன் த்ரிவிக்ரம :;

*த்ரிரித்யேவ த்ரயோ லோகா : கீர்(த்)திதா முனிஸத்தமை :|*
*க்ரமஸே தாம்ஸ்த்ரிதா ஸர்வாம்ஸ் த்ரிவிக்ரமோ' ஸி ஜனார்தன ||*

*என்பது ஹரி வம்சம்.*

**महर्षिः कपिलाचार्यः कृतज्ञो मेदिनीपतिः ।**
**त्रिपदस्त्रिदशाध्यक्षो महाशृङ्गः कृतान्तकृत् ॥ ७० ॥**

70. மஹர்ஷி : கபிலாசார்ய : க்ருதஜ்ஞோ மேதினீபதி :
த்ரிபதஸ் த்ரிதஸாத்யக்ஷோ மஹாஸ்ருங்க : க்ருதாந்தக்ருத்

(531) மஹர்ஷி : கபிலாசார்ய : *என்பது அடைமொழி யோடு கூடிய ஒரே பெயர். பெரிய ருஷி என்பதால்* மஹர்ஷி :, *வேதம் முழுவதையும் கண்டறிந்தோன் ஆதலால் ; மற்றவர்கள் வேதத்தின் ஒவ்வொரு பகுதியை மட்டும் கண்டறிந்தவர்கள் ஆதலால் ருஷிகள். கபிலர் சுத்த தத்துவ விஞ்ஞானம் ஆகிய சாங்கியத்திற்கு ஆசாரியர் ஆதலால்* கபிலாசார்ய :; *"சுத்தாத்ம தத்த்வ விஜ்ஞானம் ஸாங்க்யமித்யபிதீயதே" என்பது வியாஸ ஸ்ம்ருதி ; "ருஷிம் ப்ரஸூதம் கபிலம் மஹாந்தம்" என்பது சுருதி* (ஸ்வே. உப. 5, 2); *"ஸித்தானாம் கபிலோ முனி :" என்பதும் ஸ்ம்ருதி* (கீதை. 10, 26).

(532) க்ருதம் *காரியப் பொருளான ஜகத்து,* ஜ்ஞ : *ஆத்மா; க்ருதமும் அதற்கு ஜ்ஞனுமாய் இருப்பவன்* க்ருதஜ்ஞ : [*ஜகத்தும் ஆத்மாவுமா யிருப்பவன்*].

(533) மேதின்யா : *பூமி(ப் பிராட்டி)யின்,* பதி [*கணவன்*] மேதினீபதி :.

(534) *இவனுக்கு மூன்று பதங்கள் [அடிவைப்புகள்] உண்டு என்பதால்* த்ரிபத :; *"த்ரீணி பதா விசக்ரமே"* (*தைத். ப்ரா.* 2, 4, 6) *என்பது சுருதி.*

(535) குணச் சேர்க்கையால் உண்டாவன ஜாக்ரத் முதலிய மூன்று தமா: அவஸ்தைகள் (நிலைமைகள்); அவற்றை மேற்பார்வை செய்வோன் அத்யக்ஷன் என்பதால் த்ரிதமாத்யக்ஷ :.

(536) மீன் வடிவுகொண்டு [தன்] பெரிய கொம்பிலே படகைக் கட்டி பிரளய வெள்ளத்தில் விளையாடினன் என்பதால் மஹாம்ருங்க :.

(537) க்ருதஸ்ய (ஜகத்தின்) அந்தம் ஸம்ஹாரத்தை, செய்கிறன் என்பதால் ; (ii) அல்லது, க்ருதாந்தம் இயமனே, கொல்கிறன் என்பதால் க்ருதாந்தக்ருத்.

**महावराहो गोविन्दः सुषेणः कनकाङ्गदी ।**
**गुह्यो गभीरो गहनो गुप्तश्चक्रगदाधरः ॥ ७१ ॥**

71. மஹாவராஹோ கோவிந்த : ஸுஷேண : கனகாங்கதீ
குஹ்யோ கபீரோ கஹனே குப்தஶ் சக்ரகதாதர :

(538) பெரிதான வராஹமானவன் மஹாவராஹ :.

(539) கோபி : மொழிகளால் அடையப்படுவதால் ; (ii) அல்லது [மொழிகளால்] வேதாந்த வாக்கியங்களால் [ஆத்மாவை] அறிகிறன் என்பதால் கோவிந்த :; "கோபிரேவ யதோ வேத்யோ கோவிந்த: ஸமுதாஹ்ருத :" என்பது ஸ்ரீ விஷ்ணு திலகம்.

(540) மங்களமான ஸேனு கணங்களை (கூட்டத்தை) யுடைபதால் ஸுஷேண :.

(541) பொன்மயமான தோள்வளைகளை யுடையவன் கனகாங்கதீ.

(542) இரகசியங்களான உபநிஷத்துக்களால் அறியப்படுவோன்; (ii) அல்லது, இருதயாகாசமாகிய குகையிலே நிலைத்திருப்பவன் என்பதால் குஹ்ய :.

(543) ஞானம் ஆளுந்திறன், (ஐசுவரியம்), பலம், வீரம் முதலியவற்றால் கம்பீரமாக விளங்குவோன் கபீர :.

(544) [இவனுக்குள்ளே] பிரவேசிப்பது அரிதாகையால் கஹன :; (ii) அல்லது, மூன்று (அவஸ்தைகளையும்) நிலைமைகளையும் இருப்பனவாகவும் இல்லாதனவாகவும் காண்போன் ஆதலால் கஹன :.

(545) வாக்குக்கும் மனத்திற்கும் (எட்டாதவன்) கோசரன் அல்லன் ஆதலால் குப்த :; "ஏஷ ஸர்வேஷு பூதேஷு கூடோ'த்மா ந ப்ரகாஶதே" என்பது சுருதி (கடோப. 1, 3, 12).

(546) மனஸ்தத்த்வாத்மகம் சக்ரம் புத்தி தத்த்வாத்மிகாம் கதாம் |
தாரயன் லோகரக்ஷார்(த்)த முக்த : சக்ரகதாதர: ||

[மனஸ் தத்துவமாகிய சக்கிரத்தையும் புத்தி தத்துவமாகிய கதாயுதத்தையும் உலகங்களை ரக்ஷிப்பதற்காகத் தரித்துக் கொண்டிருப்பதால் சக்ரகதாதர : என்னப்படுகிறான்].

**वेधाः स्वाङ्गोऽजितः कृष्णो दृढः संकर्षणोऽच्युतः ।**
**वरुणो वारुणो वृक्षः पुष्कराक्षो महामनाः ॥ ७२ ॥**

72. வேதா: ஸ்வாங்கோ'ஜித : க்ருஷ்ணோ த்ருட : ஸங்கர்ஷணோ'ச்யுத :
வருணோ வாருணோ வ்ருக்ஷ : புஷ்கராக்ஷோ மஹாமனா :

(547) சிருஷ்டி செய்வோன் வேதா :; "ப்ருஷோதராதித்வாத் ஸாதுத்வம்" (என்பது இலக்கணக் குறிப்பு.)

(548) காரியங்களைச் செய்வதிலே, தானே தனக்கு (அங்கமாக) உதவி செய்வோனாக இருப்பதால் ஸ்வாங்க :.

(549) அவதாரங்களில் எவனாலும் செயிக்கப்படாதவன் என்பதால் அஜித :.

(550) க்ருஷ்ண : கிருஷ்ண துவைபாயனர்;

க்ருஷ்ணத்வைபாயனம் வ்யாஸம் வித்தி நாராயணம் ப்ரபும் |
கோ ஹ்யன்ய : புண்டரீகாக்ஷாந் மஹாபாரதக்ருத் பவேத் ||
என்பது விஷ்ணு புராண வசனம் (3, 4, 5).

(551) ஸ்வரூபம் சாமர்த்தியம் (திறமை) முதலியவற்றில் கேடுறுதல் இல்லாததால் த்ருட :.

(552) ஸம்ஹார காலத்தில் ஒரே யடியாக உயிர்களை ஸங்கர்ஷயதி ஒடுக்குகிறான் என்பதால் ஸங்கர்ஷண :; ஸ்வரூபத்தினின்றும் ந ச்யோததி வழுவாதிருக்கிறான் என்பதால் அச்யுத :; ஸங்கர்ஷணேச்யுத : என்பது அடைமொழி கொண்ட ஒரே பெயர் ஆகும்.

(553) தன் கிரணங்களால் மூடப்படுவதால் சாயங்காலத்து சூரியன் வருண :; "இமம் மே வருண ஸ்ருதீ ஹவம்" என்பது மந்த்ரவர்ணம். (தைத். ஸம். 2, 10, 11).

(554) வருணனுடைய அபத்யம் புத்திரரான வஸிஷ்டர் அல்லது அகஸ்தியர் வாருண : [இந்த ரிஷிகளும் அவனே].

(555) மரம்போல அசையாது நிற்பதால் வ்ருக்ஷ :; "வ்ருக்ஷ இவ ஸ்தப்தோ திவி திஷ்டத்யேக :" என்பது சுருதி (ஶ்வே. உப. 3, 9).

(556) "வ்யாப்த்யர் (த்) தாதக்ஷதேர்தாதோ : புஷ்கரோப பதாதண் ப்ரத்யயம்" (என்பது இலக்கணக் குறிப்பு); அதின்படி, புஷ்கராக்ஷ : [முற்றும் வியாபித்திருப்பவன் என்பது பொருள்]; (ii) அல்லது, சிந்தனை செய்தால் ஹ்ருதயத் தாமரையிலே (தன்) ஸ்வரூபத்தோடு பிரகாசிக்கிறான் என்பதால் புஷ்கராக்ஷ :.

(557) சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் ஆகிய காரியங்களை மனதால் (நினைத்தமாத்திரத்திலே) செய்து முடிக்கிறான் என்பதால் மஹாமனா :; "மனஸைவ ஜகத் ஸ்ருஷ்டிம் ஸம்ஹாரம் ச கரோதி ய :" என்பது விஷ்ணு புராணம்.

**भगवान्भगहानन्दी वनमाली हलायुधः ।**
**आदित्यो ज्योतिरादित्यः सहिष्णुर्गतिसत्तमः ॥७३॥**

73. பகவான் பகஹாநந்தீ வனமாலீ ஹலாயுத꞉
ஆதித்யோ ஜ்யோதிராதித்ய꞉ ஸஹிஷ்ணுர் கதிஸத்தம꞉

(558) *ஐச்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய தர்மஸ்ய யசஸ: ச்ரிய: |*
*வைராக்யஸ்யாத மோக்ஷஸ்ய ஷண்ணாம் பக இதீரணா ||*

[*'பக:' என்பது பூர்ணமான ஐசுவரியத்திற்கும் (பிரபுத்துவத்திற்கும்) தருமத்திற்கும் புகழுக்கும் செல்வத்திற்கும் பற்றின்மைக்கும் (வைராக்கியத்திற்கும்) மோக்ஷத்திற்கும் பெயர்*] (*விஷ்ணு பு.* 6, 5, 74) *அது* (*பகம்*) *இவனுக்கு இருப்பதால்* பகவான் ; (ii) *அல்லது,*

*உத்பத்திம் ப்ரலயம் சைவ பூதானாமாகதிம் கதிம் |*
*வேத்தி வித்யா மவித்யாம் ச ஸ வாச்யோ பகவானிதி ||*

*என்பது விஷ்ணு புராணம்* (6, 5, 78); [*பிராணிகளின் உற்பத்தி, நாசம், அவை போவது வருவது என்பவை, வித்யை, அவித்யை இவற்றை அறிந்தவன்* பகவான்].

(559) *ஸம்ஹார காலத்தில்* பகம் *ஐசுவரியம் முதலியவற்றை அழிக்கிறான் என்பதால்* பகஹா.

(560) *இன்ப வடிவினன் ஆதலால்* ஆனந்தீ ; (ii) *அல்லது, எல்லா ஸம்பத்தும் நிரம்பியிருப்பதால்* ஆனந்தீ.

(561) *பூத தன்மாத்திரையின் ரூபமான வைஜயந்தீ என்னும் வனமாலையைத் தரிப்பதால்* வனமாலீ.

(562) *கலப்பையை ஆயுதமாகக் கொண்டவன்* ஹலாயுத꞉, *பலபத்திரனை வடிவங் கொண்டவன்.*

(563) *அதிதிக்குக் கசியபரிடத்தில் வாமனரூபனாய்ப் பிறந்தவன்* ஆதித்ய꞉.

(564) சூரிய மண்டலமாகிய சோதியிலே இருப்பவன் ஜ்யோதிராதித்ய:.

(565) சீதம் உஷ்ணம் முதலிய (த்வந்த்வங்களை) இரட்டைகளை சகித்துக்கொள்வதால் அல்லது வெல்வதால், ஸஹிஷ்ணு:.

(566) மிகச் சிறந்த கதியாதலால் கதிஸத்தம:.

**सुधन्वा खण्डपरशुर्दारुणो द्रविणप्रदः ।**
**दिवःस्पृक्सर्वदृग्व्यासो वाचस्पतिरयोनिजः ॥७४॥**

74. ஸுதன்வா கண்டபரஶுர் தாருணோ த்ரவிணப்ரத:
திவ: ஸ்ப்ருக் ஸர்வத்ருக் வ்யாஸோ வாசஸ்பதிரயோனிஜ:

(567) இந்திரியங்கள் முதலானவற்றின் ரூபமான சார்ங்க வில்லையுடையவன் என்பதால் ஸுதன்வா.

(568) (i) சத்துருக்களை வெட்டுவதால் கண்ட: கோடரி, அதை ஜமதக்னியின் மகனாக வடிவெடுத்தபோது [தரித்ததால்] கண்டபரஶு:.

(568) (ii) அல்லது, [அகண்டபரஶு:] அகண்டமான (துண்டிக்கமுடியாத) கோடரியை யுடையவனாதலால் [சிவஸ்வரூபி].

(569) நன்மார்க்கத்திற்கு விரோதஞ் செய்வோரிடம் கொடியவனா யிருப்பதால் தாருண:.

(570) பக்தர்களுக்கு த்ரவிணம் விரும்பியதை ப்ரததாதி அளிப்பதால் த்ரவிணப்ரத:.

(571) மேலுலகத்தைத் தொடுவதால் [அடைந்திருப்பதால்] திவ: ஸ்ப்ருக்.

(572) (i) ஸர்வத்ருஶாம் எல்லா ஞானிகளைப் பற்றியும் விரிவுரை செய்த வியாஸர் ஸர்வத்ருக்வ்யாஸ:.

(572) (ii) அல்லது, எல்லாமான ஞானம் என்பதால் ஸர்வத்ருக் ஸர்வாகாரமான ஞானம்; அல்லது, எல்லாவற்றையும் காண்கிறான் என்பதால் ஸர்வத்ருக் [என்றும்]; ருக்வேதம்

முதலிய பாகுபாடுகளால் வேதங்கள் நான்கு விதமாகப் பிரிக்கப் பட்டன; முதலாவது வேதம் 21 பிரிவுகளாகச் செய்யப்பட்டது. இரண்டாவது [வேதம்] 101 பிரிவுகளாகச் செய்யப்பட்டது; ஸாமவேதம் ஆயிரமாகச் செய்யப்பட்டது; அதர்வவேதம் சாகை வேறுபாடுபெற்றி ஒன்பதாகச் செய்யப்பட்டது. இவ் வாறே, வேறு புராணங்களும் இவனால் பாகுபாடு செய்யப்பெற் றன என்பதால், வ்யாஸ: ப்ரமன் [ப்ரமனாயிருப்பவன்], [என் னும் இரண்டு பெயர்கள்]

(573) வாசஸ்பதிரயோனிஜ:, வாச: வித்யைக்கு, பதி [தலைவன்] வாசஸ்பதி:; தாய் வயிற்றிலே பிறவாதவன் என்ப தால் அயோநிஜ:; இது அடைமொழியுடன் கூடிய ஒரே பெயர்.

त्रिसामा सामगः साम निर्वाणं भेषजं भिषक् ।
संन्यासकृच्छमः शान्तो निष्ठा शान्तिः परायणम् ॥ ७५ ॥

75. த்ரிஸாமா ஸாமக: ஸாம நிர்வாணம் பேஷஜம் பிஷக்
ஸம்ந்யாஸக்ருச்சம: மாந்தோ நிஷ்டா மாந்தி: பராயணம்

(574) ஸாமகானஞ் செய்வோர்களால் தேவவிரதம் என் னப்பட்ட மூன்று ஸாமங்களால் துதிக்கப்படுவோன் என்பதால் த்ரிஸாமா.

(575) ஸாமகானஞ் செய்வோன் என்பதால் ஸாமக:.

(576) "வேதானாம் ஸாமவேதோஸ்மி" என்பது பகவத் வசனம் (கீதை 10, 22) ஆதலால், ஸாமவேதம் ஸாம; [ஸாமவேத வடிவினன்].

(577) சகல துக்கங்களும் நீங்குவதாகிய பரமானந்த நிலை நிர்வாணம் [அந்த நிலையா யிருப்பவன்].

(578) ஸம்ஸாரமாகிய நோய்க்கு மருந்து பேஷஜம்.

(579) ஸம்ஸாரமாகிய நோயினின்றும் விடுதலை செய்யும் சிறந்த வித்யையை கீதையிலே உபதேசித்தான் என்பதால்

பிஷக்; "பிஷக்தமம் த்வா பிஷஜாம் ஶ்ருணோமி" என்பது சுருதி (ருக்வே. 2, 33, 4).

(580) மோக்ஷத்தின்பொருட்டு நான்காவதான [ஸம்ந்யாஸ] ஆசிரமத்தை ஏற்படுத்தினன் என்பதால் ஸம்ந்யாஸக்ருத்.

(581) சன்னியாசிகள் ஞானத்தைப் பெறுவதற்கு முக்கியமான ஸாதனமாவது சமம் என்று சொன்னவன் ஶம:; "யதீனும் ப்ரஶமோ தர்மோ நியமோ வனவாஸினும், தானமேவ க்ருஹஸ்தானும் ஶுஶ்ருஷா ப்ரஹ்மசாரிணும்" என்பது ஸ்ம்ருதி; "தத்கரோதி ததாசஷ்டே இதி ணிசி பசாத்யசிக்ருதே ரூபம் ஶம இதி" (என்பது இலக்கணக் குறிப்பு); (ii) அல்லது, எல்லாப் பிராணிகளையும் ஒடுக்குகிறான் என்பதால் ஶம:.

(582) இந்திரியங்களா லுண்டாகும் சுகத்தில் பற்றில்லாதவன் ஶாந்த:; "நிஷ்கலம் நிஷ்க்ரியம் ஶாந்தம்" என்பது சுருதி (ஶ்வேதா. உப. 6, 19).

(583) பிரளய காலத்தில் உயிர்கள் நீண்டகாலம் இவனிடத்திலேயே தங்குகின்றன என்பதால் நிஷ்டா.

(584) எல்லா அவித்யைகளும் நீங்குவதால் ஶாந்தி:.

(585) அந்த சாந்தியே பிரும்மம், மிகச் சிறந்த புகலிடம், மீண்டும் திரும்புதல் கூடும் (புனராவிருத்தி) என்னும் சந்தேகத்திற்கு இடமில்லாத ஸ்தானம் என்பதால், பராயணம்; "பும்லிங்கபக்ஷே பஹுவ்ரீஹி:" (என்பது இலக்கணக் குறிப்பு) [பராயண: என்பது பாடமானல் பஹுவ்ரீஹியாகும்].

**शुभाङ्गः शान्तिदः स्रष्टा कुमुदः कुवलेशयः ।**
**गोहितो गोपतिर्गोप्ता वृषभाक्षो वृषप्रियः ॥ ७६ ॥**

76. ஶுபாங்க: ஶாந்தித: ஸ்ரஷ்டா குமுத: குவலேஶய:
**கோஹிதோ கோபதிர் கோப்தா வ்ருஷபாக்ஷோ வ்ருஷப்ரிய:**

(586) அழகிய உடலைக் கொண்டவன் ஆதலால் ஶுபாங்க:.

(587) விருப்பு வெறுப்பு முதலியவற்றினின்றும் விடுதலை பெற்றவன் என்பதற்கு அடையாளமாகிய மனச் சாந்தியைத் தருவதால் ஶாந்தித:.

(588) சிருஷ்டித் தொடக்கத்திலே எல்லாப் பிராணிகளையும் சிருஷ்டித்தான் என்பதால் ஸ்ரஷ்டா.

(589) கௌ பூமியிடத்தில், இன்புறுவோன் என்பதால் குமுத ః

(590) கோ ః பூமியை வலனுத் சூழ்ந்திருப்பதால் குவலம் என்பது ஜலம்; அதிலே படுத்திருக்கிறுன் என்பதால் குவலேஶய: "ஶயவாஸவாஸிஷ்வகாலாத் இதி அலுக்ஸப்தம்யா:" (என்பது இலக்கணக் குறிப்பு): (ii) அல்லது, குவலேஶய: பதரீ பலத்தின் [இலந்தைப் பழத்தின்] நடுவிலேயுள்ள தக்ஷகன்; அவனும் இவனுடைய விபூதியாகிறுன் என்பதால், ஹரி குவலேஶய: (என்னப்படுகிறுன்) (iii) அல்லது, கௌ பூமியிலே வலதே கிடக்கிறது என்பதால் பாம்பின் வயிறு குவலம்; அதின்மேலே, அதாவது, சேஷனுடைய வயிற்றின்மீது தூங்குகிறுன் என்பதால் குவலேஶய:.

(591) பசுக்களின் நன்மைக்காக கோவர்த்தன மலையைத் தாங்கிப் பிடித்தவன் என்பதால் கோக்களுக்கு ஹிதமானவன் கோஹித:; (ii) அல்லது, கோ: பூமியின் பாரத்தைக் குறைக்க விரும்பியவனுய் சரீரமெடுத்தான் என்பதால் கோஹித:.

(592) கோ: பூமியின், பதி (கணவன்) கோபதி:.

(593) ஜகத்திற்கு ரக்ஷகன் கோப்தா; (ii) அல்லது, தன் மாயையால் தன்னை மூடிக் கொள்கிறுன் என்பதால் கோப்தா.

(594) வ்ருஷ: தர்மம்; அதுவே இவனுக்குக் கண் ஆவது என்பதால் வ்ருஷபாக்ஷ:.

(595) வ்ருஷ: தர்மமானது, எவனுக்குப் பிரியமோ அவன் வ்ருஷப்ரிய:; "வா ப்ரியஸ்ய இதிபூர்வ நிபாத விகல்ப விதானுத்

*பர நிபாத:"* (என்பது இலக்கணக் குறிப்பு) (ii) அல்லது, தர்மமாகிய பிரியமான வஸ்து; "வ்ருஷப்ஸாசௌ ப்ரியம் சேதி" (என்பது இலக்கணக் குறிப்பு).

**अनिवर्ती निवृत्तात्मा संक्षेप्ता क्षेमकृच्छिवः ।**
**श्रीवत्सवक्षाः श्रीवासः श्रीपतिः श्रीमतां वरः ॥ ७७ ॥**

77. அநிவர்(த்)தீ நிவ்ருத்தாத்மா ஸம்க்ஷேப்தா க்ஷேமக்ருச் சிவ:
ஸ்ரீவத்ஸவக்ஷா : ஸ்ரீவாஸ : ஸ்ரீபதி : ஸ்ரீமதாம் வர :

(596) தேவாசுர யுத்தங்களினின்று [செயிக்காமல்] திரும்புவதில்லை என்பதால் அநிவர்(த்)தீ ; (ii) அல்லது, விருஷப்பிரியன் ஆதலால் தர்மத்தினின்றும் திரும்புவதில்லை என்பதால்.

(597) இந்திரிய விஷயங்களினின்றும் இயல்பாகவே திரும்பிய ஆத்மாவை மனதை யுடையவன் என்பதால் நிவ்ருத்தாத்மா.

(598) விரிக்கப்பட்ட ஜகத்தை ஸம்ஹார காலத்தில் ஸூக்ஷ்ம வடிவாகச் சுருக்குவோன் ஸம்க்ஷேப்தா.

(599) கிடைத்த பொருளை நன்றாக ரக்ஷிக்கிறான் (ப்ரதுகாக்கிறான்) என்பதால் க்ஷேமக்ருத்.

(600) தன் பெயரை நினைத்த மாத்திரத்தில் தூய்மைப் படுத்துகிறான் என்பதால் ஶிவ :.

இவ்வாறு பெயர்களின் ஆறுவது நூறு விரித்துரை செய்யப்பட்டது.

(601) ஸ்ரீ வத்ஸம் என்று குறிப்பிடப்பட்ட அடையாளம் இவனுடைய திருமார்பிலே இருக்கிறது என்பதால் ஸ்ரீவத்ஸ வக்ஷா :.

(602) இவனுடைய திருமார்பிலே ஸ்ரீ : (லக்ஷ்மீதேவி) அகலாதவளாய் வசிப்பதால் ஸ்ரீவாஸ :.

(603) அமுதம் கடைந்தபோது தேவர்கள் அஸுரர்கள் முதலானவர்கள் அனைவரையும் விடுத்து, ஸ்ரீதேவி இவனையே பதியாக (வரித்தாள்) தேர்ந்தெடுத்தாள் என்பதால் ஸ்ரீபதி:.

(ii) அல்லது ஸ்ரீ : பராசக்தி, அவளுடைய பதி என்பதால்; "பராஸ்ய ஶக்திர் விவிதைவ ஶ்ரூயதே" என்பது சுருதி (ஶ்வே. உப. 6, 8).

(604) ருக், யஜுஸ், ஸாம என்னும் செல்வம் எவர்களுடையதோ, பிரமன் முதலான அந்த ஸ்ரீமான்கள் அனைவருள்ளும் தலைவனாயிருப்பதால் ஸ்ரீமதாம் வர:; "ருச: ஸாமானி யஜூம்ஷி ஸா ஹி ஸ்ரீரம்ருதா ஸதாம்" என்பது சுருதி.

## श्रीदः श्रीशः श्रीनिवासः श्रीनिधिः श्रीविभावनः ।
## श्रीधरः श्रीकरः श्रेयः श्रीमाँल्लोकत्रयाश्रयः ॥ ७८ ॥

78. ஸ்ரீத: ஸ்ரீஶ: ஸ்ரீநிவாஸ: ஸ்ரீநிதி: ஸ்ரீவிபாவன:
ஸ்ரீதர: ஸ்ரீகர: ஶ்ரேய: ஸ்ரீமாம்ல்லோகத்ரயாஶ்ரய:

(605) பக்தர்களுக்குச் செல்வத்தைத் தருவதால் ஸ்ரீத:.

(606) ஸ்ரீதேவிக்கு ஈசன் ஸ்ரீஶ:.

(607) ஸ்ரீமான்களிடையே எப்பொழுதும் வசிப்பதால் ஸ்ரீநிவாஸ:; 'ஸ்ரீ' என்னும் சொல்லால் ஸ்ரீமான்கள் குறிக்கப் படுகிறார்கள்.

(608) எல்லா சக்திகளுங்கொண்ட இவனிடத்தில் செல்வங்கள் குவிந்துள்ளன ஆதலால் ஸ்ரீநிதி:.

(609) முன் செய்த வினைகளுக்குத் தக்கவாறு வெவ்வேறான செல்வங்களை எல்லாவுயிர்களுக்கும் வகுத்துக் கொடுப்பதால் ஸ்ரீவிபாவன:.

(610) எல்லா வுயிர்களுக்கும் தாயாரான ஸ்ரீதேவியை மார்பிலே வகிப்பவன் ஸ்ரீதர:.

(611) நினைப்போர் துதிப்போர் அர்ச்சனை புரிவோர் ஆகிய பக்தர்களுக்குச் செல்வத்தைத் தருவதால் ஸ்ரீகர:.

(612) இடையறாத இன்பத்தைப் பெறுதல் ஸ்ரேய: என்னப்படும்; அதுவே பரனுடைய ரூபம் என்பதால் ஸ்ரேய:.

(613) செல்வங்கள் இவனுக்கு இருப்பதால் ஸ்ரீமான்.

(614) மூன்று லோகங்களுக்கும் புகலிடமாதலால் லோகத்ரயாஸ்ரய:.

**स्वक्षः स्वङ्गः शतानन्दो नन्दिर्ज्योतिर्गणेश्वरः ।**
**विजितात्मा विधेयात्मा सत्कीर्तिश्छिन्नसंशयः ॥ ७९ ॥**

79. ஸ்வக்ஷ: ஸ்வங்க: ஸதானந்தோ நந்திர் ஜ்யோதிர் கணேஸ்வர:
விஜிதாத்மா விதேயாத்மா ஸத்கீர்(த்)திஸ் சின்னஸம்ஸய:

(615) அழகாய்த் தாமரைபோல் விளங்குகிற கண்கள் இரண்டை யுடையவன் என்பதால் ஸ்வக்ஷ:.

(616) அழகிய அவயவங்களை (அங்கங்களை) யுடையவன் என்பதால் ஸ்வங்க:.

(617) பரமானந்தமாகிய ஒன்றே உபாதி பேதத்தால், நூறு வகையாகப் பேதப்படுவதால் ஸதானந்த:; "ஏதஸ்யைவானந்தஸ்யான்யானி பூதானி மாத்ராமுபஜீவந்தி" என்பது சுருதி (ப்ருஹ. உப. 4, 3, 32).

(618) பரமானந்த வடிவினன் நந்தி:.

(619) சோதிக்கணங்களுக்கு ஈசுவரன் ஜ்யோதிர்கணேஸ்வர:; "தமேவ பாந்தமனுபாதி ஸர்வம்" என்பது சுருதி (கடோப. 2, 2, 15); "யதாதித்ய கதம் தேஜ:" என்று தொடங்கும் ஸ்மிருதியையும் (கீதை. 15, 12) காண்க.

(620) எவனால் ஆத்மா மனமானது, செயிக்கப்பட்டதோ அவன் விஜிதாத்மா.

(621) ஒருவருக்குமே அடங்காத **ஆத்மா** ஸ்வரூபத்தை யுடையவன் என்பதால் **அவிதேயாத்மா.**

(622) ஸதீ மெய்யான, கீர்த்தியுடையவன் என்பதால் **ஸத் கீர்(த்)தி:.**

(623) உள்ளங்கை நெல்லிக்கனிபோல எல்லாவற்றையும் கண்கூடாகக் கண்டவனுக்கு யாதொரு சந்தேகமும் இல்லை என்ப தால் சின்னஸம்ஶய:.

उदीर्णः सर्वतश्चक्षुरनीशः शाश्वतस्थिरः ।
भूशयो भूषणो भूतिर्विशोकः शोकनाशनः ॥ ८० ॥

80. உதீர்ண: ஸர்வதஶ்சக்ஷு ரநீஶ: ஶாஶ்வதஸ்திர:
பூஶயோ பூஷணோ பூதிர் விஶோக: ஶோகநாஶன:

(624) எல்லா வுயிர்களினும் மேம்பட்டவனுதலால் **உதீர்ண:.**

(625) எங்கும் எல்லாவற்றையும் தன் சைதன்னியத்தால் காண்கிறுன் என்பதால் **ஸர்வதஶ்சக்ஷு:;** “விஶ்வதஶ் சக்ஷு:” என்பது சுருதி (ஶ்வேதா. உப. 3, 3).

(626) இவனுக்கு ஈசன் இல்லை என்பதால் **அனீஶ:;** “நதஸ் யேஶே கஶ்சன” என்பது சுருதி (நா. உப. 2).

(627) எக்காலத்திலும் இருப்பவனுயினும் ஒருபொழுதும் மாறுபாட்டை அடையாதவன் என்பதால், **ஶாஶ்வதஸ்திர:;** இது ஒரே பெயர்.

(628) லங்கைக்கு வழிகாண வேண்டி கடலைப் பார்த்து பூமியிலே கிடந்தவனுகையால் **பூஶய:.**

(629) தன்னிச்சையால் எடுத்த பல அவதாரங்களாலும் பூமியை அலங்கரித்ததால் **பூஷண:.**

(630) **பூதி:** இருப்பு, உண்மை (ஸத்தை); **(ii)** அல்லது, விபூதி (பெருமை); **(iii)** அல்லது, எல்லா விபூதிகளுக்கும் காரணமாவதால் **பூதி:.**

(631) இவன் பரமானந்த ரூபன் ஆதலால் சோகமற்றவன் என்பதால் விஶோக:.

(632) பக்தர்கள் நினைத்த மாத்திரத்தால் அவர்களின் சோகத்தைக் கெடுப்பவன் என்பதால் ஶோகநாஶன:.

**अर्चिष्मानर्चितः कुम्भो विशुद्धात्मा विशोधनः ।**
**अनिरुद्धोऽप्रतिरथः प्रद्युम्नोऽमितविक्रमः ॥ ८१ ॥**

81. அர்(ச்) சிஷ்மானர்(ச்)சித: கும்போ விஶுத்தாத்மா விஶோதன:
அநிருத்தோ' ப்ரதிரத: ப்ரத்யும்னோ' மிதவிக்ரம:

(633) எவனுடைய சோதியால் சந்திரன் சூரியன் முதலானோர் சோதியுடையவர்களோ அவனே சோதியுடையவர்களிலே தலைசிறந்தவன் என்பதால் அர்(ச்)சிஷ்மான்.

(634) எல்லா வுலகோர்களாலும் அர்ச்சிக்கப்பெற்ற பிரமன் முதலானவர்களாலும் அர்ச்சிக்கப்படுவோன் என்பதால் அர்(ச்)சித:.

(635) கும்பத்திலே போல, இவனிடத்தில் எல்லாம் (பிரதிஷ்டிக்கப்படுவதால்) நிலைத்திருப்பதால் கும்ப:.

(636) முக்குணங்களுக்கு அப்பால் இருப்பதால் மிகவும் பரிசுத்தமான ஆத்மா என்பதால் விஶுத்தாத்மா.

(637) நினைத்த மாத்திரத்தில் (நினைப்பவர்களின்) பாபங்களை அழிப்பதால் விஶோதன:.

(638) நான்கு வியூகங்களுள் நான்காவது வியூகமான அநிருத்த:; (ii) அல்லது, ஒருகாலும் சத்துருக்களால் தடுக்கப்படுவதில்லை என்பதால்.

(639) இவனுக்கு ப்ரதிரத: எதிர்க்கட்சி இல்லை என்பதால் அப்ரதிரத:.

(640) சிறந்த த்யும்னம் செல்வத்தை உடையவன் என்பதால் ப்ரத்யும்ன :; (ii) அல்லது, நான்கு வியூகத்துள் ஒருவன் [ப்ரத்யும்ன :].

(641) அமித: ஈடில்லாத, விக்கிரமத்தையுடையவன் என்பதால் அமிதவிக்ரம :; (ii) அல்லது, [மட்டுப்படுத்தப் பெறாத] கேடுறாத விக்கிரமத்தை யுடையவன் என்பதால்.

कालनेमिनिहा वीरः शौरिः शूरजनेश्वरः ।
त्रिलोकात्मा त्रिलोकेशः केशवः केशिहा हरिः ॥ ८२ ॥

82. காலநேமிநிஹா வீர: ஶௌரி: ஶூரஜனேஶ்வர:
த்ரிலோகாத்மா த்ரிலோகேஶ: கேஶவ: கேஶிஹா ஹரி:

(642) காலநேமி என்னும் அசுரனைக் கொன்றான் என்பதால் காலநேமிநிஹா.

(643) வீர : சூரன்.

(644) சூர குலத்திலே பிறந்தவனாதலால் ஶௌரி :.

(645) அளவு கடந்த தன் சூரத்தனத்தால் இந்திரன் முதலான சூரர்களுக்கும் தலைவனாவதால் ஶூரஜனேஶ்வர :.

(646) மூவுலகுக்கும் அந்தர்யாமியாயிருப்பதால் ஆத்மா என்பதால், (ii) அல்லது, மூவுலகங்களும் உண்மையிலே இவனைக் காட்டிலும் வேறுபடாதன என்பதால், த்ரிலோகாத்மா.

(647) மூன்று உலகத்தவர்களும் இவனால் ஆக்ஞையிடப் பெற்று தங்கள் தங்கள் வேலைகளைச் செய்கிறார்கள் என்பதால் த்ரிலோகேஶ :.

(648) கேசங்கள் என்று குறிக்கப்பட்டவை சூரியன் முதலானோர்களிடம் (இவனால்) கொடுக்கப்பட்ட கிரணங்கள் ; அவற்றை யுடையவனாதலால் கேஶவ :;

அம்ஶவோ யே ப்ரகாஶந்தே மம தே கேஶஸம்ஜ்ஞிதா: |
ஸர்வஜ்ஞா: கேஶவம் தஸ்மாந் மாமாஹுர் த்விஜஸத்தமா: ||

என்பது மஹாபாரதம் (சாந்திப. 350, 48-49); (ii) அல்லது, பிரமன் விஷ்ணு சிவன் என்னப்படும் சக்திகள் 'கேசம்' என்று குறிப்பிடப்படுவன ; அவற்றை யுடையவன் என்பதால் கேஶவ:; "த்ரய: கேஶின :" என்பது சுருதி (ருக்வே. 1, 164, 44) "மத்கேஶௌ வஸுதாதலே" (விஷ்ணு பு. 5, 1, 61). என்று 'கேஶ' என்னும் சொல் சக்தி என்னும் பொருளிலே பிரயோகிக்கப்பட்டது ; (iii) அல்லது,

கோ ப்ரஹ்மேதி ஸமாக்யாத ஈஶோ'ஹம் ஸர்வதேஹினும் |
ஆவாம் தவாம்ஶஸம்பூதௌ தஸ்மாத் கேஶவநாமவான் ||

என்பது ஹரி வம்சம். [இதனால், பிரமனும் சிவனும் எவனுடைய அமிசங்களோ அவன் கேஶவ :].

(649) கேசி என்னும் பெயருடைய அசுரனைக் கொன்றவன் என்பதால் கேஶிஹா.

(650) ஸம்ஸாரத்தை அதன் காரணத்தோடும் [அவித்யையோடும்] அழிக்கிறான் என்பதால் ஹரி:.

कामदेवः कामपालः कामी कान्तः कृतागमः ।
अनिर्देश्यवपुर्विष्णुर्वीरोऽनन्तो धनंजयः ॥८३॥

83. காமதேவ: காமபாலஃ காமீ காந்த: க்ருதாகமஃ
அநிர்தேஶ்யவபுர் விஷ்ணுர் வீரோ'னந்தோ தனஞ்ஜய:

(651) தருமம் முதலான நால்வகைப் புருஷார்த்தங்களையும் விரும்புவோரால் விரும்பப்படுகிறான் என்பதால் காம:; அந்த தேவன் காமதேவ :.

(652) காமங்களையுடையவர்களின் காமங்களை நிறைவேற்றுகிறான் என்பதால் காமபால :.

(653) இயல்பாகவே, நிறைவேறிய காமங்களையுடையவனாதலால் காமீ.

(654) மிக்க அழகுவாய்ந்த உடலைக் கொண்டவன் என்பதால் **காந்த:**.

(655) சுருதி ஸ்மிருதி முதலியவற்றைக் கொண்ட ஆகமம் எவனுற் செய்யப்பட்டதோ அவன் **க்ருதாகம:** "ஶ்ருதி ஸ்ம்ருதீ மமைவாஜ்ஞே" என்பது பகவத் வசனம். "வேதா: ஶாஸ்த்ராணி விஜ்ஞானமேதத் ஸர்வம் ஜனார்(த்)தனாத்" என்று இந்நூலிலேயே (சு 130) சொல்லப்போகிறுர்.

(656) இது அது அல்லது இவ்வாறுனது என்று குறிப்பிடுவதற்கு இயலாததாய், குணங்கள் (ஸத்த்வம் ரஜஸ் தமஸ்) முதலியவற்றிற்கு அப்பாற்பட்டதாய், அதுவே (அப்படியிருப்பதுவே) அவனுடைய ரூபம் என்பதால் **அநிர்(த்)தேஶ்யவபு:**.

(657) இவனுடைய காந்தி மண்ணையும் விண்ணையும் அளாவி அவற்றையுங் கடந்து நிற்பதால் **விஷ்ணு:**.

> வ்யாப்ய மே ரோதஸீ நாத காந்திரப்யதிகா ஸ்திதா |
> க்ரமணாத் வாப்யஹம் பார் (த்)த விஷ்ணுரித்யபிஸம்ஜ்ஜித: ||

என்பது மஹாபாரதம் (சாந்திப, 350, 42-3).

(658) கதியை (செல்லுகை முதலியவற்றை) யுடையவன் என்பதால் **வீர:**; "வீ கதிப்ரஜனகாந்த்யஸனகாதிஷு" என்பது தாதுபாடம் ஆதலின்; ["வீ என்னும் வினைச் சொல் செல்லுதல், படைத்தல், ஒளிர்தல், இருத்தல் உண்ணுதல் என்னும் பொருளுடையது" என்பது இதன் பொருள்].

(659) வியாபித்திருப்பதாலும் எக்காலத்திலும் அழியாதிருப்பதாலும் எல்லாவற்றிற்கும் ஆத்மாவாயிருப்பதாலும் இடம் காலம் பொருள் மூன்றிலும் அளவுபடாதவன் **அனந்த:**; "ஸத்யம் ஜ்ஞானம் அனந்தம் ப்ரஹ்ம" என்பது சுருதி (தைத். உப. 2, 1);

> **கந்தர்வாப்ஸரஸ: ஸித்தா: கின்னரோரகசாரணா: |**
> **நாந்தம் குணாநாம் கச்சந்தி தேனா'னந்தோ'யமவ்யய: ||**

என்னும் விஷ்ணுபுராண வசனத்தாலும் (2, 5, 24) [எவராலும் இவனுடைய குணங்களுக்கு எல்லை காண இயலாததால்] இவன் அனந்த :.

(660) திக்விஜயஞ் செய்தபோது, வெற்றியடைந்து மிகுதியாகத் தனத்தைப் பெற்றதால் அர்ஜுனன் தனஞ்ஜய:, "பாண்டவானாம் தனஞ்ஜய :" என்னும் பகவத் வசனத்தால் (கீதை 10, 37); [அர்ஜுனனை விபூதியாகக் கொண்டவன்].

**ब्रह्मण्यो ब्रह्मकृद्ब्रह्मा ब्रह्म ब्रह्मविवर्धनः ।**
**ब्रह्मविद्ब्राह्मणो ब्रह्मी ब्रह्मज्ञो ब्राह्मणप्रियः ॥ ८४ ॥**

84. ப்ரஹ்மண்யோ ப்ரஹ்மக்ருத் ப்ரஹ்மா ப்ரஹ்ம ப்ரஹ்ம விவர்தன :
ப்ரஹமவித்ப்ராஹ்மணோப்ரஹ்மீ ப்ரஹ்மஜ்ஞோ ப்ராஹ்மணப்ரிய:

(661) "தபோ வேதாஸ்ச விப்ராஸ்ச ஜ்ஞானம் ச ப்ரஹ்ம ஸம்ஜ்ஞிதம்"; இவற்றிற்கு, [அதாவது, தவம் வேதங்கள் விப்பிரர்கள் ஞானம் இவற்றிற்கு] ஹிதமாயிருப்பவன் என்பதால் ப்ரஹ்மண்ய :.

(662) தவம் முதலியவற்றை [தவம், வேதங்கள், பிராம்மணர், ஞானம் இவற்றை] இயற்றியதால் ப்ரஹ்மக்ருத்.

(663) பிரமனாகி எல்லாவற்றையும் சிருஷ்டிப்பதால் ப்ரஹ்மா.

(664) பெரிதாவதாலும், பெருகுவதாலும், ஸத்யம் (இருப்பது) முதலியவற்றை தன்மையாகவுடையவனாதலாலும் ப்ரஹ்ம; "ஸத்யம் ஜ்ஞான மனந்தம் ப்ரஹ்ம" என்பது சுருதி. (தைத். உப, 2, 1).

ப்ரத்யஸ்தமிதபேதம் யத் ஸத்தாமாத்ரமகோசரம் |
வசஸாமாத்மஸம்வேத்யம் தஜ்ஜ்ஞானம் ப்ரஹ்மஸம்ஜ்ஜிதம் ||

என்பது விஷ்ணு புராணம் (6, 7, 53).

["பேதம் நீங்கியதாய், ஸத்தை (இருப்பது) மாத்திரமாய், வாக்குக்கு எட்டாததாய், தன்னாலே (ஆத்மாவாலே) அறியக் கூடியதான ஞானப்பொருளே ப்ரஹ்ம" என்பது இந்த சுலோகத்தின் பொருள்].

(665) தவம் முதலியவற்றை [தவம், வேதங்கள், பிராம்மணர், ஞானம் இவற்றை] விருத்தி செய்வதால் **ப்ரஹ்மவிவர்தன :.**

(666) வேதத்தையும் வேதப்பொருளையும் உண்மையில் அறிவதால் **ப்ரஹ்மவித்.**

(667) பிராம்மண வடிவுகொண்டு எல்லா உலகோர்க்கும் (வேதப்பிரவசனம் செய்து) வேதத்தைச் சார்ந்தவன் என்பதால் **ப்ராஹ்மண :.**

(668) 'ப்ரஹ்ம' என்ற சொல்லால் குறிக்கப்பட்டவை [தவம், வேதங்கள், பிராம்மணர், ஞானம் இவை] இவனுக்கு உட்பட்டவை (சேஷபூதர்கள்) என்பதால் **ப்ராஹ்மீ.**

(669) தன் ஆத்மா வாகிய வேதங்களை அறிகிறான் என்பதால் **ப்ரஹ்மஜ்ஞ :.**

(670) பிராம்மணர்களுக்கு (பிரும்ம ஞான முள்ளவர்களுக்கு) பிரியமானவன் **ப்ராஹ்மணப்ரிய :;** (ii) அல்லது, இவனுக்குப் பிராம்மணர்கள் பிரியமானவர்கள் என்பதால்;

> க்னந்தம் ஶபந்தம் பருஷம் வதந்தம்
> யோ ப்ராஹ்மணம் ந ப்ரணமேத் யதார்ஹம் |
> ஸ பாபக்ருத் ப்ரஹ்மதவாக்னிதக்தோ
> வத்யஶ்ச தண்ட்யஶ்ச ந சாஸ்மதிய : ||

என்பது பகவத் வசனம்;

> யம் தேவம் தேவகீ தேவீ வஸுதேவாதஜீஜனத் |
> பௌமஸ்ய ப்ரஹ்மணோ குப்த்யை தீப்தமக்னிமிவாரணி : ||

என்பது மஹாபாரதம் (சாந்திப. 46, 31).

**महाक्रमो महाकर्मा महातेजा महोरगः ।**
**महाक्रतुर्महायज्वा महायज्ञो महाहविः ॥ ८५ ॥**

85. மஹாக்ரமோ மஹாகர்மா மஹாதேஜா மஹோரக:
மஹாக்ரதுர் மஹாயஜ்வா மஹாயஜ்ஞோ மஹாஹவி:

(671) *பெரிய* க்ரமா: *அடிவைப்புகள் (மூன்று),* இவனுக்கு உண்டு *என்பதால்* மஹாக்ரம:; *"ஶம் நோ விஷ்ணுருருக்ரம:" என்பது சுருதி (சுக்லயஜுர். 36, 9).*

(672) ஜகத்தை *உற்பத்தி செய்வது முதலான* மஹத் *(பெரிய)* கர்மா *(காரியம்)* இவனுக்கு *உண்டு என்பதால்* மஹாகர்மா.

(673) *எவனுடைய சோதியால் சூரியன் முதலானவர்கள்* தேஜஸ்விகள் *(சோதிமான்கள்) ஆனார்களோ, அவனுடைய* தேஜஸ் மஹத் *பெரியது என்பதால்* மஹாதேஜா:; *"யேன ஸூர்யஸ்தபதி தேஜஸேத்த:" என்பது சுருதி (தைத். ப்ராஹ். 3, 12, 9, 7); "யதாதித்யகதம் தேஜ:" (கீதை 15, 12) என்பது பகவத் வசனம்; ["சூரியன் சந்திரன் அக்கினி இவர்களுடைய தேஜஸ் என்னுடையது" என்பது இந்த சுலோகத்தின் பொருள்]; (ii) அல்லது, (குரூரத்தன்மை) கொடுமை, சூரத்தனம் முதலிய பெருங்குணங்களால் அழகு பெற்றவன் என்பதால்* மஹாதேஜா:.

(674) *பெரியதான* உரக: *(பாம்பு) என்பதால்* மஹோரக:; *"ஸர்(ப்)பாணு மஸ்மி வாஸுகி:" (கீதை 10, 28). என்பது பகவத் வசனம் [வாஸுகியாவோனும் இவனே].*

(675) *பெரிய க்ரது: யாகம் ஆவதால்* மஹாக்ரது:; *"யதாஶ்வமேத: க்ரதுராட்" என்பது மனு வசனம் (மனுஸ். 11, 260); அதுவும் [அந்த மஹாக்ரதுவும்] அவனே (ஸோபி ஸ ஏவ) என்பது ஸ்துதி வார்த்தை.*

(676) உலகங்களைப் பாதுகாப்பதற்காக (லோக ஸங்கிரகத்திற்காக) யாகங்களைச் செய்து முடிக்கும் பெரிய யஜ்வா (யாக கர்த்தா) மஹாயஜ்வா.

(677) பெரிய யாகம் மஹாயஜ்ஞ: ; "யஜ்ஞானும் ஜபயஜ்ஞோஸ்மி". (கீதை 10, 25) என்பது பகவத்வசனம்.

(678) பெரிய ஹவிப்பொருள் என்பதால்: பிரும்மத்தினிடத்தில் ஜகத்து முழுவதும் ஆத்மா என்னும் தன்மையாலே ஹவிப்பொருளாகத் தரப்படுகிறது, என்பதால் மஹாஹவி:.

'மஹாக்ரது:' முதலியவற்றை பஹுவ்ரீஹிகளாகவும் கொள்ளலாம் [என்பது இலக்கணக் குறிப்பு].

स्तव्यः स्तवप्रियः स्तोत्रं स्तुतिः स्तोता रणप्रियः ।
पूर्णः पूरयिता पुण्यः पुण्यकीर्तिरनामयः ॥ ८६ ॥

86. ஸ்தவ்ய: ஸ்தவப்ரிய: ஸ்தோத்திரம் ஸ்துதி: ஸ்தோதா ரணப்பிரிய:

பூர்ண: பூரயிதா புண்ய: புண்யகீர்த்திரநாமய:

(679) எல்லோராலும் துதிக்கப்படுகிறான், யாரையும் துதிப்பதில்லை என்பதால் ஸ்தவ்ய:.

(680) அதனாலேயே, ஸ்தவப்ரிய:.

(681) எதைக் கொண்டு துதிக்கப்படுகிறானோ, அது ஸ்தோத்திரம், குணங்களைப் புகழ்வதான (ஸங்கீர்த்தனஞ் செய்வதான) தோத்திரமும் ஹரியே என்பதால் [ஸ்தோத்திரம்].

(682) ஸ்துதி: என்பது துதிப்பதாகிய காரியம்.

(683) ஸ்தோதா ஸ்துதிப்பவனும் அவனே.

(684) எவனுக்கு போர் பிரியமோ, உலகங்களை ரக்ஷிப்பதற்காக ஐந்து பெரிய ஆயுதங்களை எப்பொழுதும் வைத்துக் கொண்டிருக்கிறான் என்பது பற்றி, அவன் ரணப்ரிய:.

(685) எல்லா விருப்பங்களும் நிறைவேறியவனுகி எல்லாச் சக்திகளையும் கொண்டவன் என்பதால் பூர்ண :.

(686) பூர்ணன் (நிரம்பியவன்) என்பது மட்டும் அன்று; எல்லோரையும் ஸம்பத்துக்களால் நிரப்புவதால், பூரயிதாவும் (நிரப்புவோனும்) ஆகிருன்.

(687) நினைத்த மாத்திரத்தில் (கல்மஷங்களை) மாசுகளை மாற்றுகிருன் என்பதால் புண்ய :.

(688) புண்ணியமான கீர்த்தியை (புகழை) யுடையவன்; ஏனென்ருல், இவனைப் புகழ்வது மானுடருக்குப் புண்ணியத்தைத் தரும்; அதனுல் புண்யகீர்(த்)தி :.

(689) வினைப் பயனுகி உள்ளும் புறமுமாகிப் பீடிக்கும் நோய்களால் பீடிக்கப்படாதவன் என்பதால் அனுமய :.

**मनोजवस्तीर्थकरो वसुरेता वसुप्रदः ।**
**वसुप्रदो वासुदेवो वसुर्वसुमना हविः ॥८७॥**

87. மனேஜவஸ் தீர்(த்)தகரோ வஸுரேதா வஸுப்ரத :
வஸுப்ரதோ வாஸுதேவோ வஸுர் வஸுமனு ஹவி :

(690) மனத்தின் வேகம்போன்ற வேகமான கதியையுடையவன், எங்கும் புகுவோன், ஆதலால் மனேஜவ :.

(691) பதினான்கு வித்யைகளையும் புறம்பான வித்யைகளையும் சமயங்களையும் (மதங்களையும்) உண்டாக்கி அவற்றை விளக்கமுற (உபதேசித்தவன்) சொன்னவன் என்பதால் தீர்(த்)தகர :; ஹயக்ரீவராகிய வடிவைக் கொண்டு மதுகைடபர்களைக் கொன்றபின், விரிஞ்சனுக்கு (பிரமனுக்கு) சிருஷ்டித் தொடக்கத்திலே எல்லாச் சுருதிகளையும் வேறு வித்யைகளையும் உபதேசித்து, வேதங்களுக்குப் புறம்பான வித்யைகளை சுரர்களுக்கு

வைரிகளான அசுரப் பிறவிகளை வஞ்சிப்பதற்காக (அவர்களுக்கு) உபதேசித்தான் என்று பௌராணிகர்கள் சொல்கிறார்கள்.

(692) இவனுடைய ரேதஸ் (வீரியம்) பொன் என்பதால் வஸுரேதா :.

தேவ : பூர்வமப : ஸ்ருஷ்ட்வா தாஸு வீர்யமபாஸ்ருஜத் |
தத்ண்டமபவத்தைமம் ப்ரஹ்மண : காரணம் பரம் ||

என்பது வியாஸ வசனம்.

(693) வஸு தனத்தை, மிகுதியாகக் கொடுப்பதால், இவன் (ஸாக்ஷாத்) உண்மையான தனத்யக்ஷன், மற்றவனோ (குபேரனோ) இவனுடைய அனுக்கிரகத்தால் தனத்யக்ஷன்; அதனால் (இவனே) வஸுப்ரத :.

(694) வஸு சிறந்த மோக்ஷம் என்னப்படும் பலனை பக்தர்களுக்கு வழங்குகிறான் என்பதால் இரண்டாவது வஸுப்ரத :; "விஜ்ஞான மானந்தம் ப்ரஹ்ம ராதிர் தாது : பராயணம் திஷ்டமானஸ்ய தத்வித :" என்பது சுருதி (ப்ரஹ். உப. 3,9,28); (ii) அல்லது, தேவர்களின் பகைவர்களுக்குள்ள செல்வங்களை நன்றாக அழித்துவிடுகிறான் என்பதால் வஸுப்ரத :.

(695) வஸுதேவனுடைய (அபத்யம்) புத்திரன் வாஸுதேவ :

(696) இவனிடத்தில் உயிர்கள் வசிக்கின்றன, இவனும் அவைகளிடத்தில் வசிக்கிறான் என்பதால் வஸு :.

(697) பொதுவாக எல்லாப் பொருளிலும் உள்ளேயிருக்கிறான் என்பதால் வஸு; அவ்விதமான (அப்படி உள்ளேயிருக்கிற) மனம் இவனுக்கு இருப்பதால் வஸுமனா :.

(698) "ப்ரஹ்மார்(ப்)பணம் ப்ரஹ்மஹவி :" என்பது பகவத் வசனம் (கீதை 4, 24) ஆதலால், ஹவி : [அவிப்பொருளானவோன்].

**सद्गतिः सत्कृतिः सत्ता सद्भूतिः सत्परायणः ।**
**शूरसेनो यदुश्रेष्ठः सन्निवासः सुयामुनः ॥ ८८ ॥**

88. ஸத்கதி : ஸத்க்ருதி : ஸத்தா ஸத்பூதி : ஸத்பராயண :
ஶூரஸேநோ யதுஶ்ரேஷ்ட : ஸந்நிவாஸ : ஸுயாமுந :

(699) "*அஸ்தி ப்ரஹ்மேதி சேத்வேத ஸந்தமேனம் ததோ விது :*" *என்னும் சுருதியின்படி (தைத். உப. 2, 6) பிரும்மம் உள்ளது என்று எவர்கள் அறிகிறார்களோ அவர்கள் நல்லோர்கள்; அவர்களால் அடையப்படுவதால்* ஸத்கதி : ; (ii) *அல்லது, மிகச் சிறந்த நல்ல* கதி : *புத்தி, இவனுக்கு இருப்பதால்* ஸத்கதி :.

(700) *ஜகத்தை ரக்ஷிப்பதான நல்ல செய்கை இவனுக்கு உண்டு என்பதால்* ஸத்க்ருதி :.

*இவ்வாறு பெயர்களில் ஏழாவது நூறு விரித்துரை செய்யப்பட்டது.*

(701) *ஸஜாதீய வேற்றுமை, விஜாதீய வேற்றுமை, தன்னுள்ளேயே இருக்கும் வேற்றுமை இவையின்றியுள்ள அனுபூதி ஞானம்* ஸத்தா ; "*ஏகமேவாத்விதீயம்*" *என்பது சுருதி (சாந். உப. 6, 2, 1); [அனுபூதி ஞானமாயிருப்போன்].*

(702) *உண்மைப் பொருளாக இருந்துகொண்டே சித்வடிவினனாய் பரமாத்மா யாதொரு கேடுமின்றி ஒளிர்வதால்* ஸத்பூதிঃ. *(நல்ஞானமா யிருப்பவன்); மற்றது அப்படி யன்று; பிரதீதி ஞானம் பாதிக்கப்படுவதால், அது 'ஸத்' அன்று, 'அஸத்' தும் அன்று; சுருதியும் யுக்தியும் பிரபஞ்சப் பொருள் பாதிக்கப் பட்டது என்று விவரித்துக் காட்டுவன.*

(703) ஸதாம் *தத்துவத்தை அறிந்தவர்களுக்கு* பரம் *[சிறந்த]* அயனம் *(கதி)* இவன் *என்பதால்* ஸத்பராயணம்.

(704) *ஹனுமான் முதலான சூரத்தன்மை பொருந்திய (ஸைனிகர்கள்) படைவீரர்கள் எவனுடைய சேனையில் இருக்கிறார்களோ அவன்* ஶூரஸேந:.

(705) யது குலத்து மன்னருள் தலைசிறந்தவன் என்பதால் யதுஶ்ரேஷ்ட:.

(706) ஸதாம் அறிவாளிகளுக்கு புகலிடமாவோன் ஸந்நிவாஸ:.

(708) அழகுவாய்ந்தவர்களான தேவகீ வஸுதேவன் நந்தன் யசோதை பலபத்ரன் ஸுபத்ரை முதலான யாமுனர்களை (யமுனை நதியோடு சம்பந்தப்பட்டவர்களை) தன் சூழலாக யுடையவன் என்பதால் ஸுயாமுன:; ii அல்லது, இடையர் வேஷங்கொண்ட (பிரமன்) பதுமாஸனன் முதலியவர்களை யாமுனர்களாய் (யமுனாதீரவாசிகளாய்) தனக்கு அழகான தோழர்களாகக் கொண்டதால் ஸுயாமுன:.

भूतावासो वासुदेवः सर्वासुनिलयोऽनलः ।
दर्पहा दर्पदो दृप्तो दुर्धरोऽथापराजितः ॥ ८९ ॥

89. பூதாவாஸோ வாஸுதேவ: ஸர்வாஸுநிலயோ'னல:
தர்(ப்)பஹா தர்(ப்)பதோ த்ருப்தோ துர்தரோ'தா பராஜித:

(708) உயிர்கள் தன்னிடத்து இனிது அமர்ந்திருப்பன என்பதால் பூதாவாஸ:; "வஸந்தி த்வயி பூதானி பூதாவாஸஸ் ததோ பவான்" என்பது ஹரிவம்சம்.

(709) ஜகத்தை மாயையால் மூடுகிறான் என்பதால் வாஸு:; அந்த தேவனே வாஸுதேவ:; "சாதயாமி ஜகத் விஶ்வம் பூத்யா ஸூர்ய இவாம்ஶுபி:" என்பது பகவத் வசனம் (மஹாபா. சாந்தி. 350, 41).

(710) எல்லாப் பிராணன்களும் அஸவ:, இவை ஜீவனை (ஆசிரயத்திலே) உறைவிடத்திலே தங்குகின்றன என்பதால் ஸர்வாஸுநிலய: [பிராணன்களுக்கு உறைவிடமான ஜீவனாகிய ரூபத்தையுடையவன்].

(711) இவனுடைய சக்தி, ஸம்பத்து இவைகளுக்கு அலம் அளவு (எல்லை) இல்லை யென்பதால் அனல:.

(712) தர்மத்திற்கு விரோதமான வழியிலே செல்வோரின் கொழுப்பை அடக்கி (அவர்களை) யழிப்பதால் தர்ப்பஹா.

(713) தர்ம வழியிலே நிற்பவர்களுக்கு பெருமை யளிப்பதால் தர்ப்பத:.

(714) தன் ஆத்மாவாகிய அமுத ரஸத்தை இனிது பருகுவதால் எப்பொழுதும் பேரின்ப முற்றவன் என்பதால் த்ருப்த:.

(715) எவனை, எல்லா உபாதிகளினின்றும் விடுபட்டவனுதலால், பிரணிதானம் (ஆழ்ந்த ஆத்மத் தியானம்) முதலியவற்றாலே தாரணை (மனதிலே நிலைநிறுத்துதல்) செய்வது அரிதோ, அப்படி யிருந்தாலும் எவனுடைய அனுக்கிரகத்தால் ஒரு சிலரால் ஆயிரக் கணக்கான பிறவிகளுள் ஒன்றிலே பாவனு யோகத்தால் சிரமப்பட்டு ஹ்ருதயத்திலே எவன் தரிக்கப் படுகிறானே, அவன் துர்தர:;

‘க்லேஶோ’திகதரஸ் தேஷா ம்வ்யக்தாஸக்தசேதஸாம் |
அவ்யக்தா ஹி கதிர் து:கம் தேஹவத்பிரவாப்யதே ||

என்பது பகவத் வசனம் (கீதை 12, 5).

(716) விருப்பு (இராகம்) முதலான உட்பகைகளாலும் தானவர் (அரக்கர்) முதலான புறப் பகைவர்களாலும் ஜெயிக்கப் படாதவன் என்பதால் அபராஜித:.

विश्वमूर्तिर्महामूर्तिर्दीप्तमूर्तिरमूर्तिमान् ।
अनेकमूर्तिरव्यक्तः शतमूर्तिः शताननः ॥ ९० ॥

90. விஶ்வமூர்(த்)திர் மஹாமூர்(த்)திர் தீப்தமூர்(த்)திரமூர்(த்)திமான்

அநேகமூர்(த்)திரவ்யக்த : ஶதமூர்(த்)தி : ஶதானன :

(717) எல்லாம் தானுனதாலே ஜகத்து இவனுடைய (மூர்த்தி) வடிவம் என்பதால் விஶ்வமூர்(த்)தி:.

(718) சேஷன் என்ற படுக்கையில் (பர்யங்கத்தில்) படுத்திருக்கும் இவன் பெரிய வடிவமுடையவன் என்பதால் *மஹாமூர்(த்)தி:.

(719) ஒளி விடுகின்ற ஞான மயமான வடிவம் எவனுக்கோ அவன், (ii) அல்லது, தன்னிச்சையால் (எடுத்துக்) கொள்ளப்பட்டு தேஜஸ் வாய்ந்து ஒளி வீசுகின்ற வடிவத்தையுடையவன் என்பதால் தீப்தமூர்(த்)தி:.

(720) (கர்ம நிபந்தனையால்) வினைத்தளையால் எடுக்கும் வடிவம் இவனுக்கு இல்லை என்பதால் அமூர்(த்)திமான்.

(721) அவதாரங்களிலே தன்னிச்சை கொண்டு உலகோர்களுக்கு உபகாரஞ் செய்வனவாகிய பல வடிவங்களைப் பெறுவதால் அநேகமூர்(த்)தி:.

(722) அநேகமூர்(த்)தித்வம் (பல வடிவு கொள்ளுந் தன்மை) இவனுக்கு இருந்தும், இவன் இப்படிப்பட்டவனே என்று விளக்க இயலாது என்பதால் அவ்யக்த:.

(723) பலவகை விகற்பங்களால் உண்டாகும் பலவேறு வடிவங்கள் (ஒன்றேயான) ஸம்வித் ஞானப்பொருளுக்கு உண்டு என்பதால் ஶதமூர்(த்)தி:.

(724) 'விம்வம்' முதலான வடிவங்கள் இருக்கின்றன என்பதாலேயே ஶதானன:.

एको नैकः सवः कः किं यत्तत्पदमनुत्तमम् ।
लोकबन्धुर्लोकनाथो माधवो भक्तवत्सलः ॥ ९१ ॥

91. ஏகோ நைக: ஸவ: க: கிம் யத் தத் பதமனுத்தமம்
லோகபந்துர் லோகநாதோ மாதவோ பக்தவத்ஸல:

---

* யோக நித்திரையில் ஆழ்ந்து ஆத்மாவைக் கண்டுகொண்டிருப்பதால், சேஷசயன வடிவு பெருமை பெற்றது என்பது கருத்து.

(725) பரமார்த்தமான உண்மையாக, ஸஜாதியம் விஜாதீயம் ஸ்வகதம் என்னும் மூவகைப் பேதமும் நீங்கிய தன்மையால் ஏக:; "ஏகமேவாத்விதீயம்" என்பது சுருதி (சாந். உப. 6, 2 1).

(726) மாயையால் பல ரூபங்களையுடையவனுதலால் நைக:; "இந்த்ரோ மாயாபி: புருரூப ஈயதே" என்பது சுருதி. (ப்ருஹ. உப. 2, 5, 19).

(727) எந்த (அத்வரத்தில்) யாகத்தில் ஸோமரஸம் பிழிந்தெடுக்கப்படுகிறதோ அது ஸவ:; [ஸோமயாகமாக இருப்பவன்].

(728) 'க:' என்னும் சொல் இன்பத்தைக் குறிப்பது; அச்சொல்லால் துதிக்கப்படுகிருன் என்பதால் க:; "கம் ப்ரஹ்ம" என்பது சுருதி. (சாந். உப. 4, 10, 5).

(729) எல்லாப் புருஷார்த்தங்களாகவும் இருக்கிருன் ஆகையால், பிரும்மமான அவனே ஆராய்ந்து சிந்திப்பதற்குரியவன் என்பதால் பிரும்மம் கிம் (என்னப்படும்).

(730) ஸ்வதஸ் ஸித்தமான (தானே விளங்குவதான) வஸ்துவைக் குறிக்கும் 'யத்' என்னும் சொல்லால், பிரும்மம் குறிக்கப்படுகிறது என்பதால், பிரும்மம் யத்; "யதோ வா இமானி பூதானி ஜாயந்தே" என்பது சுருதி. (தைத். உப. 3, 1).

(731) பரவுவதால் பிரும்மம் தத்; "ஓம் தத் ஸதிதி நிர்தேஶோ ப்ரஹ்மணஸ் த்ரிவித: ஸ்ம்ருத:" என்பது பகவத் வசனம் (கீதை 17, 23).

(732) மோக்ஷத்தை வேண்டுவோரால் பத்யதே அடைய (அறிய)ப்படுகிருன் என்பதால் பதம். எதினும் சிறந்த பொருள் இல்லையோ அது அனுத்தமம்; பதமனுத்தமம் என்பது அடைமொழியோடு கூடியதான ஒரே பெயர்.

(733) இவன் ஆதாரமாவதால் இவனிடத்தில் எல்லா உலகங்களும் கட்டுப்பட்டிருக்கின்றன என்பதால் உலகங்களுக்கு

பந்து (உறவினன்) லோக பந்து:; (ii) அல்லது, உலகோர்களுக்கு பிதாவாதலாலும் பிதாவைப்போன்ற பந்து இல்லையாதலாலும் லோகபந்து:; (iii) அல்லது, உலகோர்களுக்கு பந்து ஒருவன் செய்யவேண்டிய காரியமாகிய 'ஹிதம் இது, அஹிதம் இது' என்னும் உபதேசத்தை சுருதிஸ்மிருதிகளின் மூலமாகச் செய்தவன் என்பதால் லோகபந்து:.

(734) (i) உலகோரால் நாத்யதே யாசிக்கப்படுகிறான், (ii) அல்லது, உலகங்களை வருத்துகிறான், (iii) அல்லது, அனுக்கிரகிக்கிறான், (iv) அல்லது, ஆள்கிறான் என்பதால் லோகநாத:.

(735) மது குலத்தில் பிறந்தவன் என்பதால் மாதவ:.

(736) பக்தர்களிடம் ஸ்நேக முள்ளவன் என்பதால் பக்தவத்ஸல:.

**सुवर्णवर्णो हेमाङ्गो वराङ्गश्चन्दनाङ्गदी ।**
**वीरहा विषमः शून्यो घृताशीरचलश्चलः ॥ ९२ ॥**

92. ஸுவர்ணவர்ணோ ஹேமாங்கோ வராங்கஶ் சந்தனாங்கதீ
வீரஹா விஷம: ஶூன்யோ க்ருதாஶீரசலஶ்சல :

(737) பொன்போன்ற நிறமுடையவன் ஸுவர்ணவர்ண:; "யதா பஶ்ய: பஶ்யதே ருக்மவர்ணம்" என்பது சுருதி (முண்டகோப. 3, 1, 3).

(738) பொன் போன்ற அங்கம் உடல் இவனுக்கு என்பதால் ஹேமாங்க:; "ய ஏஷோந்தராதித்யே ஹிரண்மய: புருஷ:" என்பது சுருதி. (சா. உப. 1, 6, 6).

(739) வராணி மங்களகரமான (அழகிய) அங்கங்களையுடையவன் என்பதால் வராங்க:.

(740) சந்தனை: இன்பத்தைத் தருகின்ற அங்கதை: கேயூரங்களால் (தோள்வளைகளால்) அலங்கரிக்கப்பெற்றவன் என்பதால் சந்தனாங்கதீ.

(741) தருமத்தைப் பாதுகாக்கும்பொருட்டு அசுரத் தலைவர்களான வீரர்களை கொல்வதால் **வீரஹா**.

(742) எல்லாரைக் காட்டிலும் (விலக்ஷணன்) வேறுகச் சிறந்தவன் ஆகையால் இவனுக்கு ஒப்பாவார் இல்லை என்பதால் விஷம :; "'ந த்வத்ஸமோ' ஸ்த்யப்யதிக: குதோ'ன்ய:" என்பது பகவத் வசனம் (கீதை 11, 43).

(743) சிறப்படையாளம் (விசேஷம்) ஒன்றும் இல்லையாதலால், இல்பொருள்போல் இவன் ஶூன்ய :.

(744) க்ருதா : நழுவிப் போன ஆஶிஷ : வேண்டுதல்களையுடையவன் (வேண்டுதல் இல்லாதான்) என்பதால் **க்ருதாஶீ:**.

(745) ஸ்வரூபத்திலும் ஸாமர்த்தியத்திலும் [திறமையிலும்] ஞானம் முதலிய குணங்களிலும் மாறுபாடு (சலனம்) இல்லாமையால் **அசல :**.

(746) வாயுவாகி அசைகிறுன் (சலிக்கிறுன்) என்பதால் **சல :**.

**अमानी मानदो मान्यो लोकस्वामी त्रिलोकधृक् ।**
**सुमेधा मेधजो धन्यः सत्यमेधा धराधरः ॥ ९३ ॥**

93. அமானீ மானதோ மான்யோ லோகஸ்வாமீ த்ரிலோகத்ருக்
ஸுமேதா மேதஜோ தன்ய: ஸத்யமேதா தராதர:

(747) இவன் (ஸ்வச்சமான) தெள்ளிய ஸம்வித் ஞான வடிவனுதலால், அனுத்ம (ஆத்மாவல்லாத) வஸ்துக்களில் இவனுக்கு ஆத்மா என்னும் அபிமானம் இல்லை என்பதால் **அமானீ**.

(748) தன்னுடைய மாயையால், எல்லோரையும் அனுத்ம வஸ்துவிலே (தன் ஆத்மா என்னும் நம்பிக்கையை) ஸ்வாத்மாபிமானத்தைக் கொள்ளச்செய்கிறுன்; (ii) அல்லது, பக்தர்களுக்கு, வழிபாடு செய்யும் கௌரவத்தைக் கொடுக்கிறுன்; (iii) அல்லது, தத்துவமறிந்தவர்களுக்கு அனுத்மப்பொருளில் ஸ்வாத்மாபி

மானம் இருப்பதை நீக்குகிறான் (வெட்டி யழிக்கிறான்) என்பதால் **மானத :.**

(749) எல்லோருக்கும் ஈசுவரன் ஆதலால், எல்லோராலும் மானனீய: கௌரவிக்கத் தக்கவன் என்பதால் **மான்ய :.**

(750) பதினான்கு உலகங்களுக்கும் ஈசுவரன் என்பதால் **லோகஸ்வாமீ.**

(751) மூவுலகையும் தாங்குவதால் **த்ரிலோகத்ருக்.**

(752) மங்களகரமான மேதா ஞானம் இவனுக்கு இருப்பதால் **ஸுமேதா :;** "நித்யமஸிச்ப்ரஜா மேதயோ: [பாணிஸூ. 5, 4, 122] இதி ஸமாஸாந்தோ'ஸிச்" (என்பது இலக்கணக் குறிப்பு).

(753) மேதே யாகத்தில், தோன்றுகிறான் என்பதால் **மேதஜ :.**

(754) விரும்பிய பொருளைப் பெற்றவனாகிய கிருதார்த்தன் என்பதால், **தன்ய :.**

(755) ஸத்யா உண்மையான, மேதை (ஞானம்) இவனுக்கு இருப்பதால் **ஸத்யமேதா :.**

(756) தன் அம்சங்களான (ஆதி)சேஷன் முதலிய எல்லோருமாகிப் பூமியைத் தாங்குவோன் என்பதால் **தராதர :.**

**तेजोवृषो द्युतिधरः सर्वशस्त्रभृतां वरः ।**
**प्रग्रहो निग्रहो व्यग्रो नैकशृङ्गो गदाग्रजः ॥ ९४ ॥**

94. தேஜோவ்ருஷோ த்யுதிதர : ஸர்வஶஸ்த்ரப்ருதாம் வர :
ப்ரக்ரஹோ நிக்ரஹோ வ்யக்ரோ நைகஶ்ருங்கோ கதாக்ரஜ :

(757) ஆதித்யனாகி, தேஜஸாம் ஒளிக்கிரணங்களை எப்பொழுதும் பொழிவதால் **தேஜோவ்ருஷ :.**

(758) அங்கங்களிலே **த்யுதிம்** காந்தியை (தரிப்பதால்) உடையவனாதலால் **த்யுதிதர :.**

(759) ஆயுதங்களைத் தரித்தவர்கள் அனைவரினும் சிறந்தவன் ஸர்வஶஸ்த்ரப்ருதாம் வர:.

(760) பக்தர்களால் கொண்டுவரப்பட்ட இலை பூ முதலியவற்றை ஏற்றுக்கொள்கிறான் என்பதால் ப்ரக்ரஹ:; (ii) அல்லது, [இந்திரிய சுகத்தையளிக்கும்] விஷயமென்னும் காட்டிலே அடக்க முடியாதவாறு தாவிச்செல்லும் இந்திரியங்கள் என்னும் குதிரைகளை, கடிவாளக் கயிற்றாலேபோல, தன்னுடைய அனுக்கிரகத்தாலே கட்டுப்படுத்துகிறான் என்பதால், இவன் கடிவாளம் போல்வதால் ப்ரக்ரஹ:; 'ரஶ்மௌச' என்னும் பாணினி வாக்கியத்தால் 'ப்ரக்ரஹ' என்னும் சொல் நேர்மையுடையது (என்பது இலக்கணக் குறிப்பு).

(761) எல்லாவற்றையும் தன் வசமாக அடக்கிக்கொள்கிறான் என்பதால் நிக்ரஹ:.

(762) அக்ரம் முடிவு அல்லது அழிவு இல்லாதவன் என்பதால் வ்யக்ர:; (ii) அல்லது, பக்தர்களுக்கு அபீஷ்டங்களை (விரும்பியவற்றை) கொடுப்பதில் ஊக்கமுடையவன் என்பதால்.

(763) நான்கு கொம்புகளையுடையவன் ஆதலால் நைகஶ்ருங்க:; "சத்வாரி ஶ்ருங்கா:" என்பது மந்த்ரவர்ணம் (தைத். ஆரண்ய. 1, 10, 17).

(764) நிகதேன மந்திரத்தால், (நேரில்) முன்புறத்தில் தோன்றுகிறான் என்பதால் கதாக்ரஜ:; 'நி ஶப்த லோபம் க்ருத்வா' (என்பது இலக்கணக் குறிப்பு); (ii) அல்லது, கத: என்பவன் ஸ்ரீ வாஸுதேவனுடைய தம்பி; அவனுக்கு முன் பிறந்தவன் என்பதால் கதாக்ரஜ:.

**चतुर्मूर्तिश्चतुर्बाहुश्चतुर्व्यूहश्चतुर्गतिः ।**
**चतुरात्मा चतुर्भावश्चतुर्वेदविदेकपात् ॥ ९५ ॥**

95. சதுர்மூர்(த்)திஶ் சதுர்பாஹுஶ் சதுர்வ்யூஹஶ் சதுர்கதி:
சதுராத்மா சதுர்பாவஶ் சதுர்வேதவிதேகபாத்

(765) விராட், ஸூத்ரம், அவ்யாக்ருதம், துரீயம் என்னும் நான்கு வடிவங்களை யுடையவன் என்பதால் **சதுர்மூர்(த்)தி**:; (ii) அல்லது, வெள்ளை சிவப்பு மஞ்சள் கறுப்பு என்று நான்கு நிறத்து வடிவங்களை யுடையவன் என்பதால்.

(766) நான்கு தோள்களை யுடையவன் **சதுர்பாஹு**:; இந்தப் பெயர் வாஸுதேவனையே (யோக) ரூடியாய்க் குறிப்பது.

(767) "ஶரீரபுருஷஶ் சந்த:புருஷோ வேதபுருஷோ மஹா புருஷ:" என்று பஹ்வ்ருசோபநிஷத்திலே சொல்லப்பட்ட நான்கு புருஷர்களும் எவனுடைய வ்யூஹமோ அவன் **சதுர் வ்யூஹ**:.

(768) (சாஸ்திரங்களிற் சொன்னபடியே செய்யும்) விதிகளின்படியே நடக்கும் நான்கு (வர்ணங்களுக்கும்) சாதிகளுக்கும் ஆசிரமங்களுக்கும் கதியாவான் **சதுர்கதி**:.

(769) விருப்பு வெறுப்பு இவை யில்லாததால் அழகு வாய்ந்த ஆத்மா மனத்தை யுடையவன் என்பதால் **சதுராத்மா**; (ii) அல்லது, மனம் புத்தி அஹங்காரம் சித்தம் என்னும் நான்கு அந்தக்கரணங்களை (உட்பொறிகளை) யுடையவனாதலால் **சதுராத்மா**.

(770) இவனிடத்திலிருந்து அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு புருஷார்த்தங்களும் எழுவதால் **சதுர்பாவ**:.

(771) நான்கு வேதங்களின் பொருளையும் உள்ளபடியே அறிகிறான் என்பதால் **சதுர்வேதவித்**.

(772) இவனுக்கு பாதம் ஒன்று என்பதால் **ஏகபாத்**; "பாதோ'ஸ்ய விஶ்வா பூதானி" என்பது சுருதி (புருஷ. ஸூ. 3); "விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்னமேகாம்ஶேன ஸ்திதோ ஜகத்" என்பது பகவத் வசனம் (கீதை. 10, 42).

समावर्तोऽनिवृत्तात्मा दुर्जयो दुरतिक्रमः ।
दुर्लभो दुर्गमो दुर्गो दुरावासो दुरारिहा ॥ ९६ ॥

96. ஸமாவர்(த்)தோ' நிவ்ருத்தாத்மா துர்ஜயோ துரதிக்ரம:
துர்லபோ துர்கமோ துர்கோ துராவாஸோ துராரிஹா

(773) ஸம்ஸார சக்கிரத்தை நன்றாகச் சுழற்றுவோன் என்பதால் ஸமாவர்(த்)த:.

(774) எங்கும் இருப்பதால் இவனுடைய மனம் விஷயங்களினின்று (இந்திரிய சுகமளிக்கும் வஸ்துக்களினின்று) திரும்புவதில்லை என்பதால் அநிவ்ரு(த்)தாத்மா.

(775) இவனை செயிக்க இயலாதென்பதால் துர்ஜய:.

(776) பயப்படுவதற்குக் காரணமாதலால் இவனுடைய ஆக்ஞையை சூரியன் முதலானவர்களும் மீறுவதில்லை என்பதால் **துரதிக்ரம:**; "பயாதஸ்யாக்னிஸ்தபதி பயாத் தபதி ஸூர்ய:, பயாதிந்த்ரஶ்ச வாயுஶ்ச ம்ருத்யுர்தாவதி பஞ்சம:" என்பது மந்த்ர வர்ணம் (கடோப. 2, 3, 3); "மஹத்பயம் வஜ்ரமுத்யதம்" (கடோப. 2, 3, 2) என்பதையும் காண்க.

(777) துர்லபமான (எளிதிற் பெறமுடியாததான) பக்தியால் அடையக் கூடியவன் என்பதால் துர்லப:.

ஜன்மாந்தரஸஹஸ்ரேஷு தபோஜ்ஞானஸமாதிபி: |
நராணாம் க்ஷீணபாபானாம் க்ருஷ்ணே பக்தி: ப்ரஜாயதே ||

என்பது வியாஸ வசனம்; "பக்த்யா லப்யஸ்த்வனன்யயா" என்பது பகவத் வசனமும் (கீதை. 8, 22).

(778) அரிதில் (சிரமத்தாலே) கம்யதே அறியப் படுகிறான் என்பதால் துர்கம:.

(779) இடையூறுகளாலே தடுக்கப்பட்டவர்களால் அரிதில் அடையப் படுகிறான் என்பதால் துர்க:.

(780) யோகிகளாலும் மிக்க சிரமத்தின் மேல் சித்தத்திலே ஸமாதி நிலையில் இருத்தப் படுகிறான் என்பதால் துராவாஸ:.

(781) துராரிண: [கெட்டபகைவர்கள்] தானவர்கள் முதலியவர்கள், அவர்களைக் கொல்வதால் துராரிஹா.

**शुभाङ्गो लोकसारङ्गः सुतन्तुस्तन्तुवर्धनः ।**
**इन्द्रकर्मा महाकर्मा कृतकर्मा कृतागमः ॥ ९७ ॥**

97. ஶுபாங்கோ லோகஸாரங்கஃ ஸுதந்துஸ் தந்துவர்தனஃ
இந்த்ரகர்மா மஹாகர்மா க்ருதகர்மா க்ருதாகமஃ

(782) சுபகரமான அங்கங்களை யுடையவனாகத் தியானிக்கத் தக்கவன் என்பதால் ஶுபாங்க:.

(783) உலகங்களின் ஸாரத்தை ஸாராங்கவத் வண்டு போல கிரஹிக்கிறான் (உண்கிறான்) என்பதால் லோகஸாரங்க:; "ப்ரஜாபதிர் லோகானப்யதபத்" என்பது சுருதி (சாந்தோ. உப. 2, 23, 3); (ii) அல்லது, லோகஸார : பிரணவம்; அதைக் கொண்டு [இவன்] அடையப் படுகிறான் என்பதால்; "ப்ருஷோதராதித்வாத் ஸாதுத்வம்" (என்பது இலக்கணக் குறிப்பு).

(784) இவனுடைய அழகிய நூலாகப் பிரபஞ்சமானது பரப்பப் பெற்றது என்பதால் ஸுதந்துஃ.

(785) அதே நூலை விருத்தி செய்கிறான், (ii) அல்லது, அழிக்கிறான் என்பதால் தந்துவர்த்தன :.

(786) இந்திரனுடைய தொழிலே இவனுடைய தொழில் என்பதால் இந்த்ரகர்மா.

(787) ஆகாசம் (வான்) முதலிய பெரும் பூதங்கள் (ஐந்தும்) இவனால் செய்யப்பட்டன என்பதால் மஹாகர்மா.

(788) விரும்பியதைச் செய்து முடித்தவன் (க்ருதார்த்தன்) ஆகையால், 'எல்லாம் செய்து முடித்தாய் விட்டது; செய்து

முடிக்கவேண்டிய காரியம் (இவனுக்கு) ஒன்றுமே யில்லை' என்பதால் க்ருதகர்மா.

(789) வேதங்கள் என்னும் ஆகமம் எவனால் செய்யப்பட்டதோ அவன் க்ருதாகம:; "அஸ்ய மஹதோ பூதஸ்ய நி:ஶ்வஸிதமேதத்" என்பது முதலியவை சுருதி (ப்ருஹ. உப. 2, 4, 10).

उद्भवः सुन्दरः सुन्दो रत्ननाभः सुलोचनः ।
अर्को वाजसनः शृङ्गी जयन्तः सर्वविज्जयी ॥ ९८ ॥

98. உத்பவ: ஸுந்தர: ஸுந்தோ ரத்நநாப: ஸுலோசன:
அர்(க்)கோ வாஜஸன: ஶ்ருங்கீ ஜயந்த: ஸர்வவிஜ்ஜயீ

(790) தன்னிச்சை கொண்டு சிறந்த பவம் பிறப்பை அடைவதால்; (ii) அல்லது, எல்லாவற்றிற்கும் காரணமாவதால் இவனுக்கு ஜன்மம் உத்கதம் இல்லையாயிற்று என்பதால் உத்பவ:.

(791) எல்லாவற்றையும் கடந்த மிக்க ஸௌபாக்கியத்தை (அழகை) யுடையவனாதலால் ஸுந்தர:.

(792) நன்றாக ஈரித்திருக்கிறான் என்பதால் ஸுந்த:; "உந்தீ க்லேதனே இத்யஸ்ய தாதோ: பசாத்யச்" (என்பது இலக்கணக் குறிப்பு); ஈரமாயிருப்பதாகக் குறிப்பதால், கருணாகரன் என்பது பொருள்; "ப்ருஷோதராதித்வாத் பரரூபத்வம்" (என்பது இலக்கணக் குறிப்பு).

(793) 'ரத்ன' என்னும் சொல்லால் சோபை குறிக்கப் பட்டது; ரத்னம் போல அழகான நாபியை (கொப்பூழை)யுடையவன் என்பதால் ரத்னநாப:.

(794) அழகிய லோசனம் கண்ணை, (ii) அல்லது, ஞானத்தை யுடையவன் என்பதால் ஸுலோசன:.

(795) பூஜிக்கத்தக்கவர்களுள் மிகச் சிறந்தவர்களான பிரமன் முதலியவர்களாலும் அர்ச்சிக்கத்தக்கவன் என்பதால் அர்(க்)க:.

(796) வாஜம் அன்னத்தை யாசிப்பவர்களுக்கு ஸனோதி கொடுக்கிறான் என்பதால் வாஜஸன :.

(797) பிரளய வெள்ளத்திலே கொம்புடைய மீனாக வடிவ மெடுத்தவன் ஶ்ருங்கீ ; "மத்வர்தீயோ'திஶாயனே இனி ப்ரத்யய :" (என்பது இலக்கணக் குறிப்பு).

(798) பகைவர்களை உயர்ந்த குணத்தால் செயிக்கிறான் என்பதால், (ii) அல்லது, வெற்றிக்குக் காரணமாதலால் ஜயந்த :.

(799) எல்லாவற்றையும் பற்றிய ஞானம் இவனுக்கு இருப்பதால் ஸர்வவித்; செயிப்பதற்கு அரியனவாகி உள்ளே யிருக்கும் விருப்பு முதலானவற்றையும் புறத்தேயிருக்கும் ஹிரண்யாக்ஷன் முதலானவர்களையும் செயிப்பதற்குரிய திறமை வாய்ந்தவன் என்பதால் ஜயீ ; "தச்சிலாதிகாரத்தில் 'ஜித்ருக்ஷி' என்று தொடங்கும் பாணினி வசனத்தால் (ஸூ. 3, 2, 157) இனிப்ரத்யய:" (என்பது இலக்கணக் குறிப்பு); ஸர்வவித்தும் ஜயீயுமாவதால் ஸர்வவிஜ்ஜயீ ; (இது) ஒரே பெயர்.

**सुवर्णबिन्दुरक्षोभ्यः सर्ववागीश्वरेश्वरः ।**
**महाह्रदो महागर्तो महाभूतो महानिधिः ॥ ९९ ॥**

99. ஸுவர்ணபிந்துரக்ஷோப்ய : ஸர்வவாகீஶ்வரேஶ்வர :
மஹாஹ்ரதோ மஹாகர்(த்)தோ மஹாபூதோ மஹாநிதி:

(800) இவனுக்கு பிந்தவ : அவயவங்கள் பொன் போன்றிருப்பதால் ஸுவர்ணபிந்து : ; "ஆப்ரணகாத் ஸர்வ ஏவ ஸுவர்ண :" என்பது சுருதி (சாந்தோ. உப. 1, 6, 6); (ii) அல்லது, மங்களகரமான வர்ண : அக்ஷரமும் பிந்துவும் எந்த மந்திரத்தில் உள்ளதோ அந்த மந்திரத்தின் வடிவாயிருப்பதால் ஸுவர்ணபிந்து: [ஓம் என்னும் மந்திரமானவன்].

இவ்வாறு பெயர்களின் எட்டாவது நூறு விரித்துரை செய்யப்பட்டது.

(801) விருப்பு வெறுப்பு முதலியவற்ருலும் சப்தம் முதலிய [இந்திரியங்களால் நுகரும்] விஷயங்களாலும் தேவர்களுடைய பகைவர்களாலும் கலங்காதவன் என்பதால் அக்ஷோப்ய :.

(802) வாகீசுவரர்களான பிரமன் முதலானவர்கள் அனைவருக்கும் ஈஶ்வர : தலைவன் என்பதால் ஸர்வவாகீஶ்வரேஶ்வர ஃ.

(803) இவனுடைய ஆனந்தத்திலே மூழ்கிச் சிரமந் தீர்ந்து யோகிகள் இன்புற்று இருக்கிருர்கள் என்பதுபற்றி, இவன் பெரிய மடுவைப் போன்று இருப்பதால், மஹாஹ்ரத :.

(804) படுகுழிபோல் இவனுடைய மாயை பெரிதாயும் கடப்பதற்கு அரிதாயு மிருப்பதால் மஹாகர்த : ; "மம மாயா துரத்யயா" என்பது பகவத் வசனம் (கீதை, 7, 14); (ii) அல்லது, 'கர்த' என்னும் சொல் நிருக்தத்தை அறிந்தவர்களால் 'ரத' என்னும் சொல்லுக்கு பர்யாயமாக (இணையாக)ச் சொல்லப்பட்டது ; அதனுல் மஹாரதன் மஹாகர்த : என்னப்படுகிருன் ; இவனுக்கு மஹாரதனுடைய தன்மை இருப்பது பாரதம் முதலிய நூல்களாலே பிரஸித்தம்.

(805) முக்காலத்திலும் இடையருது நிலைத்த ஸ்வரூபத்தை யுடையவன் என்பதால் மஹாபூத :.

(806) எல்லா வுயிர்களும் இவனிடத்திலே (சேமப் பொருளைப்போல) நிதியைப்போல வைக்கப்படுகின்றன என்பதால் நிதி : ; பெரியதான நிதி மஹாநிதி :.

कुमुदः कुन्दरः कुन्दः पर्जन्यः पावनोऽनिलः ।
अमृताशोऽमृतवपुः सर्वज्ञः सर्वतोमुखः ॥ १०० ॥

100. குமுத ஃ குந்தர ஃ குந்தோ பர்ஜன்ய ஃ பாவனோ'நில ஃ
அம்ருதாஶோ' ம்ருதவபு ஃ ஸர்வஜ்ஞஃ ஸர்வதோமுகஃ

(807) பாரத்தை யிறக்குவதால் கும் பூமியைக் களிப்பிப்பவன் என்பதால் குமுத: ; "முதிரத்ராந்தர் பாவித ணிஜர்த்த :" (என்பது இலக்கணக் குறிப்பு).

(808) குந்த புஷ்பங்களை யொத்த தூய பலன்களை ராதி கொடுக்கிறான்; (ii) அல்லது லாதி பெற்றுக்கொள்கிறான் என்பதால் குந்தர: "ரலயோர் வ்ருத்த்யேகத்வஸ்மரணாத்" (என்பது இலக்கணக் குறிப்பு); (iii) அல்லது,

> கும் தராம் தாரயாமாஸ ஹிரண்யாக்ஷஜிகாம்ஸயா
> வாராஹம் ரூபமாஸ்தாய

[ஹிரண்யாக்ஷனைக் கொல்லக் கருதி வராக ரூபமெடுத்து பூமியைப் பிளந்தெறிந்தான்] என்பதால் குந்தர:.

(809) குந்த மலர்போன்ற அழகிய அங்கங்களையுடையவனாகி சுத்தமாய் ஸ்படிகம்போல் மாசற்றவன் குந்த:; (ii) அல்லது, கும் பூமியை, காசியபனுக்குத் தானஞ் செய்தான் என்பதால் குந்த:;

> ஸர்வபாபவிமுக்த்யர்(த்)தம் வாஜிமேதேன சேஷ்டவான் |
> தஸ்மின் யஜ்ஞே மஹாதானே தக்ஷிணாம் ப்ருகுநந்தன: |
> மாரீசாய ததௌ ப்ரீத: கச்யபாய வஸுந்தராம் ||

என்பது ஹரிவம்சம்; (iii) அல்லது, கும் பூமியை த்யதி துண்டமாகச் செய்கிறான் என்பதால் குந்த:; 'கு' என்னும் சொல்லால் அரசர்கள் குறிக்கப்படுகிறார்கள்;

> நி: க்ஷத்ரியாம் யச்ச சகார மேதினீம்
> அநேகசோ பாஹுவனம் ததாச்சினத் |
> ய: கார்(த்)தவீர்யஸ்ய ஸ பார்கவோத்தமோ
> மமாஸ்து மாங்கல்யவிவ்ருத்தயே ஹரி: ||

என்பது விஷ்ணு தர்மம்.

(810) ஆத்யாத்மிகம் முதலிய மூன்று தாபங்களையும், பர்ஜன்யம் (மேகம்), அதைப்போலத் தணிக்கிறான்; (ii) அல்லது, வேண்டிய பொருட்களை (காமங்களை) யெல்லாம் பொழிந்து உதவுகிறான் என்பதால் பர்ஜன்ய:.

(811) (அவனை) நினைத்த மாத்திரத்தில் தூய்மை செய்கிறான் என்பதால் பாவன:.

(812) இலதி பிரேரணத்தை (ஏவுதலை)ச் செய்கிறான் என்று இல :; (தன்னை) அவ்வாறு செய்பவன் இல்லாமையால் அனில ஃ; (ii) அல்லது, இலதி தூங்குகிறான் என்பதால், ஞானமில்லாதவன் இல :; அவனுக்கு நேர்மாறாக, எப்பொழுதும் விழித்திருக்கும் இயல்புடையவனாதலால் [அனில :]; (iii) அல்லது, "நிலதேர்க ஹனார்(த்)தாத் கப்ரத்யயாந்தாத் ரூபம்" (என்பது இலக்கணக் குறிப்பு); இதனால் மறைந்திராதவன் அனில :; அதாவது, பக்தர்களுக்கு எளியவன் என்றவாறு.

(813) தன் ஆத்மாவாகிய அமுதத்தை உண்கிறான் என்பதால் அம்ருதாஶ :; (ii) அல்லது, கடைந்தெடுத்த அமுதத்தைப் தேவர்களுக்குப் பருக அளித்து தானும் பருகுகிறான் என்பதால் அம்ருதாஶ ஃ; (iii) அல்லது, அம்ருதா அழிவில்லாத (குன்றாத) பலனையுடைய ஆஶா வாஞ்சை, இவனுக்கு இருப்பதால்.

(814) ம்ருதம் சாவு; அதில்லாத உடலையுடையவன் என்பதால் அம்ருதவபு :.

(815) எல்லாவற்றையும் அறிவோன் ஸர்வஜ்ஞ ஃ; "ய: ஸர்வஜ்ஞ : ஸர்வவித்" என்பது சுருதி (முண்டகோப. 1, 1, 9).

(816) ஸர்வதோக்ஷிஶிரோமுகம்" என்பது பகவத் வசனத்தில் (கீதை. 13, 13) இருப்பதால் ஸர்வதோமுக : [எல்லாப்புறத்திலும் முகங்களை யுடையவன்].

**सुलभः सुव्रतः सिद्धः शत्रुजिच्छत्रुतापनः ।**
**न्यग्रोधोदुम्बरोऽश्वत्थश्चाणूरान्ध्रनिषूदनः ॥ १०१ ॥**

101. ஸுலப: ஸுவ்ரத: ஸித்த: ஶத்ருஜிச் சத்ருதாபன:
ந்யக்ரோதோதும்பரோ'ஶ்வத்தஶ் சாணூராந்த்ரநிஷூதனஃ

(817) பக்தியைமட்டுங்கொண்டு, சமர்ப்பித்த இலை பூ பழம் முதலியவற்றால் எளிதில் அடையப்படுகிறான் என்பதால் ஸுலப :; "பத்ரேஷு புஷ்பேஷு பலேஷு தோயேஷ்வக்ரீத

லப்யேஷு ஸதைவ ஸத்ஸு, பக்த்யேகலப்யே புருஷே புராணே முக்த்யை கதம் ந க்ரியதே ப்ரயத்ன :'' என்பது மஹாபாரதம்.

(818) அழகாக வ்ரதயதி (சேர்ந்து) உண்கிறான், (ii) அல்லது, உண்பதைத் தவிர்க்கிறான் என்பதால் ஸுவ்ரத:.

(819) வேறொருவருக்கும் உட்படாதவனாய் (வேறு காரணப் பொருளின்றி) தானேயாக இருப்பவன் (தானே தோன்றி நிலைத்திருப்பவன்) என்பதால் ஸித்த:.

(820) தேவர்களுடைய பகைவர்களே இவனுக்குப் பகைவர்கள் ; அவர்களைச் செயிப்பதால் ஶத்ருஜித்.

(821) தேவர்களுடைய சத்துருக்களை வாட்டுவோன் ஶத்ருதாபன:.

(822) ந்யக் முன்னால் ரோஹதி எல்லாவற்றிற்கும் மேல் இருக்கிறான் என்பதால் ந்யக்ரோத:; "ப்ருஷோதராதித்வாத் ஹகாரஸ்ய தகாராதேஶ:'' (என்பது இலக்கணக் குறிப்பு); (ii) அல்லது, எல்லா வுயிர்களையும் கீழ்ப்படுத்தி தன் மாயையால் மூடிக் கட்டுப்படுத்துகிறான் என்பதால்.

(823) காரணப் பொருளாய் ஆகாயத்திலிருந்து எழுந்ததால் உதும்பர:; "ப்ருஷோதராதித்வாதேவோகாராதேஶ:'' (என்பது இலக்கணக் குறிப்பு); (ii) அல்லது, உதும்பரம் அன்னம் முதலியவை ; அவற்றால், அவையாகி ஜகத்து முழுவதையும் போஷிக்கிறான் என்பதால் உதும்பர:; "ஊர்க்வா அன்னாத்ய முதும்பரம்'' என்பது சுருதி. 'ந்யக்ரோதோதும்பர' என்று இங்கு விஸர்க்கலோபம் இருப்பது ஆர்ஷமான ஸந்தி (என்பது இலக்கணக் குறிப்பு).

(824) நாளைய தினமும் நிலைத்திராதது என்பதால் அஶ்வத்த:; "ப்ருஷோதராதித்வாதேவ ஸகாரஸ்ய தகாராதேஶ:'' (என்பது இலக்கணக் குறிப்பு); "ஊர்த்வமூலோ' வாக்ஶாக ஏஷோ' ஶ்வத்த: ஸநாதன:'' என்பது சுருதி (கடோப. 6, 1);

"ஊர்த்வமூலமத: ஶாக மஶ்வத்தம் ப்ராஹுரவ்யயம்" என்பது ஸ்ம்ருதியும் (கீதை 15, 1).

(825) சாணூரன் என்னும் அந்திர தேசத்தவனைக் கொன்றவன் என்பதால் சாணூராந்த்ரநிஷூதன:.

सहस्रार्चिः सप्तजिह्वः सप्तैधाः सप्तवाहनः ।
अमूर्तिरनघोऽचिन्त्यो भयकृद्भयनाशनः ॥ १०२ ॥

102. ஸஹஸ்ரார்(ச்)சி: ஸப்தஜிஹ்வ: ஸப்தைதா: ஸப்தவாஹன:
அமூர்(த்)திரனகோ'சிந்த்யோ பயக்ருத்பயநாஶன:

(826) ஸஹஸ்ராணி எண்ண முடியாத, கிரணங்கள் எவனுக்கு உண்டோ அவன் ஸஹஸ்ரார்(ச்)சி:; "திவி ஸூர்யஸஹஸ்ரஸ்ய" என்பது கீதா வசனம் (11, 12).

(827) ஸப்த ஜிஹ்வா: (ஏழு நாக்குகள்) இவனுக்கிருப்பன என்பதால் ஸப்தஜிஹ்வ:;

காலீ கராலீ ச மனோஜவா ச ஸுலோஹிதா யா ச ஸுதூம்ரவர்ணா
ஸ்புலிங்கினீ விஶ்வருசீ ச தேவீ லேலாயமானா இதி ஸப்த ஜிஹ்வா:

என்பது சுருதி (முண். உப. 1, 2, 4).

(828) ஏழு ஏதாம்ஸி ஜ்வாலைகள் (தீப்திகள்) இவனுக்கு இருப்பதால் ஸப்தைதா:, அதாவது, அக்னி; "ஸப்த தே அக்னே ஸமித: ஸப்த ஜிஹ்வா:" என்பது சுருதி [மந்த்ரவர்ணம்] (தைத். ஸம். 1, 5, 2).

(829) ஏழு குதிரைகள் இவனுக்கு வாகனங்கள் என்பதால் ஸப்தவாஹன:; (ii) அல்லது, 'ஸப்த' என்னும் பெயருடைய குதிரை ஒன்று இவனுக்கு வாகனம் ஆதலால்; "ஏகோ'ஶ்வோ வஹதி ஸப்தநாமா" என்பது சுருதி (தைத். ஆரண்ய. 3, 11).

(830) கனமான (கெட்டியான) வடிவாகி (தரித்து) நிலைத்து நிற்கும் திறமை வாய்ந்ததாய் அசையாப் பொருளாகவோ அசையும் பொருளாகவோ இருப்பது மூர்த்தி:; "தாப்யோ'பித

ப்தாப்யோ மூர்(த்)திரஜாயத" என்பது சுருதி (ஐத. உப. 3, 2); அவ்வாறின்றி (வடிவமின்றி) இருப்பதால் அமூர்(த்)தி: ; (ii) அல்லது, தேக அமைப்பையுடையதாய் கெட்டியான அங்கங்களையும் உடையது மூர்(த்)தி :, அதின்றி இருப்பதால் அமூர்(த்)தி :.

(831) அகம் துன்பம், (ii) அல்லது, பாபம்; இது இவனுக்கு இல்லை என்பதால் அனக :.

(832) (ப்ரமாதா) அளவிடுவோன் முதலானவர்களுக்கு (காட்சிக்குக் காரணனாய்) ஸாக்ஷியாய் இருப்பதால், இவன் எல்லாப் பிரமாணங்களைக்கொண்டும் அறியமுடியாத தன்மையுடையவன் என்பதால் அசிந்த்ய:; (ii) அல்லது, பிரபஞ்ச முழுவதிற்கும் வேறான தன்மையுடையவனாய், 'இவன் இத்தன்மையன்' என்று நினைப்பதற்கு இயலாதபடியால் அசிந்த்ய :.

(833) கெட்டவழியிலே செல்வோருக்கு பயத்தைக் கொடுக்கிறான், (ii) அல்லது, பக்தர்களின் பயத்தை க்ருந்ததி போக்குகிறான் (வெட்டி யழிக்கிறான்) என்பதால் பயக்ருத்.

(834) வர்ணம் (ஜாதி) ஆசிரமம் இவைகளின் ஆசாரத்தை (ஒழுக்கத்தை)க் கைவிடாதவர்களின் பயத்தைக் கெடுப்பதால் பயநாஶன :;

> வர்ணாஶ்ரமாசாரவதா புருஷேண பர : புமான்
> விஷ்ணுராராத்யதே பந்தா நான்யத் தத்தோஷகாரக :

என்பது பராசர வசனம் (விஷ்ணுபு. 3, 8, 9).

**अणुर्बृहत्कृशः स्थूलो गुणभृन्निर्गुणो महान् ।**
**अधृतः स्वधृतः स्वास्यः प्राग्वंशो वंशवर्धनः ॥ १०६ ॥**

103. அணுர்ப்ருஹத்க்ருஶ: ஸ்தூலோ குணப்ருந்நிர்குணோ மஹான்
அத்ருத : ஸ்வத்ருத : ஸ்வாஸ்ய : ப்ராக்வம்ஶோ வம்ஶ
வர்தன :

(835) அதிஸூக்ஷ்மமாய் [அளவுகடந்த நுண்மையுடையதாய்] இருப்பதால் அணு:; "ஏஷோணு ராத்மா சேதஸா வேதிதவ்ய:" என்பது சுருதி (முண்டகோப. 3, 1, 9).

(836) பெரிதாயும் பெருகுவதாயும் இருப்பதால் பிரும்மம் ப்ருஹத்; "மஹதோ மஹீயான்" என்பது சுருதி (கடோப. 1, 2, 20).

(837) "அஸ்தூலம்" (ப்ருஹ. உப. 3, 8, 8) என்று தொடங்கும் வாக்கியப்படி, திரவியத் தன்மை (உருவம்) இவனுக்கு மறுக்கப்படுவதால், க்ருஶ:.

(838) எல்லாவற்றையும் தன்னுள் அடக்கிக்கொண்டிருக்கிற படியால் இவன் ஸ்தூல: என்று உபசாரச் சொல்லால் கூறப்படுகிறான்.

(839) சிருஷ்டி, ஸ்திதி, லயம் என்னும் தொழில்களை அதிஷ்டாதா மேற்பார்ப்பவன் என்பதால், ஸத்துவம், ரஜஸ், தமஸ் என்னும் குணங்களை மேற்கொள்வோன் குணப்ருத்.

(840) உண்மையில் இவனுக்கு குணங்கள் இல்லை என்பதால் நிர்குண:; "கேவலோ நிர்குணஶ்ச" என்பது சுருதி (ஶ்வேதா. உப. 6, 11).

(841) சப்தம் முதலிய குணங்கள் இல்லாமையாலும், அளவிலடங்காததான நுண்மை (ஸூக்ஷ்மத் தன்மை) யுடையவனுதலாலும், எப்பொழுதுமுள்ள தூய்மை (நித்ய ஶுத்தம்), எங்கும் வியாபித்திருக்கை (ஸர்வகதத்வம்) முதலிய குணங்களாலும், ப்ரதிபந்தகமாக (தடையாக)க் கூடிய தன்மை ஒன்றுமே இவனுக்குச் சொல்வதற்கு இயலாது என்பதால் மஹான்; "அனங்கோ' ஶப்தோ' ஶரீரோ' ஸ்பர்ஶஶ்ச மஹாஞ்சுசி:" என்பர் ஆபஸ்தம்பர் (தர்மஸூ. 1, 12, 7).

(842) பூமி முதலியவற்றைத் தாங்குவோரையும் தாங்குவோனாய், பிறனொருவனாலும் தாங்கப்படாதிருப்பவனுதலால் அத்ருத:.

(843) இது இப்படியானால் எவனாலே இவன் தாங்கப்படு கிறான் (தரித்திருக்கிறான்) என்றால், தன்னாலேயே தாங்கப்படு கிறான் **ஸ்வத்ருத:** என்கிறார்; "ஸ பகவ: கஸ்மின் ப்ரதிஷ்டித இதி ஸ்வே மஹிம்னி" என்பது சுருதி (சாந்தோ. உப. 7, 24, 1).

(844) இவனுடைய முகம் மங்களகரமானதாய், தாமரை யின் மத்தியபாகத்திலுள்ள இதழ் போலச் சிவந்ததாய், எல்லா வற்றினும் மிகுந்த அழகு வாய்ந்ததாய் இருப்பதால் **ஸ்வாஸ்ய:**; "அஸ்ய மஹதோ பூதஸ்ய" என்று தொடங்கும் சுருதியைக் காண்க. (ப்ருஹ. உப. 2, 4, 10).

(845) மற்ற எவனுடைய **வம்ஶ:** வமிசத்தாரும் பின்னு லுண்டானவர்கள்; இவனுடைய வமிசமாகிய பிரபஞ்சமோ முன்னால் உண்டாகியது, பின்னாலுண்டானதன்று, என்பதால் **ப்ராக்வம்ஶ:**.

(846) **வம்ஶம்** பிரபஞ்சம், அதைப் பெருக்குவதால், (ii) அல்லது, அழிப்பதால் **வம்ஶவர்தன:**.

**भारभृत्कथितो योगी योगीशः सर्वकामदः ।**
**आश्रमः श्रमणः क्षामः सुपर्णो वायुवाहनः ॥ १०४ ॥**

104. **பாரப்ருத் கதிதோ யோகீ யோகீஶ: ஸர்வகாமத:**
**ஆஶ்ரம: ஶ்ரமண: க்ஷாம: ஸுபர்ணோ வாயுவாஹன:**

(847) அனந்தன் முதலிய வடிவுகளால் பூமியின் பாரத்தைத் தாங்குவதால் **பாரப்ருத்**.

(848) வேதங்கள் முதலியவற்றால் இவனே பரன் என்று சொல்லப்படுவதால் **கதித:**; (ii) அல்லது, எல்லா வேதங்களா லும் புகழப்படுவதால் **கதித:**; "ஸர்வே வேதா யத்பதமா மனந்தி" (கடோப. 1, 2, 15) என்றும், "வேதைஶ்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:" (கீதை 15, 15) என்றும்,

வேதே ராமாயணே புண்யே பாரதே பரதர்ஷப |
ஆதௌ மத்யே ததா சாந்தே விஷ்ணு: ஸர்வத்ர கீயதே ||

(மஹாபா. ஸ்ரவண. 93) என்றும், சுருதி ஸ்மிருதி முதலியவற்றிலுள்ள வசனங்கள்; "ஸோ'த்வன: பாரமாப்னோதி தத் விஷ்ணோ: பரமம் பதம்" (கடோப. 1, 3, 9) என்பது முதலியவையும் சொல்லப்படுகின்றன. 'வழியுமாகி வியாபிக்குந் தன்மையுமுடைய விஷ்ணுவின் மிகச் சிறந்த இடம் யாது?' என்று ஆராய்ந்தறிய விரும்பினால், அது எல்லா இந்திரியங்களைக் காட்டிலும் மேலானது என்று (பிரதிபாதிக்கப்படுகின்றது) அறிவிக்கப்படுகின்றது; "இந்த்ரியேப்யோ பராஹ்யர்(த்)தா:" என்று தொடங்கி, "புருஷாந் ந பரம் கிஞ்சித் ஸா காஷ்டா ஸா பராகதி:" (கடோப. 1, 3, 9—11) என்பது முடியவுள்ள சுருதியாலே, எவன் புகழப்படுகிறானோ அவன் கதி:.

(849) **யோக:** ஞானம்; அதனால் மட்டுமே அடையத் தக்கவன் என்பதால் **யோகீ**; (ii) அல்லது, **யோக:** ஸமாதி நிலை; அவனே எப்பொழுதும் தன் ஆத்மாவிலே தன் ஆத்மாவை நிலைத்திருக்கச் செய்கிறான், அதனால் **யோகீ.**

(850) மற்ற யோகிகள் யோகத்திற்கு நேரும் இடையூறுகளாலே தாக்கப்பட்டு தங்கள் ஸ்வரூபத்தினின்றும் நழுவி விடுகிறார்கள்; இவனோ நழுவுதலில்லாமையால் அவர்களுக்குத் தலைவன் **யோகீஸ:.**

(851) எப்பொழுதும் எல்லா விருப்பங்களையும் அளிக்கிறான் என்பதால் **ஸர்வகாமத:**; "பல மத உபபத்தே:" என்று வியாஸரால் சொல்லப்பட்டது (ப்ரஹ். ஸூ. 3, 2, 38).

(852) ஸம்ஸாரமாகிய காட்டிலே மயங்கித் திரிவோர் அனைவர்க்கும் [அங்கேயுள்ள] ஆசிரமத்தைப்போல சிரமத்தைத் தீர்த்துக் கொள்வதற்கான இடமாக இருப்பதால் **ஆஸ்ரம:.**

(853) விவேகமில்லாதவர்கள் அனைவரையும் வாட்டுவதால் **ஸ்ரமண:.**

(854) எல்லா வுயிர்களையும் க்ஷாமா: க்ஷீணமடைந்தவர் களாகச் செய்வதால் க்ஷாம:; "தத்கரோதி ததாசஷ்டே இதி ணிசி பசாத்யசி க்ருதே ஸம்பன்ன: க்ஷாம இதி" (என்பது இலக்கணக் குறிப்பு).

(855) மங்களகரமான பர்ணனி சந்தஸ்கள் என்னும் இலைகள், ஸம்ஸாரமென்னும் மரத்தின் வடிவங்கொண்ட இவனுக்கு, இருப்பதால் ஸுபர்ண:; "சாந்தாம்ஸி யஸ்ய பர்ணனி" என்பது பகவத் வசனம் (கீதை. 15, 1).

(856) எவனுக்குப் பயந்து வாயுதேவன் பிராணிகளின் மேல் வீசுகிறானே, அவன் வாயுவாஹன:; "பீஷாஸ்மாத் வாத: பவதே" (தைத். உப. 2, 8) என்பது சுருதி.

धनुर्धरो धनुर्वेदो दण्डो दमयिता दमः ।
अपराजितः सर्वसहो नियन्ता नियमो यमः ॥ १०५॥

105. தனுர்தரோ தனுர்வேதோ தண்டோ தமயிதா தம:
அபராஜித: ஸர்வஸஹோ நியந்தா நியமோ'யம:

(857) ஸ்ரீமான் இராமன் பெரிய வில்லைத் தாங்கி நின்றான் என்பதால் தனுர்தர:.

(858) அந்த தசரத குமாரனே தனுர்வேதத்தை அறிந்தவன் என்பதால் தனுர்வேத:.

(859) தண்டிப்போரின் ஆயுதம் தண்ட: [அந்த ஆயுதமாவோனும் அவனே]; "தண்டோ தமயதா மஸ்மி" என்பது பகவத் வசனம் (கீதை 10, 38).

(860) இயமன் (வைவஸ்வதன்), அரசன் முதலியவர்களாகி உயிர்களை ஒடுக்குகிறான் என்பதால் தமயிதா.

(861) அடக்குவதற் குரியவர்களை தண்டனை செய்வதால் ஆகும் பயன் தம:; அதுவும் அவனே என்பதால் தம:.

(862) சத்துருக்களால் செயிக்கப்படாதவன் என்பதால் அபராஜித:.

(863) எல்லா வேலைகளிலும் திறமைவாய்ந்தவன் ; (ii) அல்லது, எல்லாப் பகைவர்களையும் ஒடுக்குவோன் என்பதால் ஸர்வஸஹ ::

(864) அவ்வவர்களுடைய தொழில்களைப் பிரித்துக் கொடுத்து எல்லோரையும் ஏவுகிறுன் என்பதால் நியந்தா.

(865) அவனுக்கு ஒரு நியம : நியதியும் (விதியும்) இல்லாதலால் அநியமஃ ; எல்லாரையும் நியமிப்பவனுக்கு (ஏவுவோனுக்கு) நியந்தா (நியமிப்பவன்) வேறொருவன் இல்லையாதலால்.

(866) இவனுக்கு யம: மிருத்யு (அழிவு) இல்லாததால் அயம :.

(865-6) அல்லது, யமம் நியமம் என்பவை யோகத்திற்குரிய அங்கங்கள் ; அவற்றுல் அடையப் படுவோன் என்பதால் அவனே (865) நியம : (866) யம :.

सत्त्ववान्सात्त्विकः सत्यः सत्यधर्मपरायणः ।
अभिप्रायः प्रियार्होऽर्हः प्रियकृत्प्रीतिवर्धनः ॥१०६॥

106. ஸத்த்வவான் ஸாத்திவிகஃ ஸத்ய: ஸத்யதர்மபராயண :
அபிப்ராய: ப்ரியார்ஹோ'ர்ஹ: ப்ரியக்ருத் ப்ரீதிவர்தன :

(867) சூரத்தனம், வீரம் முதலியவை ஸத்த்வம், இவனுக்கு இருப்பதால் ஸத்த்வவான்.

(868) முக்கியமாக ஸத்துவ குணத்திலே நிலைத்து நிற்பதால் ஸாத்த்விக :.

(869) நல்லோர்க்கு ஸாது (நல்லவன்) ஆதலால் ஸத்ய :.

(870) நிகழ்ந்தவாறு சொல்லுவதாகிய ஸத்தியமும், ' இது செய், இது செய்யாதே ' என்று விதிக்கும் தர்மமும் ஆகிய வழியில் ஒழுகுவோன் என்பதால் ஸத்யதர்மபராயண :.

(871) புருஷார்த்தங்களை அடைய விரும்புவோரால் அணுகி வேண்டப்படுகிறான்; (ii) அல்லது, ஜகத்தானது பிரளய காலத்தில் இவனை நோக்கிச் செல்கின்றது என்பதால் அபிப்ராய:.

(872) ப்ரியாணி இஷ்டமான வஸ்துக்களைப் பெறுவதற்கு உரியவன் என்பதால் ப்ரியார்ஹ:;

*யத்யதிஷ்டதமம் லோகே யச்சாஸ்ய தயிதம் க்ருஹே |*
*தத் தத் குணவதே தேயம் ததேவாக்ஷயமிச்சதா ||*

என்பது ஸ்மிருதி (தக்ஷ. 3, 31).

(873) ஸ்வாகதம் (நல்வரவு கூறுதல்) ஆஸனம் (இருக்கையளித்தல்), ப்ரஸம்ஸை (சிலாகித்தல்) அர்க்யம் பாத்யம் (அர்க்கியப்பொருளும் கால் கழுவ நீரும் கொடுத்தல்), ஸ்துதி (ஸ்துதித்தல்), நமஸ்காரம் (வணக்கம்) முதலான பூஜா ஸாதனங்களால் பூஜிக்கத் தகுந்தவன் என்பதால் அர்ஹ:.

(874) பிரியங்கொள்ளத் தகுந்தவன் என்பது மட்டுமன்று, ஸ்துதி முதலியவற்றால் வழிபடுவோருக்கு பிரியமானவற்றைச் செய்கிறான் என்பதால் ப்ரியக்ருத்.

(875) அவர்களுடைய (வழிபடுவோர்களுடைய) பக்தியை (பிரீதியை) அதிகப்படுத்துகிறான் என்பதால் ப்ரீதிவர்தன:.

**विहायसगतिर्ज्योतिः सुरुचिर्हुतभुग्विभुः ।**
**रविर्विरोचनः सूर्यः सविता रविलोचनः ॥१०७॥**

107. விஹாயஸகதிர் ஜ்யோதி: ஸுருசிர் ஹுதபுக் விபு:
ரவிர் விரோசன: ஸூர்ய: ஸவிதா ரவிலோசன:

(876) விஹாயஸம் (விண்) இவனுக்கு கதி: இருப்பிடம் என்பதால் விஹாயஸகதி: விஷ்ணுபதம், (ii) அல்லது, ஆதித்தியன்.

(877) தானாகவே ஒளிர்கிறான் என்பதால் ஜ்யோதி:; "நாராயண: பரம் ஜ்யோதி:" என்பது மந்த்ர வர்ணம்:

(878) அழகிய ருசி: ஒளியை, (ii) அல்லது, சுபகரமான இச்சையை யுடையவன் என்பதால் ஸுருசி :.

(879) எல்லாத் தேவதைகளையும் உத்தேசித்து நடத்தும் (யாக) காரியங்களிலும் ஹோமஞ் செய்த பொருளைப் புசிக்கிறான், (ii) அல்லது, பாதுகாக்கிறான் என்பதால் ஹுதபுக்.

(880) எங்கும் இருப்பதால், (ii) அல்லது, மூவுலகுக்கும் பிரபு வாதலால் விபு :.

(881) ரஸங்களை (கிரஹிக்கிறான்) வாங்கிக்கொள்கிறான் என்பதால் ரவி :; ஆதித்திய வடிவங் கொண்டவன். ["ரஸானுஞ்ச ததாதானுத் ரவிரித்யபிதியதே" என்பது விஷ்ணு தர்மோத்திரம்].

(882) வெவ்வேறு விதமான விருப்பத்தைக் கொள்கிறான் என்பதால் விரோசன :.

(883) "ஸூதே: ஸுவதேர்வா ஸூர்யஸப்தோ நிபாத்யதே, ராஜஸூய ஸூர்ய என்னும் பாணினி (ஸூ. 3, 1, 114) வசனப்படி, ஸூர்ய : [செல்வங்களைப் பிறப்பிக்கிறான், (ii) அல்லது, கொடுக்கிறான் என்பதால் ஸூர்ய :] என்னப்படுகிறான்.

(884) ஜகத் முழுவதையும் (பிரஸவிக்கிறான்) வெளிப்படுத்துகிறான் என்பதால் ஸவிதா ;

> ரஸானும் ச ததாதானுத் ரவிரித்யபிதீயதே |
> ப்ரஜானும் து ப்ரஸவனுத் ஸவிதேதி நிகத்யதே ||

என்பது விஷ்ணு தர்மோத்தரம்.

(885) இவனுக்கு ரவி (சூரியன்) லோசனம் கண் என்பதால் ரவிலோசன :; "அக்னிர் மூர்தா சக்ஷுஷீ சந்த்ரஸூர்யௌ" என்பது சுருதி (முண்டகோப. 3, 4).

**अनन्तो हुतभुग्भोक्ता सुखदो नैकजोऽग्रजः ।**
**अनिर्विण्णः सदामर्षी लोकाधिष्ठानमद्भुतः ॥ १०८ ॥**

108. அனந்தோ ஹுதபுக் போக்தா ஸுகதோ நைக
ஜோ'க்ரஜ :
அநிர்விண்ண : ஸதாமர்ஷீ லோகாதிஷ்டானமத்புத :

(886) எப்பொழுதும் இருப்பதாலும் எங்கும் வியாபித்திருப்பதாலும் தேசம் காலம் முதலிய அளவுபாடுகள் இல்லாமையாலும் அனந்த :; (ii) அல்லது, சேஷன் ஆவதாலும் [அனந்த:].

(887) ஹோமத்திலிடப்பட்டதைப் பாதுகாப்பதால் ஹுதபுக்.

(888) ப்ரக்ருதிம் புசித்தற்குரிய அசேதனப் பொருளைப் புசிக்கிறான் ; (ii) அல்லது, ஜகத்தைப் பாதுகாக்கிறான் என்பதால் போக்தா.

(889) (i) பக்தர்களுக்கு மோக்ஷம் என்னும் சுகத்தைக் கொடுக்கிறான் என்பதால் ஸுகத :.

(889) (ii) அல்லது, அஸுகம் துன்பத்தை த்யதி (வெட்டி) அழிக்கிறான் என்பதால் அஸுகத :.

(890) தருமத்தைக் காப்பதற்கு பல தடவைகள் பிறப்பதால் (அவதாரஞ் செய்வதால்) நைகஜ :.

(891) முதலில் தோன்றுவதால் அக்ரஜ :, ஹிரண்யகர்ப்பன் ; "ஹிரண்யகர்ப : ஸமவர்(த்)த தாக்ரே" என்பது முதலானவை சுருதி (தைத். ஸம். 4, 1, 8).

(892) எல்லா விருப்பங்களையும் பெற்றிருப்பதாலும் பெறுதிருப்பதற்குக் காரணம் இல்லையாதலாலும் இவனுக்கு நிர்வேதம் (துன்பம்) இல்லை என்பதால் அநிர்விண்ண:.

(893) ஸத: ஸாதுக்களுக்கு, அனுகூலனாகி ம்ருஷ்யதே அவர்கள் செய்யும் பிழைகளை பொறுத்துக் கொள்கிறான் என்பதால் ஸதாமர்ஷீ.

(894) வேறு ஆதாரம் ஒன்று மில்லாத அவனையே ஆதார மாகக் கொண்டு மூவுலகங்களும் நிலைநிற்பன என்பதால் லோகாதிஷ்டானம், பிரும்மம்.

(895) அற்புதமாயிருப்பதால் அத்புத:; "ஶ்ரவணாயாபி பஹுபிர் யோ ந லப்ய: ஶ்ருண்வந்தோ பஹவோ யம் ந வித்யு:, ஆஶ்சர்யோ வக்தா குஶலோ'ஸ்ய லப்தா ஆஶ்சர்யோ ஜ்ஞாதா குஶலானுஶிஷ்ட:" என்பது சுருதி (கடோப. 1, 2, 8); "ஆஶ்சர்யவத் பஶ்யதி கஶ்சிதேனம்" (கீதை. 2, 29) என்பது பகவத் வசனம்; (ii) அல்லது, ஸ்வரூபம் சக்தி தொழில் செயல் ஆகிய வற்றால் அற்புதம் தோன்ற இருப்பதால் அத்புத:.

सनात्सनातनतमः कपिलः कपिरव्ययः ।
स्वस्तिदः स्वस्तिकृत्स्वस्ति स्वस्तिभुक्स्वस्तिदक्षिणः ॥ १०९ ॥

109. ஸநாத்ஸநாதனதம: கபில : கபிரவ்யய :
ஸ்வஸ்தித : ஸ்வஸ்திக்ருத் ஸ்வஸ்தி ஸ்வஸ்திபுக் ஸ்வஸ்தி தக்ஷிண :

(896) ஸநாத் என்னும் (நிபாதச்) சொல் வெகு காலம் என்னும் பொருளைக் குறிப்பது; காலமும் பரமனுடைய ஒரு வகை விகற்பமாகும்.

பரஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் புருஷ: ப்ரதமம் த்விஜ |
வ்யக்தாவ்யக்தே ததைவான்யே ரூபே காலஸ்ததா பரம் ||

என்பது விஷ்ணு புராணம் (1, 2, 15).

(897) எல்லாப் பொருளுக்கும் காரணமானதால், பிரமன் முதலிய பண்டையோருக்கும் (ஸநாதனருக்கும்) முன்னேயுள்ள பண்டைப் பழம் பொருள் ஆதலால் ஸநாதனதம :.

(898) வடவானலத்திற்கு (வடவைத் தீயினுக்கு) மஞ்சள் நிறம் என்பதால், அந்த ரூபத்தை யுடையவன் கபில: [வடவைத் தீயாயிருப்பவன்].

(899) கம் ஜலத்தை, கிரணங்களால் பருகுவோன் கபி: சூரியன்; (ii) அல்லது கபி: வராகம், "கபிர் வராஹ: ச்ரேஷ்டச்ச" (மஹாபா. சாந்தி. 352, 24) என்னும் வசனத்தால்.

(900) பிரளய காலத்தில் ஜந்துக்கள் இவனிடத்திலே கலந்து லயிக்கின்றன என்பதால் அப்யய:.

இவ்வாறு பெயர்களின் ஒன்பதாவது நூறு விரித்துரை செய்யப்பட்டது.

(901) பக்தர்களுக்கு ஸ்வஸ்தி மங்களத்தைக் கொடுக்கிறான் என்பதால் ஸ்வஸ்தித:.

(902) அதையே (மங்களத்தையே) செய்கிறான் என்பதால் ஸ்வஸ்திக்ருத்.

(903) தன் பரமானந்த வடிவம் மங்கள ஸ்வரூபம் என்பதால் ஸ்வஸ்தி.

(904) அதையே (அந்த மங்களத்தையே) அனுபவிப்பதால் ஸ்வஸ்திபுக்; (ii) அல்லது, பக்தர்களுக்கு ஸ்வஸ்தி மங்களத்தைக் கொடுக்கிறான் என்பதால் ஸ்வஸ்திபுக்.

(905) ஸ்வஸ்தி மங்களமான வடிவு கொண்டு தக்ஷதே பெருமை பெறுகிறான்; (ii) அல்லது, மங்களத்தைக் கொடுக்குந் திறமையுடையவன் என்பதால் ஸ்வஸ்திதக்ஷிண:; (iii) அல்லது, 'தக்ஷிண' என்னும் சொல் 'சீக்கிரத்திலே செய்து முடிப்போன்' என்னும் பொருளுடையது; சீக்கிரத்தில் மங்களத்தைக் கொடுப்பதற்கு இவனே திறமையுள்ளவன்; இவனை ஸ்மரிப்பதாலேயே எல்லாப் பேறுகளும் பெறப்படுகின்றன.

ஸ்ம்ருதே ஸகலகல்யாணபாஜனம் யத்ர ஜாயதே |
புருஷஸ்தமஜம் நித்யம் வ்ராஜாமி சரணம் ஹரிம் ||
(விஷ்ணுபு. 5, 17, 17)

ஸ்மரணாதேவ க்ருஷ்ணஸ்ய பாபஸங்காதபஞ்சரம் |
சததா பேதமாயாதி கிரிர்வஜ்ரஹதோ யதா ||

என்பன முதலான வசனங்களைக் காண்க.

**अरौद्रः कुण्डली चक्री विक्रम्यूर्जितशासनः ।**
**शब्दातिगः शब्दसहः शिशिरः शर्वरीकरः ॥ ११० ॥**

110. அரௌத்ர : குண்டலீ சக்ரீ விக்ரம்யூர்ஜிதஶாஸன :
ஶப்தாதிக : ஶப்தஸஹ : ஶிஶிர : ஶர்வரீகர :

(906) செயலும் ரௌத்ரம் விருப்பும் ரௌத்ர : கோபமும் ரௌத்ர :, மூன்றும் ரௌத்திர மென்னப்படுவன. [அவாப்த ஸர்வ காமனாய்] விரும்பியவற்றையெல்லாம் பெற்றவனாய் வெறுப்பு விருப்பு முதலியன இல்லாதவனாதலால் இவனுக்கு இம் மூன்று ரௌத்திரமும் இல்லை என்பதால் அரௌத்ர :.

(907) (ஆதி) சேஷனுடைய வடிவத்தை கொண்டவனாத லால், (ii) அல்லது, சூரிய மண்டலம் போன்ற குண்டலங்களைப் பூண்டவன் என்பதால் ; (iii) அல்லது, ஸாங்கியம் யோகம் என்னும் இரண்டும் குண்டலங்களாக மகர வடிவிலே இவனுக்கு இருப்பதால் குண்டலீ.

(908) எல்லா வுலகங்களையும் ரக்ஷிப்பதற்காக மனஸ் தத் துவமாகிய ஸுதர்சனம் என்னும் சக்கிரத்தைத் தரித்துக் கொண்டிருப்பதால் சக்ரீ ;

சலஸ்வரூப மத்யந்தம் ஜவேனாந்தரிதானிலம் |
சக்ரஸ்வரூபம் ச மனோ தத்தே விஷ்ணு : கரே ஸ்திதம் ||

என்பது விஷ்ணு புராண வசனம் (1, 22, 71).

(909) விக்ரம : அடியெடுத்து வைத்தல், (ii) அல்லது, சூரத்தனம் ; இவை இரண்டும் எல்லாப் புருஷர்களைக் காட்டிலும் இவனிடத்தில் வேறாகச் சிறந்து விளங்குவன என்பதால் விக்ரமீ.

(910) சுருதி ஸ்மிருதி என்னும் உறுதியான கட்டளைகளை யுடையவன் ஊர்ஜிதஶாஸன :;

*ஶ்ருதிஸ்ம்ருதீ மமைவாஜ்ஞே யஸ்தே உல்லங்க்ய வர்(த்)ததே |*
*ஆஜ்ஞாச்சேதீ மம த்வேஷீ மத்பக்தோ'பி ந வைஷ்ணவ : ||*

*என்பது பகவத் வசனம்.*

(911) *சொற்களை பிரயோகிப்பதற்குக் காரணங்களாகிய பிறப்பு முதலிய குணங்கள் இவனுக்கு இல்லையாதலால், சொல்லாலே சொல்ல இயலாது என்பதால் ஶப்தாதிக:; "யதோ வாசோ நிவர்(த்)தந்தே அப்ராய்ய மனஸா ஸஹ"* (*தை. உப.* 2, 4) *என்றும், "ந ஶப்தகோசரே யஸ்ய யோகித்யேயம் பரம் பதம்"* (*விஷ்ணு பு.* 1, 17, 22). *என்றும் இவை முதலானவை சுருதி ஸ்மிருதிகளிலே காணப்படுவதால்.*

(912) *எல்லா வேதங்களும், உட்கருத்தாக, இவனையே சொல்கின்றன என்பதால் ஶப்தஸஹ :; "ஸர்வே வேதா யத் பதமாமனந்தி" என்பது சுருதி* (*கடோப.* 1, 2, 15); *"வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" என்பது ஸ்ம்ருதி* (*கீதை.* 15, 15)*யும்.*

(913) (*தாபத் திரயங்களால்*) *மூவகைத் தாபங்களால் வாடுவோர்க்கு களைப்பாறும் இடமாதலால் ஶிஶிர :.*

(914) *ஸம்ஸாரத்தில் உழலுவோருக்கு ஆத்மா இருள் போன்றதால் இரவு ஶர்வரீ; ஞானிகளுக்கோ ஸம்ஸாரம் இரவு ஆதலால் ஶர்வரீ. இருதிறத்தோர்க்கும் இரவை ஆக்குவோன் என்பதால் ஶர்வரீகர :* [*ஞானமில்லாதார் ஆத்மாவைக் காணாதவாறும் ஞானிகள் ஸம்ஸாரத்தைக் காணாதவாறும் செய்வோன்*];

*யா நிஶா ஸர்வபூதானாம் தஸ்யாம் ஜாகர்(த்)தி ஸம்யமீ |*
*யஸ்யாம் ஜாக்ரதி பூதானி ஸா நிஶா பஶ்யதோ முநே: ||* (*கீதை.* 2, 69)

**अक्रूरः पेशलो दक्षो दक्षिणः क्षमिणां वरः ।**
**विद्वत्तमो वीतभयः पुण्यश्रवणकीर्तनः ॥ १११ ॥**

111. **அக்ரூர : பேஶலோ தக்ஷோ தக்ஷிண : க்ஷமிணாம் வர :**
**வித்வத்தமோ வீதபய : புண்யஶ்ரவணகீர்(த்)தன ः**

(915) க்ரௌர்யம் என்னும் மனோநிலை கோபத்தாலுண்டாவதும் மிகுந்து பற்றுதலோடு கூடியதுமான உள்வெதுப்பு; விரும்பியவற்றையெல்லாம் பெற்று அவாப்த ஸமஸ்த காமனானதாலும், (இவன் பெறாத) காமமொன்றும் இல்லாமையாலும் கோபம் இல்லை; அதனால் இவனுக்கு குரூரத்தனமும் இல்லை என்பதால் அக்ரூர:.

(916) செய்கை மனம் வாக்கு மேனி இவற்றால் அழகுடையவன் என்பதால் பேசல:.

(917) பெரியோனாகவும் சக்திமானாகவும் விரைவிற் காரியங்களைச் செய்து முடிப்போனாகவும் இருப்பவன் தக்ஷ:; இவை மூன்றும் பரனிடத்தில் எப்பொழுதும் உள்ள குணங்கள் என்பதால் தக்ஷ:.

(918) 'தக்ஷிணை' என்னும் சொல்லுக்கும் தக்ஷன் என்பதே பொருள்; சொல் வேறுபடுவதால் புனருக்தி என்னும் தோஷம் இல்லை; (ii) அல்லது, தக்ஷதே போகிறான், அல்லது, அழிக்கிறான் என்பதால் தக்ஷிண: "தக்ஷகதிஹிம்ஸனயோ:" என்பது தாதுபாடம் [எங்குமுள்ளவன் என்றும் துஷ்டர்களை அழிப்பவன் என்றும் பொருள்].

(919) பொறுமையுடைய யோகிகளுக்கும் பூமி முதலியவற்றைப் பொறுப்போர்களுக்கும் மேலானவன் என்பதால் க்ஷமிணாம் வர:; "க்ஷமயா ப்ருதிவீஸம:" என்பது வால்மீகி வசனம் (பாலகா. 1, 18); (ii) அல்லது, பிரம்மாண்டம் முழுவதையும் தாங்குவோன்; (iii) அல்லது, பூமியைப்போல பாரத்தால் வருந்ாதவன் என்றே (iv) அல்லது, பூமியினும் சிறந்தவன் என்றே (கொள்க); (v) அல்லது, க்ஷமிண: சக்திமான்கள்; இவனே சர்வ சக்திமானாதலால், எல்லா வேலைகளையும் செய்து முடிக்குந் திறமையுள்ளவன் என்பதால் க்ஷமிணாம் வர:.

(920) உயர்வற உயர்ந்து எப்பொழுதும் எல்லாவற்றையும் அறிவதாயுள்ள ஞானம் இவனுக்கு உண்டு, மற்றோர்க்கு இல்லை என்பதால் வித்வத்தம:.

(921) வீதம் போக்கப்பட்ட பயம் ஸம்ஸாரம், அல்லது, ஸம்ஸார ஸம்பந்தம், இதை உடையவன் என்பதால் **வீதபய:**; இவன் எல்லோர்க்கும் ஈசுவரனும் நித்திய முக்தனு மாதலின்.

(922) இவனைப்பற்றிக் கேட்பதும் இவனைப் புகழ்வதும் புண்யம் புண்ணியத்தைத் தருவன என்பதால் **புண்யஶ்ரவண கீர்(த்)தன**ः; "ய இதம் ஶ்ருணுயாந்நித்யம் யஶ்சாபி பரிகீர்(த்)யேத், நாஶுபம் ப்ராப்னுயாத் கிஞ்சித் ஸோ'முத்ரேஹ ச மானவ:" (சு. 122) என்று கேட்பது முதலியவற்றிற்கு (கேட்பதற்கும் புகழ்வதற்கும்) பலனாகக் கூறப்பட்டதால்.

**उत्तारणो दुष्कृतिहा पुण्यो दुःस्वप्ननाशनः ।**
**वीरहा रक्षणः सन्तो जीवनः पर्यवस्थितः ॥ ११२ ॥**

112. உத்தாரணோ துஷ்க்ருதிஹா புண்யோ து:ஸ்வப்னநாஶன:
வீரஹா ரக்ஷண: ஸந்தோ ஜீவன: பர்யவஸ்தித :

(923) ஸம்ஸாரமாகிய ஸாகரத்திற்கு அக்கரையிலே கொண்டுபோய் விடுகிறான் என்பதால் **உத்தாரண** :.

(924) பாபங்களாகிய கெட்ட செய்கைகளை அழிக்கிறான் என்பதால் **துஷ்க்ருதிஹா**.

(925) ஸ்மரித்தல் முதலியவற்றைச் செய்வோர் அனைவருக்கும் புண்ணியத்தைத் தருகிறான் என்பதால் **புண்ய** :.

(926) தியானித்துத் துதித்துப் புகழ்ந்து பூஜிக்கப்பெற்றவனாகி, வரப்போகும் தீங்கிற்கு அறிகுறிகளான தீய கனவுகளை அழித்துவிடுகிறான் என்பதால் **து:ஸ்வப்னநாஶன** :.

(927) முக்தியளிப்பதால் ஸம்ஸாரத்திலே உழல்வோருடைய வேறுபட்ட (போக்குகளை) மார்க்கங்களை அழித்துவிடுகிறான் என்பதால் **வீரஹா**.

(928) ஸத்தவ குணத்தை மேற்கொண்டு மூன்று ஜகத்தையும் ரக்ஷிப்பதால் **ரக்ஷண** :; " நந்த்யாதித்வாகர்தரில்யு :" (என்பது இலக்கணக் குறிப்பு).

(929) நல்ல மார்க்கத்தில் இருப்பவர்கள் ஸந்த :; வித்யை வினயம் இவை விருத்தியாவதற்காக அவனே அவர்களுடைய வடிவாக இருக்கிறான் என்பதால் ஸந்த :.

(930) எல்லா உயிர்களையும் பிராணனாகி ஜீவிக்கச் செய்வதால் ஜீவன :.

(931) பரித : எங்கும் உலகம் முழுவதிலும் வியாபித்து நிலைத்து நிற்கிறான் என்பதால் பர்யவஸ்தித :.

अनन्तरूपोऽनन्तश्रीर्जितमन्युर्भयापहः ।
चतुरस्रो गभीरात्मा विदिशो व्यादिशो दिशः ॥ ११३ ॥

113. அனந்தரூபோ'னந்தஸ்ரீர் ஜிதமன்யுர் பயாபஹ :
சதுரஸ்ரோ கபீராத்மா விதிஸோ வ்யாதிஸோ திஸ :

(932) விசுவம் என்னும் பிரபஞ்ச ரூபனாகிய இவனுக்கு எண்ணமுடியாத பல ரூபங்கள் என்பதால் அனந்தரூப :.

(933) அனந்தா அளவிலடங்காத ஸ்ரீ : பராசக்தி, இவனுக்கு இருப்பதால் அனந்தஸ்ரீ :; "பராஸ்ய ஸக்திர் விவிதேவ ஸ்ரூயதே" என்பது சுருதி (ஸ்வேதா. 6, 8).

(934) மன்யு : கோபம், எவனால் செயிக்கப்பட்டதோ அவன் ஜிதமன்யு :.

(935) மனிதர்களுக்கு ஸம்ஸாரத்தாலுண்டான பயத்தைப் போக்குவதால் பயாபஹ :.

(936) நியாயத்தோடு கூடியவன் சதுரஸ்ர :, மனிதர்களுக்கு அவரவர்கள் செய்த கருமங்களுக்குத் தக்கவாறு பலனளிப்பதால்.

(937) இவனுடைய கம்பீரமான ஆத்மா ஸ்வரூபத்தை அல்லது சித்தத்தை அளவிட முடியாது என்பதால் கபீராத்மா.

(938) தகுதி யுடையோர்க்கு [அவ்வவர் தகுதிப்படி] வெவ்வேறு பலன்களைச் சிறப்பாகக் கொடுப்பதால் விதிஸ :

(939) இந்திரன் முதலானவர்களுக்கு வெவ்வேறான ஆக்ஞையைச் செய்வதால் வ்யாதிஶ:.

(940) எல்லா (யாக) காரியங்களுக்கும் வேத வடிவாகிப் பலன்களை யளிப்பதால் திஶ:.

अनादिर्भूर्भुवो लक्ष्मीः सुवीरो रुचिराङ्गदः ।
जननो जनजन्मादिर्भीमो भीमपराक्रमः ॥ ११४ ॥

114. அநாதிர் பூர்புவோ லக்ஷ்மீ: ஸுவீரோ ருசிராங்கத:
ஜனனோ ஜனஜன்மாதிர் பீமோ பீமபராக்ரம :

(941) எல்லாவற்றிற்கும் காரணப் பொருள் இவனாதலால் இவனுக்கு ஆதி: காரணப்பொருள் இல்லை என்பதால் அநாதி:.

(942-943) (i) பூ: ஆதாரம், புவ: எல்லாவுயிர்களுக்கும் புகலிடமாய் பிரஸித்தி பெற்ற பூமிக்கு; புவோ'பி (அந்த பூமிக்கும்) பூ: (ஆதாரம்) என்பதால் பூர்புவ:; [லக்ஷ்மீ: ஆத்ம வித்யை]; (ii) அல்லது, இவன் பூ: (பூமி) மட்டுமல்லன்; புவ: பூமிக்கு லக்ஷ்மீ: சோபை என்பதால் புவோலக்ஷ்மீ:; (iii) அல்லது, பூ: பூலோகம், புவ: புவர்லோகம்; லக்ஷ்மீ: ஆத்ம வித்யை; "ஆத்மவித்யா ச தேவி த்வம்" என்பது ஸ்ரீஸ்துதி. (iv) பூமிக்கும் அந்தரிக்ஷத்திற்கும் சோபை யாவதலால் பூர்புவோ லக்ஷ்மீ:.

[பூர்புவ:, லக்ஷ்மீ: என்றும், (ii) பூ:, புவோலக்ஷ்மீ: என்றும், (iii) பூ:, புவ:, லக்ஷ்மீ: என்றும், (iv) பூர்புவோலக்ஷ்மீ: என்றும் பிரித்துப் பொருள் கூறுகிறார்].

(944) அழகான பல வேறு ஈரா: நடைகளை யுடையவன் ஸுவீர:; (ii) அல்லது, பல படியாய் அழகாகத் தோன்றுகிறான் என்பதால் ஸுவீர:.

(945) ருசிரே மங்களகரமான அங்கதே இரண்டு தோள்வளைகளையுடையவன் என்பதால் ருசிராங்கத:.

(946) உயிர்களைப் படைப்பதால் ஜனன:; "ல்யுட்விதெள பஹுலக்ரஹணாத் கர்(த்)தரி ல்யுட் ப்ரத்ய: ப்ரயோக வசனாத்" (என்பது இலக்கணக் குறிப்பு).

(947) ஜனஸ்ய பிறவியுள்ளவனுடைய ஜன்ம பிறவி தஸ்ய அதற்கு ஆதி: மூலகாரணம் என்பதால் ஜனஜன்மாதி:.

(948) பயத்திற்குக் காரணமாதலால் பீம:; "பீமாதயோ பாதானே" என்பது நிபாதனம் (என்பது இலக்கணக் குறிப்பு). "மஹத் பயம் வஜ்ர முத்யதம்" என்பது சுருதி (கடோப. 6, 2).

(949) அசுரர் முதலானோர் பயப்படுவதற்குக் காரணமான பராக்கிரமம் அவதாரங்களிலே இவனுக்கு இருப்பதால் பீம பராக்ரம:.

**आधारनिलयोऽधाता पुष्पहासः प्रजागरः ।**
**ऊर्ध्वगः सत्पथाचारः प्राणदः प्रणवः पणः ॥ ११५ ॥**

115. ஆதாரநிலயோ'தாதா புஷ்பஹாஸ: ப்ரஜாகர:
ஊர்த்வக: ஸத்பதாசார: ப்ராணத: ப்ரணவ: பண:

(950) பூமி முதலிய ஐந்து பூதங்களுக்கும் ஆதாரங்களாயிருப்பவற்றிற்கு ஆதாரம் ஆவதால் ஆதாரநிலய:.

(951) தன் சக்தியால் தாங்குவோனாகிய இவனைத் தாங்குவோன் வேறொருவன் இல்லை என்பதால் அதாதா; "நத்ருதஸ்ச இதி ஸமாஸாந்த விதிரநித்ய: இதி கப்ப்ரத்யயாபாவ:" (என்பது இலக்கணக் குறிப்பு); (ii) அல்லது, ஸம்ஹார காலத்தில் எல்லா வுயிர்களையும் தயதி பருகுகிறான் என்பதால் தாதா; "தேட் பானே" என்பது தாது (இது இலக்கணக் குறிப்பு).

(952) மொக்கு வடிவிலே யிருக்கும் புஷ்பங்களை, மலர் போல, பிரபஞ்சமாக மலரச் செய்தோன் என்பதால் புஷ்பஹாஸ:.

(953) எப்பொழுதும் விழித்திருக்குந் தன்மையை யுடையவன் (நித்யப்ரபுத்தஸ்வரூபன்) ஆதலால் சிறப்பாக விழித்திருப்பவன் என்பதால் ப்ரஜாகர:.

(954) எல்லோர்க்கும் மேலே இருப்பதால் ஊர்த்வக:.

(955) நல்லோர் செய்கைகள் ஸத்பதா:, அவற்றை இவன் பின்பற்றுகிறான் என்பதால் ஸத்பதாசார:.

(956) பரிக்ஷித் முதலாகிய இறந்து பட்டவர்களையும் பிழைப்பித்தவனாதலால் ப்ராணத:.

(957) பிரணவம் என்பது பரமாத்மாவைக் குறிப்பதான 'ஓம்' என்னுஞ் சொல்; அதினின்றும் இவன் வேறுபட்டவன் அல்லன் என்று உபசாரமாக வழங்குவதால் ப்ரணவ:.

(958) பணதி: விவகரிக்கப்படுவதான பொருள்; அதைச் செய்வதால் பண:; "ஸர்வாணி ரூபாணி விசித்ய தீரோ நாமானி க்ருத்வாபிவதந் யதாஸ்யதே" என்பது சுருதி. (தை. உப. 1, 2, 7); (ii) அல்லது, எல்லாப் புண்ணிய கருமங்களும் பணம் (என்னப்படுவன); அதனை ஏற்றுக்கொண்டு, அதனை செய்து முடித்தவர்களுக்கு (அதிகாரிகளுக்கு) அதற்குரிய பலனை யளிக்கிறான் என்பதால், இலக்கணையால், பண:.

प्रमाणं प्राणनिलयः प्राणभृत्प्राणजीवनः ।
तत्त्वं तत्त्वविदेकात्मा जन्ममृत्युजरातिगः ॥ ११६ ॥

116. ப்ரமாணம் ப்ராணநிலய: ப்ராணப்ருத் ப்ராணஜீவன:
தத்த்வம் தத்த்வவிதேகாத்மா ஜன்மம்ருத்யுஜராதிக:

(959) ப்ரமிதி: தானே ஒளிர்வதான ஸம்வித் ஞானம், [அதுவே] ப்ரமாண:; "ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம" என்பது சுருதி (ஐத். உப. 3, 5, 3);

ஜ்ஞானஸ்வரூபமத்யந்த-நிர்மலம் பரமார்(த்)தத: |
தமேவார்(த்)தஸ்வரூபேண ப்ராந்திதர்ஶனத: ஸ்திதம் ||

என்பது விஷ்ணு புராணம் (1, 2, 6).

(960) **ப்ராண:** இந்திரியங்கள் எதற்கு (பரதந்திரமாகி) அடங்கியவையாகி, எங்கே (லயிப்பனவோ) ஒடுங்குவனவோ, அந்த ஜீவாத்மா; அல்லது, தேகத்தைத் தாங்கி நிற்கும் பிராணன் அபானன் முதலானவை எங்கே சென்றடைகின்றனவோ; அல்லது, உயிர்ப்பதால் பிராண: என்னப்படும் ஜீவன்; இவன் பரனாகிய புருஷனிடத்தில் சென்றடைவதால்; (ii) அல்லது, **ப்ராணன்** ஜீவர்களை ஸம்ஹாரஞ் செய்வதால் (ஒடுக்குவதால்) **ப்ராணநிலய:.**

(961) அன்னமாகி, பிராணன்களை போஷிப்பதால் **ப்ராணப்ருத்.**

(962) பிராணன்கள் என்று சொல்லப்பட்ட காற்றுகளால் பிராணிகளை உயிருள்ளனவாகச் செய்வதால் **ப்ராணஜீவன:;**

ந ப்ராணேன நாபானேன மர்த்யோ ஜீவதி கஶ்சன |
இதரேண து ஜீவந்தி யஸ்மின்னேதாவுபாஶ்ரிதௌ ||

என்பது மந்த்ரவர்ணம் (கடோப. 2, 2, 5).

(963) **தத்த்வம்** தத்யம், அம்ருதம், ஸத்யம், பரமார்(த்)தம், ஸதத்த்வம் என்னும் இவை பரமார்த்தப் பொருளான பிரும்மத்தைக் குறிப்பவையான ஒரு பொருளைக் கொண்ட சொற்கள்.

(964) **தத்த்வம்** ஸ்வரூபத்தை, உள்ளபடி அறிகிறான் என்பதால் **தத்த்வவித்.**

(965) ஒன்றான ஆத்மா என்பதால் **ஏகாத்மா;** "ஆத்மா வா இதமேக ஏவாக்ர ஆஸீத்" என்பது சுருதி (சாந். உப. 1, 1);

யச்சாப்னோதி யதாதத்தே யச்சாத்தி விஷயானிஹ |
யச்சாஸ்ய ஸந்ததோ பாவஸ் தஸ்மாதாத்மேதி கீயதே ||

என்பது ஸ்மிருதியும்.

(966) "ஜாயதே, அஸ்தி, வர்ததே, விபரிணமதே, அபக்ஷீயதே, நஶ்யதி" * என்னும் ஆறு தோற்ற வேறுபாடுகளையும்

* பிறத்தல், இருத்தல், வளர்தல், மாறுதல், குன்றுதல், அழிதல் என்று தோற்ற வேறுபாடுகள் ஆறு.

[பாவ விகாரங்களையும்] கடந்து செல்வோன் என்பதால் ஜன்ம ம்ருத்யுஜராதிக : ; "ந ஜாயதே ம்ரியதே வா விபஸ்சித்" என்பது மந்திரவர்ணம் (கடோப. 1, 2, 18).

भूर्भुवःस्वस्तरुस्तारः सविता प्रपितामहः ।
यज्ञो यज्ञपतिर्यज्वा यज्ञाङ्गो यज्ञवाहनः ॥ ११७ ॥

117. பூர்புவ : ஸ்வஸ்தருஸ்தார : ஸவிதா ப்ரபிதாமஹ :
யஜ்ஞோ யஜ்ஞபதிர் யஜ்வா யஜ்ஞாங்கோ யஜ்ஞவாஹன:

(967) பஹ்வ்ருச (ருக்வேத) வாக்கியங்கள், "பூ :, புவ :, ஸ்வ: என்னப்பட்ட மூன்று வியாஹ்ருதிகள் மூன்று வேதங்களின் ஸாரமாகிய கருப்பொருட்கள்" என்று கூறுகின்றன ; அவற்றால் ஹோமம் முதலிய செய்து, மூன்று ஜகத்துக்களையும் தாதி செயிக்கிறான், (ii) அல்லது, கடந்து செல்கிறான் என்பதால் பூர்புவ : ஸ்வஸ்தரு :;

அக்னௌ ப்ராஸ்தாஹுதி : ஸம்ய காதித்யமுபதிஷ்டதே |
ஆதித்யாஜ்ஜாயதே வ்ருஷ்டிர் வ்ருஷ்டேரன்னம் தத : ப்ரஜா : ||

என்பது மனு வசனம் (3, 76) ; (ii) அல்லது, பூ :, புவ :, ஸ்வ : என்னப்படும் மூன்று உலகங்களாகிய ஸம்ஸார விருக்ஷமாக இருப்பவன் பூர்புவ : ஸ்வஸ்தரு :; (iii) அல்லது, பூ :, புவ :, ஸ்வ : என்று சொல்லப்பட்ட மூவுலகங்களையும் மரம்போல வியாபித்து நிற்கிறான் என்பதால் பூர்புவ : ஸ்வஸ்தரு :.

(968) ஸம்ஸாரம் என்னும் ஸாகரத்தின் அக்கரைக்குக் கொண்டுபோய் விடுவதால் தார :.

(969) எல்லா உலகோர்க்கும் பிதா என்பதால் ஸவிதா.

(970) பிதாமஹனை பிரமனுக்கும் பிதா என்பதால் ப்ரபிதாமஹ :.

(971) சேர்ப்பிப்பவன் யஜ்ஞ :.

(972) யாகங்களை ரக்ஷிப்பவன், அல்லது, அவற்றிற்குத் தலைவன் யஜ்ஞபதி:; "அஹம் ஹி ஸர்வயஜ்ஞானாம் போக்தா ச ப்ரபுரேவ ச" என்பது பகவத் வசனம் (கீதை. 9, 24).

(973) யாகஞ் செய்வோனு யிருப்பதால் யஜ்வா.

(974) யாகங்களை அங்கங்களாக வுடையவன் என்பதால் வராகமூர்த்தி யஜ்ஞாங்க:.

*வேதபாதோ யூபதம்ஷ்ட்ர: க்ரதுஹஸ்தஶ்சிதீமுக: |*
*அக்னிஜிஹ்வோ தர்பரோமா ப்ரஹ்மஶீர்ஷோ மஹாதபா: ||*
*அஹோராத்ரேக்ஷணோ திவ்யோ வேதாங்கஶ்ருதிபூஷண: |*
*ஆஜ்யநாஸ: ஸ்ருவதுண்ட: ஸாமகோஷஸ்வனோ மஹான் ||*
*தர்மஸத்யமய: ஸ்ரீமான் க்ரமவிக்ரமஸத்க்ரிய: ||*
*ப்ராயஶ்சித்தநகோ கோர: பஶுஜானுர் மஹாபுஜ: ||*
*உத்காத்ரந்த்ரோ ஹோமலிங்க: பலபீஜமஹௌஷதி: |*
*பாஹ்யாந்தராத்மா மந்த்ரஸ்பிக் விக்ருத: ஸோமஶோணித: ||*
*வேதீஸ்கந்தோ ஹவிர்கந்தோ ஹவ்யகவ்யாதிவேகவான் |*
*ப்ராக்வம்ஶகாயோ த்யுதிமான் நாநாதீக்ஷாபி ரர்(ச்)சித: ||*
*தக்ஷிணாஹ்ருதயோ யோகீ மஹாஸத்ரமயோ மஹான் |*
*உபாகர்மோஷ்டருசக: ப்ரவர்க்யாவர்(த்)தபூஷண: ||*
*நாநாச்சந்தோகதிபதோ குஹ்யோபநிஷதாஸன: |*
*சாயாபத்னீஸஹாயோ வை மேருஶ்ருங்க இவோச்ச்ரித: ||*

என்பது ஹரி வம்சம்.

(975) பலனைத் தருவதற்குக் காரணங்களான யாகங்களை நடக்கும்படி செய்வோன் யஜ்ஞவாஹன:.

**यज्ञभृद्यज्ञकृद्यज्ञी यज्ञभुग्यज्ञसाधनः ।**
**यज्ञान्तकृद्यज्ञगुह्यमन्नमन्नाद एव च ॥ ११८ ॥**

118. யஜ்ஞப்ருத் யஜ்ஞக்ருத் யஜ்ஞீ யஜ்ஞபுக் யஜ்ஞஸாதன:
யஜ்ஞாந்தக்ருத் யஜ்ஞகுஹ்ய மன்னமன்னாத ஏவ ச

(976) *யாகத்தை ஏற்றுக்கொள்வோன், (ii) அல்லது, காப்போன் என்பதால்* யஜ்ஞப்ருத்.

(977) *ஜகத்தின் தொடக்கத்திலும் முடிவிலும் யாகஞ் செய்கிறான், (ii) அல்லது, (யாகத்தை) அழிக்கிறான், என்பதால்* யஜ்ஞக்ருத்.

(978) *அவனை ஆராதிப்பனவாகிய யாகங்களுக்கு சேஷியாய் (தலைவனாய், அல்லது, முழுப் பொருளாய்) இருப்பதால்* யஜ்ஞீ.

(979) *யாகத்தை அனுபவிக்கிறான், (ii) அல்லது, பாது காக்கிறான் என்பதால்* யஜ்ஞபுக்.

(980) *யாகங்கள் அவனை அடைவதற்கு ஸாதனங்கள் என்பதால்* யஜ்ஞஸாதன :.

(981) *யாகத்திற்குரிய* அந்தம் *பலனைப் பெறுமாறு செய்வோன் என்பதால்* யஜ்ஞாந்தக்ருத் ; *வைஷ்ணவமான ருக்கைச் சொல்லி, பூர்ணாஹுதியால் பூர்ணமாக்கி, யாகத்தை ஸமாப்தி செய்வதால் (முற்றுப்பெறச் செய்வதால்)* யஜ்ஞாந்தக்ருத்.

(982) *யாகங்களுள் குஹ்யம் முக்கியமானது ஞான யக்ஞம்; (ii) அல்லது, பலனைக் கருதாமல் செய்யும் யாகம்; இது அவனினும் வேறுபடாதது என்று (உபசரித்து) சிலாகித்துச் சொல்வதால்* பிரும்மம் யஜ்ஞகுஹ்யம்.

(983) *உண்ணப்படுவது, (ii) அல்லது, உயிர்களை உண்பது என்பதால்* அன்னம்.

(984) *அன்னத்தை உண்போன் என்பதால்* அன்னாத :; *ஜகத்து முழுமையும் அன்னம் முதலிய ரூபமாகி, போக்தாவும் (அனுபவிப்போனும்) போக்கியமும் (அனுபவிக்கப்படும் பொருளும்) தானே என்பதை விளக்கவே, 'ஏவ' என்னுஞ் சொல் வந்தது; 'ச' என்னுஞ் சொல் எல்லாப் பெயர்களும் ஒன்றுகிய ஒரே பரம புருஷனிடத்திலே அமைவன என்பதை விளக்குவதற்கு வந்தது.*

**आत्मयोनिः स्वयंजातो वैखानः सामगायनः ।**
**देवकीनन्दनः स्रष्टा क्षितीशः पापनाशनः ॥ ११९ ॥**

119. ஆத்மயோனி: ஸ்வயம்ஜாதோ வைகான: ஸாமகாயன:
தேவகீநந்தன: ஸ்ரஷ்டா க்ஷிதீஶ: பாபநாஶன:

(985) *ஆத்மாவே யோனி: ஆதான காரணம், வேறொன்றும் அன்று, என்பதால்* ஆத்மயோனி :.

(986) *நிமித்த காரணமும் அவனே என்று காட்டுவதற்காக* **ஸ்வயம்ஜாத :** *(என்ற பெயர் கூறுகிறார்); "ப்ரக்ருதிஶ்ச ப்ரதிஜ்ஞா த்ருஷ்டாந்தானுபரோதாத்" என்பதுபற்றி (ப்ரஹ். ஸூ. 1, 4, 23) இங்கும் இரண்டு காரணங்களும் ஹரியே என்பது ஸ்தாபிக்கப்பட்டது.*

(987) *சிறப்பாகத் தோண்டுவதால்* **வைகான :;** *வராகரூப மெடுத்து பூமியை நன்றாகத் தோண்டி, பாதாளத்தில் வசிக்கும் ஹிரண்யாக்ஷனைக் கொன்றான் என்பது புராணத்திலே (பிரசித்தம்) நன்கறிவிக்கப்பட்டது.*

(988) *ஸாமங்களைப் பாடுகிறான் என்பதால்* **ஸாமகாயன :**

(989) *தேவகியின் மகன்* **தேவகீநந்தன :;**

> *ஜ்யோதீம்ஷி ஶுக்ராணி ச யானி லோகே*
> *த்ரயோ லோகா லோகபாலாஸ்த்ரயீ ச ।*
> *த்ரயோக்னயஶ் சாஹுதயஶ் ச பஞ்ச*
> *ஸர்வே தேவா தேவகீபுத்ர ஏவ ॥*

*என்பது மஹாபாரதம் (அனுசா. 263, 31).*

(990) *எல்லா உலகத்தையும் [சிருஷ்டித்தவன்]* **ஸ்ரஷ்டா.**

(991) *க்ஷிதே : பூமியின், ஈஶ : ஈசன்* **க்ஷிதீஶ :,** *தசரத குமாரன்.*

(992) *புகழ்ந்து, பூஜித்து, தியானஞ் செய்து, நினைக்கப்பெற்றவனாகி, பாபக்குவியலை ஒழிக்கிறான் என்பதால்* **பாபநாஶன :;**

பக்ஷோபவாஸாத் யத் பாபம் புருஷஸ்ய ப்ரணஶ்யதி
ப்ராணாயாமஶதேனைவ தத்பாபம் நஶ்யதே ந்ருணாம்
ப்ராணாயாமஸஹஸ்ரேண யத்பாபம் நஶ்யதே ந்ருணாம்
க்ஷணமாத்ரேண தத்பாபம் ஹரேர் த்யானாத் ப்ரணஶ்யதி

என்று வ்ருத்த சாதாதப ஸ்ம்ருதியில் உள்ளது.

शङ्खभृन्नन्दकी चक्री शार्ङ्गधन्वा गदाधरः ।
रथाङ्गपाणिरक्षोभ्यः सर्वप्रहरणायुधः ॥ १२० ॥
सर्वप्रहरणायुधों नम इति ॥

120. ஶங்கப்ருந்நந்தகீ சக்ரீ ஶார்ங்கதன்வா கதாதர:
ரதாங்கபாணிரக்ஷோப்ய: ஸர்வப்ரஹரணாயுத :||
ஸர்வப்ரஹரணாயுதோம் நம இதி ||.

(993) பூதங்கள் முதலியனவும் அஹங்காரமும் ஆகிய பாஞ்சஜன்யம் என்னும் சங்கத்தை ஏந்துவதால் ஶங்கப்ருத்.

(994) வித்யையாகிய நந்தகம் என்னும் வாள் இவனுக்கு இருப்பதால் நந்தகீ.

(995) மனஸ் தத்துவமான ஸுதர்சனம் என்னும் சக்கிரத்தையுடையவன் என்பதால்; (ii) அல்லது, ஸம்ஸார சக்கிரம் இவனுடைய ஆக்ஞைப்படி சுழல்வதால் சக்ரீ.

(996) இந்திரியம் முதலியவைகளும் அஹங்காரமுமான சார்ங்கம் என்னும் வில்லையுடையவன் என்பதால் ஶார்ங்கதன்வா; 'தனுஷஶ்ச' இதி அனங்ஸமாஸாந்த: (என்பது இலக்கணக் குறிப்பு).

(997) புத்தி தத்துவமாகிய கௌமோதகி என்னும் கதையை [கையிலே] வைத்துக்கொண்டிருப்பதால் கதாதர :.

(998) ரதாங்கம் சக்கிரம் இவனுடைய கையிலே இருக்கிறது என்பதால் ரதாங்கபாணி :.

(999) அதனாலே (சக்கிரம் இவன் கையிலிருப்பதாலே) கலக்கமுறுத்த முடியாத தன்மையன் என்பதால் அக்ஷோப்ய :.

(1000) இவனுக்கு இத்தனை மட்டுமே ஆயுதங்கள் என்று நிச்சயிக்க முடியாது ஆயினும், எல்லா ப்ரஹரணங்களும் ஆயுதங்களும் இவனுடையவை என்பதால், ஸர்வப்ரஹரணாயுத:; ஆயுதமென்று பிரசித்தி பெறாத நகம் முதலியவைகளும் இவனுக்கு ஆயுதங்களாகின்றன என்றவாறு. முடிவிலே, ஸர்வப்ரஹரணாயுத: என்று சொன்னது, அவன் ஸத்ய ஸங்கல்பன் என்பதால் அவனுடைய ஸர்வேஶ்வரத்வத்தை (அவன் எல்லோருக்கும் இறைவன் என்பதை)க் காட்டுவதற்கே யாம்; "ஏஷ ஸர்வேஶ்வர:" என்பது சுருதி (மாண்டூ. உப. 6). இரண்டாவது முறை சொன்னது '(நூல்) முடிந்தது' என்பதை விளக்குவது. 'ஓம்' என்றதும் மங்களத்தை விரும்பியே.

ஓங்காரஶ்சாதஶப்தஶ்ச த்வாவேதௌ ப்ரஹ்மண: புரா |
கண்டம் பித்த்வா விநிர்யாதௌ தஸ்மாந் மாங்கலிகாவுபௌ ||

என்னும் வசனத்தால், (ஓம் என்பது மங்களத்தைத் தருவதாகும்).

முடிவாக, 'நம:' என்னும் சொல்லால் பரிசரணத்தை (அடிமைத் தொழிலை)ச் செய்தார்; "பூயிஷ்டாம் தே நம உக்திம் விதேம' என்பது மந்த்ரவர்ணம் (ஈசா. உப. 18);

தன்யம் ததேவ லக்னம் தந் நக்ஷத்ரம் ததேவ புண்யமஹ : |
கரணஸ்ய ச ஸா ஸித்திர் யத்ர ஹரி : ப்ராங் நமஸ்க்ரியதே ||

என்பதையும் (காண்க). 'ப்ராக் என்றது உபலக்ஷணமாய், முடிவிலும் நமஸ்காரம் செய்யவேண்டுவதைக் குறிப்பது' என்பதை சிஷ்டர்களின் (ஒழுக்கமுடையவர்களின்) வழக்கத்தால் (அறியலாம்). நமஸ்காரத்தின் பயன் முன்பே விளக்கப்பட்டது:

ஏகோ'பி க்ருஷ்ணே ஸுக்ருத: ப்ரணாமோ
தஶாஶ்வமேதாவப்ருதேன துல்ய : |
தஶாஶ்வமேதீ புனரேதி ஜன்ம
க்ருஷ்ணப்ரணாமீ ந புனர்பவாய ||

*அதஸீபுஷ்பஸங்காஶம் பீதவாஸஸமச்யுதம் |*
*யே நமஸ்யந்தி கோவிந்தம் ந தேஷாம் வித்யதே பயம் ||*
*லோகத்ரயாதிபதி மப்ரதிமப்ரபாவம்*
*ஈஷத் ப்ரணம்ய ஶிரஸா ப்ரபவிஷ்ணுமீஶம் |*
*ஜன்மாந்தரப்ரலயகல்பஸஹஸ்ரஜாதம்*
*ஆஶு ப்ரஶாந்திமுபயாதி நரஸ்ய பாபம் ||*

*இவ்வாறு பெயர்களில் பத்தாவது நூறு விரித்துரை செய்யப் பட்டது.*

**वनमाली गदी शार्ङ्गी शङ्खी चक्री च नन्दकी ।**
**श्रीमान्नारायणो विष्णुर्वासुदेवोऽभिरक्षतु ॥**

வனமாலீ கதீ ஶார்ங்கீ ஶங்கீ சக்ரீ ச நந்தகீ
ஸ்ரீமான் நாராயணோ விஷ்ணுர் வாஸுதேவோ'பிரக்ஷது.

வனமாலையைத் தரித்துவரும், கதை, சாரங்கம், சங்கு, சக்கிரம் நந்தகம் (என்னும் வாள்) இவற்றை யுடையவரும் லக்ஷ்மீதேவியோடு கூடிய வருமாகி, நாராயணர், விஷ்ணு, வாஸுதேவர் என்று சொல்லப்பட்டவர் காப்பாராக.

[இந்த சுலோகத்தைத் தொன்றுதொட்டு பாராயணக் கிரமத்தில் மூன்று தடவை சொல்வது வழக்கம்.]

**इतीदं कीर्तनीयस्य केशवस्य महात्मनः ।**
**नाम्नां सहस्रं दिव्यानामशेषेण प्रकीर्तितम् ॥ १२१ ॥**

121. இதீதம் கீர்(த்)தனீயஸ்ய கேஶவஸ்ய மஹாத்மன:
நாம்நாம் ஸஹஸ்ரம் திவ்யாநா மஶேஷேண ப்ரகீர்(த்)திதம்

*'இதீதம்' என்னும் இந்த சுலோகத்தால், 'ஆயிரம் பெயரும் குறைதல் கூடுதல் இல்லாமற் சொல்லப்பட்டது' என்று காட்டு கிறார்; திவ்யானாம் பிரகிருதி சம்பந்தமில்லாத, பெயர்களின் ஓராயிரம் புகழ்ந்துரைக்கப்பெற்றன என்று சொல்வதால், இன் னொரு வகையாலும் (சு. 125) எண்ணிக்கைக் குறிப்பு விளக்க முற்றது. தொடக்கத்தில் "கிம் ஜபன் முச்யதே ஜந்து:" என்று 'ஜபம்' என்னும் சொல்லை உபயோகித்ததால்,* கீர்(த்)தயேத்

என்னும் இதனாலும் மூவகைப்பட்ட ஜபம் குறிக்கப்பட்டது; உச்சம், உபாம்ஶு, மானஸம் என்று ஜபம் மூவகைப்பட்டது.

**य इदं शृणुयान्नित्यं यश्चापि परिकीर्तयेत् ।**
**नाशुभं प्राप्नुयात्किञ्चित्सोऽमुत्रेह च मानवः ॥ १२२ ॥**

122. ய இதம் ஶ்ருணுயாந் நித்யம் யஶ்சாபி பரிகீர்(த்)தயேத்
நாஶுபம் ப்ராப்னுயாத் கிஞ்சித் ஸோ'முத்ரேஹ ச மானவ:

[எவன் எப்பொழுதும் இதை (இந்த ஸ்தோத்திரத்தை) கேட்கிறானோ, எவன் (இதைக்கொண்டு) ஸ்துதி செய்கிறானோ, அந்த மனிதன் இங்கும் அங்கும் (மேலுலகத்திலும்) ஒரு சிறிதும் அமங்களத்தை அடையமாட்டான்].

'ய இதம் ஶ்ருணுயாத்' என்று தொடங்கும் சுலோகத்தின் பொருள் தெளிவு. மேல் உலகத்தை அடைந்தவனுக்கும், 'யயாதி நஹுஷன் முதலானவர்களைப்போல அமங்களத்தை அடைவது என்பது நேராது' என்று குறிப்பிடுவதற்கே 'அமுத்ர' என்று சொல்லப்பட்டது.

**वेदान्तगो ब्राह्मणः स्यात्क्षत्रियो विजयी भवेत् ।**
**वैश्यो धनसमृद्धः स्याच्छूद्रः सुखमवाप्नुयात् ॥ १२३ ॥**

123. வேதாந்தகோ ப்ராஹ்மண: ஸ்யாத் க்ஷத்ரியோ விஜயீ பவேத்
வைஶ்யோ தனஸம்ருத்த: ஸ்யாச்சூத்ர : ஸுகமவாப்னுயாத்

[(இதனை வாசிக்கும்) பிராம்மணன் உபநிஷத்துக்களிலே கூறப்பட்ட பிரும்மத்தை அறிந்தவன் ஆவான்; க்ஷத்திரியன் வெற்றிபெறுவோனாவான்; வைசியன் நிறைந்த செல்வத்தை யுடையவனாவான். (இதனைக் கேட்கும்) சூத்திரன் சுகத்தைப் பெறுவான்].

வேதாந்தானும் உபநிஷத்துக்களின், அர்(த்)தம் பொருள் பிரும்மம்; அதனை கச்சதி அறிகிறான் என்பதால் வேதாந்தக:; "கிம் ஜபன் முச்யதே ஜந்துர் ஜன்ம ஸம்ஸார பந்தனாத்"

(சு. 3) என்று சொன்னாராதலால், 'ஜபம் செய்வதால் நேராக முக்தியுண்டாகும்' என்று சந்தேகப்பட்டால், 'கர்மாவானது நேரடியாக முக்திக்குக் காரணமாகாது, ஞானத்தாலேதான் மோக்ஷம்' என்று (விடை கூறி) விளக்கவே, "வேதாந்தகோ ப்ராஹ்மண: ஸ்யாத்" என்று சொல்லப்பட்டது. கர்மாக்களுக்கோ அந்தக்கரணத்தை (மனதை) பரிசுத்தமாக்குவதின் மூலமாக மோக்ஷத்திற்குக் காரணமாகும் தன்மையே உண்டு.

கஷாயபக்தி : கர்மாணி ஜ்ஞானம் து பரமா கதி : |
கஷாயே கர்மபி : பக்வே ததோ ஜ்ஞானம் ப்ரவர்(த்)ததே ||
நித்யம் ஜ்ஞானம் ஸமாஸாத்ய நரோ பந்தாத் ப்ரமுச்யதே |
தர்மாத் ஸுகம் ச ஜ்ஞானம் ச ஜ்ஞானந் மோக்ஷோதி'கம்யதே ||
யோகின : கர்ம குர்வந்தி ஸங்கம் த்யக்த்வா'த்மஶுத்தயே |
(கீதை. 5, 11)
கர்மணா பத்யதே ஜந்துர் வித்யயைவ விமுச்யதே ||
தஸ்மாத் கர்ம ந குர்வந்தி யதய : பாரதர்ஶின : |
யதோக்தான்யபி கர்மாணி பரிஹாய த்விஜோத்தம : ||
(ப்ரஹ்மபு. 129, 7)
ஆத்மஜ்ஞானே ஶமே ச ஸ்யாத் வேதாப்யாஸே ச யத்னவான் ||
(மனுஸ். 12, 92

தபஸா கல்மஷம் ஹந்தி வித்யயாம்ருதமஶ்னுதே |

என்பதும்,

ஜ்ஞானமுத்பத்யதே பும்ஸாம் க்ஷயாத் பாபஸ்ய கர்மண : |
யதாதர்ஶதலப்ரக்யே பஶ்யத்யாத்மானமாத்மனி ||
(கருடபு. 1, 237, 6)

என்பதும் முதலான ஸ்ம்ருதிகளும், "தமேதம் வேதானுவசனேன ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஜ்ஞேன தானேன தபஸாநாஶகேன" (ப்ருஹ. உப. 4, 4, 22) என்பதும், "யேன கேனச யஜேதாபி வா தர்விஹோமேனானுபஹதமனா ஏவ பவதி" என்பதும் முதலான சுருதிகளும் ஞானத்தாலேயே மோக்ஷம் உண்டு (என்பன); "ஜ்ஞானாதேவ து கைவல்யம் ப்ராப்யதே தேன முச்யதே" என்றும், "ப்ரஹ்மவிதாப்னோதி பரம்" (தைத். உப.

2, 1) என்றும், "தரதி ஶோகமாத்மவித்" (சாங். உப. 7, 1, 3) என்றும், "ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி" (முண்டகோப. 3, 2, 9) என்றும், "ப்ரஹ்மைவ ஸன் ப்ரஹ்மாப்யேதி" (ப்ருஹ. உப. 4, 4, 6) என்றும், "தமேவ விதித்வாதிம்ருத்யுமேதி, நான்ய: பந்தா வித்யதே 'யநாய" (ஶ்வே. உப. 6, 15) என்றும், "ஆனந்தம் ப்ரஹ்மணோ வித்வான் ந பிபேதி குதஶ்சன" (தைத். உப. 2, 4) என்றும், "இஹசேதவேதீதத ஸத்யமஸ்தி ந சேதிஹாவேதீன் மஹதீ விநஷ்டி:" (கேனோப. 2, 5) என்றும்,

யதா சர்மவதாகாஶம் வேஷ்டயிஷ்யந்தி மானவா: |
ததா தேவமவிஜ்ஞாய து:கஸ்யாந்தோ பவிஷ்யதி ||

(ஶ்வே. உப. 6, 20) என்றும்,

ந கர்மணா ந ப்ரஜயா தனேன த்யாகேனைகே அம்ருதத்வமானஶு:

(கைவ. உப. 1, 3) என்றும்,

வேதாந்தவிஜ்ஞானஸுநிஶ்சிதார்(த்)தா:
ஸம்ந்யாஸயோகாத் யதய: ஶுத்தஸத்த்வா:
தே ப்ரஹ்மலோகே து பராந்தகாலே
பராம்ருதாத் பரிமுச்யந்தி ஸர்வே (கைவ. உப. 1, 4)

என்றும் இவை முதலான சுருதிகளும் (இப்படியே யுள்ளன); "ஶூத்ர: ஸுகமவாப்னுயாத்" என்றது சிரவணத்தால் மட்டுமே, ஜபயஜ்ஞத்தால் (ஜபஞ் செய்வதால்) அன்று (என்பதைக் குறிப்பது), "தஸ்மாச் சூத்ரோ யஜ்ஞே'னவக்லுப்த:" என்பது சுருதி யாதலின் (தைத். ஸம். 7, 1, 1, 6); "ஶ்ராவயேச் சதுரோ வர்ணான் க்ருத்வா ப்ராஹ்மண மக்ரத:" என்று மகாபாரதத்தில் (சாந்தி. 327, 49) சிரவணம் அனுமதிக்கப்பட்டுள்ளது. "ஸுகதி மியாச் ச்ரவணாச்ச ஶூத்ரயோனி:" என்று 'ஹரிவம்ச'த்தில் உள்ளது; எவனொருவன் ஶூத்ர: ஶ்ருணுயாத் (சூத்திரன் கேட்கிறானோ) அவன் சுகத்தைப் பெறுகிறான் என்று (சு. 122) மேற்கூறியதோடு கூட்டிக்கொள்வது; (மற்ற) மூன்று சாதியர்க்கும் (த்ரைவர்ணிகர்களுக்கும்) [பரி] கீர்(த்)தயேத் (ஸ்துதிக்கிறானோ) என்னும் வினைச் சொல்லோடு (கூட்டிக் கொள்வது).

**धर्मार्थी प्राप्नुयाद्धर्ममर्थार्थी चार्थमाप्नुयात् ।**
**कामानवाप्नुयात्कामी प्रजार्थी प्राप्नुयात्प्रजाम् ॥ १२४ ॥**

124. தர்மார்(த்)தீ ப்ராப்னுயாத் தர்ம மர்(த்)தார்(த்)தீ
சார்(த்) தமாப்னுயாத்
காமானவாப்னுயாத் காமீ ப்ரஜார்(த்)தீ சாப்னுயாத்
ப்ரஜாம்

*[தர்மத்தை விரும்புவோன் (தர்மத்தை முற்றுவித்து) தர்மத்தின் பலனை அடைவான்; செல்வத்தை வேண்டுவோன் செல்வத்தைப் பெறுவான்; இன்பங்களை நுகர விரும்புவோன் (விரும்பிய) இன்பங்களைப் பெறுவான்; ஸந்ததியை விரும்புவோன் ஸந்ததி யுடையவனுவான்].*

*ஆத்மாவோடு பொருந்திய மனதாலே (அதிஷ்டிக்கப்பட்ட) ஏவப்பட்ட கண் முதலிய இந்திரியங்களால் அவ்வவற்றிற்கு விஷயங்களானவற்றிலே அனுகூலமாக செய்யும் பிரவிர்த்தியே* காம:; ப்ரஜாயதே *(பிறக்கிறுன்) என்பதால்* ப்ரஜா *ஸந்ததி.*

*'பக்திமான்' என்று தொடங்கும் சுலோகங்களால், பக்திமாஞய், தூயோஞய், எப்பொழுதும் இவ்வாறு (ஈடுபட்டு) முயற்சி செய்வோஞய், ஏகாக்கிர சித்தத்தை யுடையவஞய் சிரத்தையோடு கூடியவஞய் விளங்கும் சிறந்த அதிகாரிக்கு (தகுதி யுடையவனுக்கு) உரிய சிறந்த பலனை விளங்கக் கூறுகிறுர்.*

**भक्तिमान्यः सदोत्थाय शुचिस्तद्गतमानसः ।**
**सहस्रं वासुदेवस्य नाम्नामेतत्प्रकीर्तयेत् ॥ १२५ ॥**

125. பக்திமான் ய: ஸதோத்தாய ஶுசிஸ் தத்கதமானஸ:
ஸஹஸ்ரம் வாஸுதேவஸ்ய நாம்னமேதத் ப்ரகீர்(த்)தயேத்

**यशः प्राप्नोति विपुलं याति प्राधान्यमेव च ।**
**अचलां श्रियमाप्नोति श्रेयः प्राप्नोत्यनुत्तमम् ॥ १२६ ॥**

126. யஶ: ப்ராப்னோதி விபுலம் யாதி ப்ரதான்யமேவ ச
அசலாம் ஶ்ரியமாப்னோதி ஶ்ரேய: ப்ராப்னோத்யனுத்தமம்

**न भयं क्वचिदाप्नोति वीर्यं तेजश्च विन्दति ।**
**भवत्यरोगो द्युतिमान्बलरूपगुणान्वितः ॥ १२७ ॥**

127. ந பயம் க்வசிதாப்னோதி வீர்யம் தேஜஶ்ச விந்ததி
பவத்யரோகோ த்யுதிமான் பலரூபகுணான்வித:

*[வாஸுதேவனிடத்திலே நிலைத்த சித்தத்தையுடையவனாய், பரிசுத்தனாய், பக்தியோடு எவனொருவன் எப்பொழுதும் இதிலேயே (இந்த ஸ்துதியிலேயே) ஈடுபட்டு முயற்சி செய்வோனாய், வாஸுதேவனுடைய இந்தப் பெயர்கள் ஆயிரத்தையுங்கொண்டு ஸ்துதி செய்கிறானோ, அவன் (எங்கும்) பரவுகின்ற புகழைப் பெறுகிறான்; (நல்லவர்களுக்குள்) தலைமை ஸ்தானத்தையும் பெறுகிறான்; நிலைநிற்பதான செல்வத்தையும் பெறுகிறான்; இதைக் காட்டிலும் சிறந்தது (வேறொன்றும்) இல்லை எண்ணுதற்குரிய ஶ்ரேஸ்ஸையும் (மங்களத்தையும்) பெறுகிறான். அவனுக்கு எங்கும் (யாதொரு) பயமும் உண்டாவதில்லை; தேஜஸ்ஸையும் வீரத்தையும் உடையவனாகிறான்; நோயற்றவனாயும் (த்யுதி) ஒளி யுடையவனாயும் தேகபலம், அழகு, குணம் இவற்றோடு விளங்குவோனாகவும் ஆகிறான்.]*

**रोगार्तो मुच्यते रोगाद्बद्धो मुच्येत बन्धनात् ।**
**भयान्मुच्येत भीतस्तु मुच्येतापन्न आपदः ॥ १२८ ॥**

128. ரோகார்(த்)தோ முச்யதே ரோகாத் பத்தோ முச்யேத பந்தனாத்
பயான் முச்யேத பீதஸ்து முச்யேதாபன்ன ஆபத:

[நோயாற் பீடிக்கப்பட்டவன் நோயினின்றும் விடுவிக்கப் படுகிறான்; (சிறை முதலிய) கட்டுகளில் அகப்பட்டவன் (அந்த) கட்டுகளினின்றும் விடுதலை பெறுகிறான்; பயங்கொண்டவன் பயப்படுவதினின்றும் விடுவிக்கப்படுகிறான்; (ஆபத்துக்களை) அடைந்தவன் (அந்த) ஆபத்துக்களினின்றும் விடுவிக்கப் படுகிறான்.]

**दुर्गाण्यतितरत्याशु पुरुषः पुरुषोत्तमम् ।**
**स्तुवन्नामसहस्रेण नित्यं भक्तिसमन्वितः ॥ १२९ ॥**

129. துர்காண்யதிதரத்யாஶு புருஷ: புருஷோத்தமம்
ஸ்துவந் நாமஸஹஸ்ரேண நித்யம் பக்திஸமன்வித:

[எப்போதும் பக்தியோடு கூடியவனாய் இருக்கும் மனிதன் ஆயிரம் பெயர்களாலே புருஷோத்தமனை ஸ்துதித்து (துர்க்கங்களான) கடப்பதற்கு அரியவைகளான இடையூறுகளை அதி சீக்கிரத்திலே கடந்து விடுகிறான்].

**वासुदेवाश्रयो मर्त्यो वासुदेवपरायणः ।**
**सर्वपापविशुद्धात्मा याति ब्रह्म सनातनम् ॥ १३० ॥**

130. வாஸுதேவாஶ்ரயோ மர்த்யோ வாஸுதேவபராயண:
ஸர்வபாபவிஶுத்தாத்மா யாதி ப்ரஹ்ம ஸநாதனம்

[வாஸுதேவனை (ஆஶ்ரயமாக) புகலிடமாகக் கொண்ட மனிதன் வாஸுதேவனையே பரமகதியாகக் கொண்டு, எல்லாப் பாவங்களினின்றுமே விடுபட்டுப் பரிசுத்தனாகி (ஸநாதனமான) என்றும் நிலைத்ததான பிரும்மத்தை அடைகிறான்].

**न वासुदेवभक्तानामशुभं विद्यते क्वचित् ।**
**जन्ममृत्युजराव्याधिभयं नैवोपजायते ॥ १३१ ॥**

131. ந வாஸுதேவபக்தனா மஶுபம் வித்யதே க்வசித்
ஜன்மம்ருத்யுஜராவ்யாதி பயம் நைவோபஜாயதே

[வாஸுதேவனுடைய பக்தர்களுக்கு எங்குமே அமங்களம் உண்டாவதில்லை. ஜனனம், மரணம், ஜரை, வியாதி இவற்றால் வருகின்ற பயமே (இவனுக்கு) நேரிடாது.]

**इमं स्तवमधीयानः श्रद्धाभक्तिसमन्वितः ।**
**युज्येतात्मसुखक्षान्तिश्रीधृतिस्मृतिकीर्तिभिः ॥ १३२ ॥**

132. இமம் ஸ்தவமதீயான : ஶ்ரத்தாபக்திஸமன்வித :
யுஜ்யேதாத்மஸுகக்ஷாந்தி ஸ்ரீத்ருதிஸ்ம்ருதிகீர்(த்)திபி :

[ஆஸ்திக புத்தியோடும் பக்தியோடும் கூடியவனாய் இந்த ஸ்தோத்திரத்தை ஓதுவோன் (படிப்போன்) ஆத்ம ஸுகம், பொறுமை, செல்வம், தைர்யம், நல்லுணர்ச்சி, புகழ் ஆகிய இவற்றோடு பொருந்தியவனாவான்].

ஶ்ரத்தா ஆஸ்திக புத்தி; பக்தி: பஜிப்பது என்பது பொருள்; ஆத்மாவுக்கு உரிய இன்பம் ஆத்மஸுகம்; அதனையும் க்ஷாந்தி (பொறுமை) முதலியவற்றையும் பெறுகிறான்.

**नक्रोधो न च मात्सर्यं नलोभो नाशुभा मतिः ।**
**भवन्ति कृतपुण्यानां भक्तानां पुरुषोत्तमे ॥ १३३ ॥**

133. நக்ரோதோ ந ச மாத்ஸர்யம் நலோபோ நாஶுபா மதி:
பவந்தி க்ருதபுண்யானாம் பக்தானாம் புருஷோத்தமே

[புருஷோத்தமனிடத்தில் பக்தி செய்யும் புண்ணியவான்களுக்கு கோபமின்மையும் லோப மின்மையும் அமங்கள புத்தியில்லாமையும் உண்டு, பொறாமை கிடையாது].

"நக்ரோத:, நலோப:, நாஶுபா மதி: இதி 'ஞகாரானுபந்தரஹிதேன நகாரேண ஸமஸ்தம் பதத்ரயம்" (என்பது இலக்கணக் குறிப்பு). 'க்ரோதம் முதலியவை இருக்கமாட்டா; மாத்ஸர்யமும் இராது' என்பது பொருள்.

**द्यौः सचन्द्रार्कनक्षत्रा खं दिशो भूर्महोदधिः ।**
**वासुदेवस्य वीर्येण विधृतानि महात्मनः ॥ १३४ ॥**

134. த்யௌ: ஸசந்த்ரார்(க்)கநக்ஷத்ரா கம் திஶோ பூர் மஹோததி:
வாஸுதேவஸ்ய வீர்யேண வித்ருதானி மஹாத்மன:

*[சந்திரன் சூரியன் நக்ஷத்திரங்கள் இவற்றோடு கூடிய வானமும் ஆகாசமும் திக்குகளும் பூமியும் சமுத்திரமும் (நிலை நிற்குமாறு) மஹாத்மாவாகிய வாஸுதேவருடைய வீர்யத்தாலே தாங்கப்பெற்றவை].*

**ससुरासुरगन्धर्वं सयक्षोरगराक्षसम् ।**
**जगद्वशेऽवर्ततेदं कृष्णस्य सचराचरम् ॥ १३५ ॥**

135. ஸஸுராஸுரகந்தர்வம் ஸயக்ஷோரகராக்ஷஸம்
ஜகத்வஶே'வர்(த்)ததேதம் க்ருஷ்ணஸ்ய ஸசராசரம்

*[தேவர்கள், அசுரர்கள், கந்தருவர்கள் இவர்களைக் கொண்டதும், இயக்கர்கள், உரகர்கள், ராக்ஷஸர்கள் இவர்களைக் கொண்டதுமாய் ஸ்தாவர ஜங்கமங்களான இந்த ஜகத்து (ஸச்சிதானந்த ஸ்வரூபரான) கிருஷ்ணருக்கு வசப்பட்டுள்ளது].*

**इन्द्रियाणि मनो बुद्धिः सत्त्वं तेजो बलं धृतिः ।**
**वासुदेवात्मकान्याहुः क्षेत्रं क्षेत्रज्ञ एव च ॥ १३६ ॥**

136. இந்த்ரியாணி மனோ புத்தி : ஸத்த்வம் தேஜோ பலம் த்ருதி:
வாஸுதேவாத்மகான்யாஹு: க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞ ஏவ ச

*[இந்திரியங்கள், மனம், புத்தி, இயல்பு, தேஜஸ், பலம், தைர்யம், இவையும் க்ஷேத்ரமும் (உடலும்) க்ஷேத்ரஜ்ஞனும் (ஜீவனும்) வாஸுதேவருக்கு உரியன (வாஸுதேவரை ஆத்மாவாக உடையன) என்று சொல்கிறார்கள்].*

14

